
Surf
AMAZING BLUE POWDER
FOR THE WHITEST WASH!
வீட்டுச் சலவையின்
பெருமை:
ஸர்ப் சலவையின்
அருமை

சோபகிருது, கார்த்திகை 15 ★ டிசம்பர் 1






விளக்கம் 65-ம் பக்கம் பார்க்க

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 23 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 18

# என்றும் வாழ்வார்!

மகத்தான சோகமும், இனம் தெரியாத பயங்கரமும் உலகைச் சூழ்ந்துவிட்டன.

இயேசுநாதரும், சோக்ரதரும், ஆபிரகாம் லிங்கனும், காந்தியடிகளும் அடைந்த முடிவை இளம் வயதிலேயே அடைந்து நம்மிடமிருந்து பிரிந்து விட்டார் அமெரிக்க ஜனாதிபதி கென்னடி அவர்கள்.

அமெரிக்க மக்களுக்கு அநுதாபம் தெரிவிக்கும் அதே சமயத்தில் நாமும் ஆறுதலைத் தேடித் தவிக்கிறோம். எங்கோ உள்ள ஒரு நாட்டின் தலைவர் மறைந்ததாக இன்று உலக நாடுகள் எண்ணவில்லை. தத்தம் நாட்டின் அருமைத் தலைவர் ஒருவர் மறைந்ததாகவே எல்லாத் தேசங்களும் துயருற்று நிற்கின்றன. இது வல்லரசான அமெரிக்கா உலகின் போக்கையே நிர்ணயிப்பதால் மட்டும் ஏற்பட்டுள்ள விளைவல்ல. தனிப்பட்ட முறையில் கென்னடி அவர்கள் பெற்றிருந்த சீரிய குண நலன்கள் அவரை உலகுக்கெல்லாம் உற்றவராக்கி யிருந்தன.

செல்வச் செழிப்புள்ள அமெரிக்காவினால் உலகம் முழுவதற்கும் பொருளாதாரத் துறையில் பேருதவி புரிய முடியும்; இந்த உதவிகளையெல்லாம் கென்னடி அவர்களின் ஆட்சியில் கண்டோம். இதைவிடப் பேருபகாரம் ஒன்றையும் அவர் செய்திருக்கிறார். அணு ஆயுதப் போட்டியினாலும் சோதனையினாலும் உலக நாடுகள் முழுவதையும் வல்லரசுகள் அச்ச வலையில் ஆழ்த்தியிருந்தன. அந்த அச்ச வலையிலிருந்து மனித குலத்தைப் பெருமளவுக்கு மீட்டு, உலக சுகாதாரத்துக்கும், இனி பிறக்கப்போகும் சந்ததிகளின் ஆரோக்கியத்துக்கும் நல்லுறுதியை ஏற்படுத்தித் தந்தார் கென்னடி. இத்துறையில் மேலும் பல நன்மைகளைக் கென்னடியின் ஆட்சியில் உலகம் எதிர்பார்த்து வந்த தருணத்தில் பேரிடியாக வந்துள்ளது அவரது மறைவுச் செய்தி. கென்னடி அவர்களின் நன்முயற்சியையும் மனிதாபிமானத்தையும் மக்கட்குலம் என்றும் மறவாது.

கென்னடி மனித 'அபிமானம்' கொண்டவர் என்று மட்டும் குறிப்பிட்டால் போதாது. தனி மனிதனின் உயர்வினை அறிந்து அதற்கு மதிப்பும் மரியாதையும் செலுத்த அறிந்திருந்தவர் அவர். புனிதக் கிரந்தங்களுடன் வைத்துப் போற்றத் தக்க அவரது பதவியேற்புச் சொற்பொழிவில், 'மக்கள் தங்கள் உரிமைகளை அரசாங்கத்தின் தயவில் பெறவில்லை. பிறக்கும்போதே, ஆண்டவன் கையிலிருந்து அவற்றைப் பெற்றிருக்கிறார்கள்' என்று கென்னடி கூறியது நம் நெஞ்சிலிருந்து என்றும் நீங்காது.

மனிதனை மதிக்கத் தெரிந்த இந்த உயரிய உணர்வு காரணமாகத்தான் அவர் அமெரிக்காவில் நீக்ரோக்களின் அந்தஸ்தை உயர்த்த அரும்பாடு பட்டார். ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமைக்காகக் காந்திஜி பிராணத் தியாகம் செய்ததுபோல் வெள்ளையர்-கறுப்பர் ஒற்றுமைக்காகவே கென்னடி தம் இன்னுயிரையும் அளித்துவிட்டார்.

கென்னடியின் உடலைத்தான் குண்டு சுட முடியும். உடலுக்குள்ளே உள்ள அவரது பொன்னான ஆத்மா இப்போது தியாகத் தீயில் புடமாகி மேலும் தேசு பெற்றுவிட்டது. சமாதானத்தையும், சமபாவத்தையும் போற்றுபவர்களுக்கெல்லாம் அந்த ஒளி என்றென்றும் வழிகாட்டும். 'வேள்வியில் வீழ்வதெல்லாம் வீரமும் புகழும் மிக்கு மூள்வதுண்டு உலகுக்கு' என்று மகாகவி பாடியதற்கேற்ப, அன்பு வேள்வியில் தம்மை ஆஹுதியாக்கிக் கொண்ட கென்னடி மீண்டும் உலகில் வீரமும் புகழும் மிகத் தோன்றி வழிகாட்டுவார்

# காரியத்தில்தான் குறை; கருவியில் அல்ல

**[நவம்பர் முப்பதாம் தேதி 'ஸ்வராஜ்யா' இதழில் ராஜாஜி எழுதியுள்ள கட்டுரையின் கருத்துக்களை இங்கு 'கல்கி' [வாசகர்களுடன் பகிர்ந்து கொள்கிறோம்]**

காரியத்தைச் செய்யத் தெரியாதவன் கருவிகளைக் குறை சொல்வது போல மூல அரசியல் சாஸனத்தில் குறை காண்கிறது காங்கிரஸ் சர்க்கார். நல்ல முறையில் அரசாங்கம் நடத்தவும் மக்களின் சுதந்திரத்தைக் காக்கவும் ஒரு சிறந்த சாதனமாக அரசியல் மூல சாஸனம் வகுக்கப்பட்டது. அரசாங்கம் நடத்தத் தெரியாத ஆட்சியாளர்களுக்கு அந்தக் கருவியை முறைப்படி உபயோகிக்கத் திறமை இல்லை. எனவே, தேச முன்னேற்றத்துக்கான உபாயம் என்று தாங்கள் எதை நினைக்கிறார்களோ அதற்கேற்ப மூல அரசியல் சாஸனத்தை மாற்றிக்கொண்டே இருக்கிறார்கள்.

மூல அரசியல் சாஸனம் வகுத்துத் தந்த ஆட்சியே வேண்டும் என்பதுதான் சுதந்திரக் கட்சியின் கொள்கை. சுதந்திரக் கட்சி உளுத்துப் போன பழைய கொள்கைகளைக் கட்டிக் காக்கும் 'கன்ஸர்வேடிவ்' கட்சி என்று சிலர் சொல்லுகிறார்கள். பழைமையில் உள்ள நல்ல அம்சங்களைக் காத்துத் தரும் கட்சி என்கிற முறையில் சுதந்திரக் கட்சியைக் 'கன்ஸர்வேடிவ்' என்று சொல்வதில் தவறில்லை. என்றாலும் வெளிநாட்டாருக்கு விளக்குவதற்காகச் சுதந்திரக் கட்சிக்குச் சரியான ஒரு பெயரிட வேண்டுமானால் ''மூலசாஸனக் கட்சி'' என்றே சொல்லலாம்.

மக்களின் சுதந்திரத்தை அழிக்காமலே தேசத்தை முன்னேற்ற முடியும் என்று அரசியல் சாஸனத்தை வகுத்தவர்கள் நம்பினார்கள். அதே நம்பிக்கையைக் கொண்டிருப்பதுதான் சுதந்திரக் கட்சி. மக்களின் சுதந்திரத்தை அழிப்பதன் மூலம் அரசியல் சாஸனத்தின் அடிப்படைக் கொள்கையைப் புறக்கணித்து விட்ட காங்கிரஸ் ஆட்சியினால் நாட்டில் தொழிலோ, விவசாயமோ முன்னேறவில்லை. பெர்மிட் — லைசென்ஸ் — கோட்டா என்கிற முள் வேலிக்குள் தேசத்தைச் சிறை வைத்து அதன் இயற்கையான வளர்ச்சியைத் தடுத்து விட்டது காங்கிரஸ் ஆட்சி. சலுகைகளும், அவற்றைக் கொண்டு ஏமாந்தவர்களைச் சுரண்டுவதுமே நடைமுறையாகி விட்டது. இன்று நாட்டில் ஏதேனும் முன்னேற்றம் இருக்குமானால் அதற்குக் காங்கிரஸின் பொருளாதாரக் கட்டுப்பாடு காரணமல்ல. இத்தனை கட்டுப்பாடு இருந்த போதிலும் மக்களின் ஒரு சிறிது உற்சாகத்தினால் எப்படியோ முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது என்றுதான் சொல்ல வேண்டும். இந்தியாவின் சரித்திரத்தில் என்றுமே இருந்திராத அளவுக்கு இன்று சர்க்காரின் பிசாசுப் பிடி இறுகி விட்டது. தனி மனிதர்கள் தம் செல்வங்களைப் பெருக்கிக் கொள்ள முடியாதபடி சர்க்கார் கட்டுப்பாடு பெரும் பூதமாக அமுக்கி வருகிறது. தனி மனிதர்கள் செல்வத்தை வளர்க்க ஆர்வம் கொள்ளாத போது அவர்களின் கூட்டுத் தொகையாகிய தேசத்தின் செல்வம் எப்படி வளரும்?

உழவர்களும், தொழிலாளர்களும், குத்தகைதாரர் போன்ற மத்தியஸ்தர்களும் முதலாளியின் கொடுமைக்கு ஆளாகி விடக் கூடாது என்பதிலும், அவர்கள் தக்க பாதுகாப்பு பெற்றிருக்க வேண்டும் என்பதிலும், சுதந்திரக் கட்சிக்கு உள்ள கருத்து வேறெந்தக் கட்சிக்கும் குறைவல்ல. சர்க்கார் தனது வரம்பு அறிந்து நாட்டு உற்பத்தியை மேற்பார்வையிட்டு எல்லாச் சாராருடைய நலன்களையும் காத்துத் தர வேண்டும் என்று சுதந்திரக் கட்சி கருதுகிறது. இன்று சர்க்கார் தொழில் துறையிலும், விவசாயத்திலும் மேற்பார்வை இடுவதோடு நில்லாமல் ஓயாமல் தலையிடுவதைத்தான் சுதந்திரக் கட்சி ஆட்சேபிக்கிறது. சர்க்கார் தானே தொழில் நடத்துவதையும் அது ஆட்சேபிக்கிறது. மூலதனம் வளராமல் அழிந்து போகும் அளவுக்கு வரி விதிப்பதால் நாட்டின் உற்பத்தி குறைந்து போகும் என்று சுதந்திரக் கட்சி கருதுகிறது. மக்கள் சுதந்திரம் பெற்று, தங்களது உழைப்பின் பயனையும் முதலீட்டின் பயனையும் பெற முடியும் என்ற நம்பிக்கையுடன் உழைக்கவும், பொருள் சேர்க்கவும் உதவினால் தான் நாடு முன்னேறும் என்று சுதந்திரக் கட்சி கருதுகிறது.

நமது விசாலமான தேசத்தின் சிக்கலான விவசாய வழக்கங்களைக் காங்கிரஸ் கட்சிக்காரர்கள் உணர வேண்டும் என்று சுதந்திரக் கட்சி வற்புறுத்துகிறது. இந்நாட்டில் பகுதிக்குப் பகுதி விவசாய முறைகளிலும், உபகரணங்களிலும் மாறுபாடுகள் உண்டு. இவற்றை அறியாத ஒரு கூட்டம் பொது மக்களின் பரஸ்பர வெறுப்புணர்ச்சியைத் தூண்டி

விட்டுத் தங்கள் கட்சிக்கு வலுத் தேடிக் கொள்ளும் நோக்கத்துடன் நாடு முழுவதையும் ஒரே மட்டமாக்கும் 'ரோடு—என்ஜின்' சட்டங்களை அமுலாக்கி வருகிறது. வசீகர ஆடை அணிந்து துவேஷத்தைக் கிளப்பிப் பரோபகார வேஷம் போடுகிற சர்க்கார் சர்வாதிபத்தியத்தைச் சுதந்திரக் கட்சி எதிர்க்கிறது.

சாகுபடியாளருக்கும், தொழிலாளருக்கும் காங்கிரஸ் கட்சி எந்தப் பாதுகாப்புக்களை அளிப்பதாகச்சொல்கிறதோ அந்தப் பாதுகாப்புக்களின் அவசியத்தை அரசியல் சாஸனகர்த்தர்களும் அறிந்தே இருந்தார்கள். மக்கள் சுதந்திரம் என்பது இல்லாத கம்யூனிஸ சித்தாந்தத்தைத் தழுவாமலே — யாருடைய ஜீவாதார சுதந்திர உரிமைகளையும் அழிக்காமலே— இந்தப் பாதுகாப்புக்களை அளிக்க முடியும் என்று கருதித்தான் அவர்கள் சாஸனத்தின் மூன்றாம் பிரிவை வகுத்து, அதற்கு முதல் ஸ்தானம் கொடுத்தார்கள். இந்தப் பிரிவின் ஷரத்துக்களை மீறாமலே நாட்டின் முன்னேற்றத்துக்கு வழி காண்பதற்காக நான்காம் பிரிவை வகுத்தார்கள். இப்போது நான்காம் பிரிவு கூறும் தேச சுபிட்சத்துக்காக மக்கள் சுதந்திரத்தைச் சிதைத்து, சாஸனத்தின் மூன்றாம் பிரிவை மாற்றுவது அதனை வகுத்தவர்களை அவமதிப்பதேயாகும். தங்களுக்கு ஆளத் தெரியாத தோஷத்தை அரசியல் சாஸனத்தின்மீது ஏற்றி, மூலதருமத்தை அழித்து வருகிறது காங்கிரஸ் சர்க்கார்.

மக்களின் சுதந்திரத்தைப் பறித்து சுபிட்சம் தேடலாம் என்ற காங்கிரஸ் கொள்கை கம்யூனிஸ சித்தாந்தத்தின் நகலேயாகும். மூலம் பொய்த்து விட்டதை நன்றாகக் கண்ட பின்னும் நகலை விட்டபாடாகக் காணோம். சுய ஈடுபாடு, நல்ல முறையில் பரஸ்பரம் போட்டியிட்டுப் பொருளை உற்பத்தி செய்வது— இந்த அம்சங்களைக் கொண்ட சுதந்திர முறையில் உள்ள ஊக்கத்துக்கு ஈடாகக் கம்யூனிஸத்தின் நிர்ப்பந்த முறையில் எதுவும் கிடையாது. மனித இயல்புகளுக்கு மாறாக உருவான பொருளாதார முறைகள் காலக்கிரமத்தில் நசித்துத்தான் போகும். கலையிலும், நுண்ணறிவுத் துறையிலும் ஈடுபட்டவர்களை இலட்சியப் பற்று ஓரளவுக்கு ஊக்கும். ஆனால் நடைமுறை உலக வாழ்வின் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளும் பொருளாதார உலகில் இலட்சிய வாதத்தால் பயன் விளையாது. தங்களது




பிரிவுத் துயர்

## ஊர் வம்பு

PK




முதலீட்டையும் உழைப்பையும் ஒட்டிச் சம்பாதிக்க வேண்டும், சாப்பிட வேண்டும், சேமிக்க வேண்டும் என்ற நியாயமான ஆசைகளின் மீதே பயிர்த் தொழில், கொத்து வேலை, நெசவுத் தொழில், முதலிய பல தொழில்களில் மக்கள் ஈடுபடுகிறார்கள். முதல் இல்லாத தொழிலாளிகளும் எதிர்காலத்தில் முதல் எடுக்கலாம், சொத்துச் சேர்த்துத் தங்களைக் காத்துக் கொள்ளலாம் என்ற ஆசையில் ஆர்வத்தோடு தொழில் செய்கிறார்கள். சொத்து சேர்க்கும் ஆசை போய் விட்டால் உழைப்பில் யாருக்கு ஊக்கம் இருக்கும்? உழைப்பு இல்லாத போது உற்பத்தி பெருகுவது எப்படி? சொத்தும் சுதந்திரமும் அழிந்து போய், சர்க்கார் ஒன்றே தனி முதலாளியானால் ஊக்கமின்மையும், அசிரத்தையும்தான் மிஞ்சும். அதிகார வர்க்கத்தைப் பெருக்கி, நிர்ப்பந்தங்களை வலுவாக்குவதால் செல்வம் பெருகாது. நிர்ப்பந்தங்களை எப்படி மீறித் தப்பலாம் என்பதிலேயே மக்களின் கவனம் செல்லும்.' மொத்தத்தில் உற்பத்தி குன்றிப் போகும்.

ஆனபடியால் தேசத்தில் பொருளாதார அபிவிருத்தி உண்டாக வேண்டுமானால் அரசியல் சாஸனம் தந்துள்ள சுதந்திரங்களையெல்லாம் மக்களுக்கு மறுபடி பெற்றுத் தர வேண்டும் என்று சுதந்திரக் கட்சி போராடுகிறது. இந்தப் போராட்டத்தில் எதிராளியான காங்கிரஸ் கட்சி மக்களின் வாழ்க்கையைத் தன் முழு வசமாக்கிக் கொண்டு அசுர சக்தியோடு இருப்பதைக் கண்டு சுதந்திர அபிமானிகள் 'நாம் வெற்றி பெற முடியுமா?' என்று ஐயம் கொள்கிறார்கள். இவர்களுக்கெல்லாம் கீதாசாரியனின் உபதேசத்தைத்தான் ராஜாஜி நினைவூட்டுகிறார்.

''செய்ய வேண்டியதைச் செய்வதே உன் அதிகாரம்; அதன் பலனில் உனக்கு அதிகாரம் இல்லை. பலனை நினைத்துக் கருமம் செய்யாதே; கருமமே வேண்டாம் என்று சோம்பியும் இராதே' என்றான் கண்ணன். அந்த வாக்கை உள்ளத்தில் இருத்தி, 'உண்மையே வெல்லும்' — சத்தியமேவ ஜயதே — என்ற துவஜ வாசகத்தில் நம்பிக்கையோடு போராட நம்மை அழைக்கிறார் தலைவர் ராஜாஜி.

புகைபிடிக்கும் இக்நேரம்

# புகை விடு தூது!

காரியத்துடன் ஒருவரை அவரது அலுவலகத்தில் காண நேரும்போது, உங்கள் வரவை அறிவிக்கப் பெரியதொரு புகைப்படலம் எழுப்பிக் காட்டவோ, வந்ததற்கு அறிகுறியாக கணக்கற்ற சிகரெட்டுத் துணுக்குகளையும் தீக்குச்சிகளையும் சிதறவிட்டுச் செல்லவோ தேவையே இல்லை.



உயரிய பண்போடு உபயோகிப்பதற்கும் உதவுவதற்கும் உகந்தது

**பனாமா**

Panama 20

CIGARETTES

இழுக்க இழுக்க இன்பம் இறுதிவரை

விசேஷக் கலவை செய்வோர்:
கோல்டன் டொபாக்கோ கம்., ப்ரைவேட் லிட்.
பம்பாய்-56.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT. 615 TAM. Greens' Advtg.

# கோர விபத்து

அதிர்ச்சிதரும் நிகழ்ச்சிகளையே இவ்வாரம் ஒன்றன் பின் ஒன்றாகக் கண்டு வருகிறோம். உயர் பதவி வகிக்கும் ராணுவ அதிகாரிகளான தௌலத் சிங், பிண்டோ, விக்ரம் சிங், நானாவதி, ஒபிராய் ஆகியோர் விமான விபத்தில் உயிர் துறந்தது நாட்டை ஒரு கலக்குக் கலக்கிவிட்டது.

இரண்டு ராணுவ அதிகாரிகளுக்கு மேல் ஒன்றாக விமானப் பயணம் செய்வதில்லை என்ற வழக்கத்தை மீறி இந்த ஐந்து மாவீரர்களும் ஒன்றாகச் சென்று உயிரை விட்டதை விதியின் சதி என்றில்லாமல் வேறெப்படி அழைப்பது?

இவர்கள் ஒவ்வொருவரும் நற்பணி புரிந்தவர்கள். இவர்களின் சேவையை இழக்க நாடு என்றுமே தயாராக இருக்கவில்லை. சீன அபாயம் சூழ்ந்துள்ள இச் சமயத்தில் இவர்கள் மரணமடைய நேர்ந்தது நாட்டின் துர்ப்பாக்கியம்.

கடமையை ஆற்றும்போது உயிர் துறந்து வீரசுவர்க்கம் புகுந்த அதிகாரிகளின் குடும்பங்களுக்கு நமது ஆழ்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# கல்கி நினைவு

பண்டைத் தமிழ் இலக்கியத்துக்கும் வளரும் தமிழுக்கும் அருந் தொண்டாற்றிய பேராசிரியர் கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் நினைவுக்குச் சென்னை பல்கலைக் கழகம் தக்க முறையில் கௌரவம் அளித்து அஞ்சலி செலுத்துகிறது என்பதை அறிந்து தமிழ் கூறும் நல்லுலகமெங்கிலுமுள்ள கல்கி அன்பர்கள் பெருமகிழ்ச்சியடைவார்கள்.

வருகிற டிசம்பர் 3, 4, 5 தேதிகளில் சென்னை பல்கலைக் கழக ஆதரவில் பேராசிரியர் கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி நினைவு இலக்கிய சொற்பொழிவுகளைப் பேராசிரியர் அ. சீநிவாச ராகவன் அவர்கள் ஆற்ற இருக்கிறார்கள். பேராசிரியர் அ. சீநிவாச ராகவன் அவர்கள் ஆங்கில இலக்கியப் புலமையும், தேர்ந்த தமிழ்ப் புலமையும் பெற்றவர்கள் என்பதைத் தமிழுலகம் நன்கு அறியும். பேராசிரியர் கல்கி அவர்களை நன்கு அறிந்த ஸ்ரீ சீநிவாச ராகவன் அவர்கள் முதல் நினைவுச் சொற்பொழிவு ஆற்ற இருப்பது மிகவும் பொருத்தமேயாகும். சென்னை பல்கலைக் கழக மண்டபத்தில் 'ஒரு நூற்றாண்டுத் தமிழ்க் கவிதை' என்னும் பொருள் பற்றி டிசம்பர் 3, 4, 5 தேதிகளில் மாலை 5-15 மணிக்குச் சொற்பொழிவு ஆற்றுகிறார். இந்நிகழ்ச்சியைச் சென்னை பல்கலைக்கழக உப அத்தியட்சகர் டாக்டர் ஏ. லட்சுமணஸ்வாமி முதலியார் அவர்கள் தொடங்கி வைப்பது மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும்.

## அடுத்த வாரக் கல்கி–
## ராஜாஜி இதழ்

அன்புத் தலைவர் ராஜாஜி அவர்களின் எண்பத்தியாறுவது ஜன்ம தினத்தை ஒட்டி வெளியாகும் டிஸம்பர் 8ஆம் தேதிக் கல்கி இதழ் பல சிறப்பு அம்சங்களை அளிக்கிறது.

உலகப் பெரும் தலைவரில் ஒருவர்
— பி. சிவராவ்

ஜனநாயக உணர்வின் உருவகம்
— கே. எம். முன்ஷி

மனிதாபிமானம் மிக்க மதியூகி
— ஜி. ராமச்சந்திரன்

கடவுளின் கையில் ஒரு கருவி
— ஆர். ஆர். திவாகர்

**விக்ஸி**லிருந்து இருமலை நிறுத்தும் புதிய கண்டுபிடிப்பு

# அடமுள்ள இருமலை நிறுத்துகிறது

இருமல் கட்டுப்பாடு கேந்திரத்தில் இருமல் ஆரம்பமாகும் இடத்தில் செயல் புரிகிறது.



நமைச்சலுக்குள்ளான இருமல் கட்டுப்பாடு கேந்திரம் உங்களை இருமச் செய்கிறது. இருமச் செய்கிறது — தொடர்ந்து இருமச் செய்கிறது.



விக்ஸ் பார்முலா 44 உங்கள் இருமல் கட்டுப்பாடு கேந்திரத்தை அமைதிப்படுத்துகிறது; இருமல் நிற்கிறது; நீங்கள் சுகமாகத் தூங்குகிறீர்கள்.

இருமல் உங்கள் தொண்டையில் மட்டும் இருப்பதல்ல. டாக்டர்களுக்குத் தெரியும். உண்மையில் 'இருமல் கட்டுப்பாடு கேந்திரத்தில்தான்' இருமலானது ஆரம்பமாகிறதென்று. தொண்டை அழற்சி, மார்புக்குழாய் அடைப்பு ஆகியவைகள் இருமல் கட்டுப்பாடு கேந்திரத்தைத் தூண்ட நீங்கள் இருமுகிறீர்கள். இருமுகிறீர்கள் அப்படித் தொடர்ந்து இருமுகிறீர்கள்.

விக்ஸ் பார்முலா 44-ல் உள்ள புதிய பிரத்யேகமான ''இருமல் சமனி'' நமைச்சலுக்குள்ளான உங்கள் இருமல் கட்டுப்பாடு கேந்திரத்தை அமைதிப்படுத்த, இருமல் நிற்கிறது. அடமுள்ள, அழற்சி மிக்க இருமலிலிருந்து விடுதலை பெற்ற நீங்கள் அமைதியான இரவை ஆனந்தமாக அனுபவிக்கிறீர்கள்.

அதே நேரத்தில் விக்ஸ் பார்முலா 44-ல் உள்ள, அறிவியல் முறைப்படி சேர்க்கப்பட்ட சக்திவாய்ந்த மருந்து அடமுள்ள இருமலிலிருந்து, உங்களுக்கு பூரண விடுதலை அளிக்க, உடலின் மூன்று முக்கிய பாகங்களில் செயல் புரிகிறது.

| | | |
|---|---|---|
| • உங்கள் மார்பில் செயல் புரிகிறது<br>விக்ஸ் பார்முலா 44-ல் உள்ள விசேஷ கட்டுப் பொருள் சுவாசக் குழாய்களில் ஆழ்ந்து வேலை செய்து வழியூட்டும் நெருக்கடைப்பை நீக்குகிறது. | • உங்கள் தொண்டையில் செயல் புரிகிறது<br>விக்ஸ் பார்முலா 44 இருமலினால் தொண்டையினுள் ஏற்படும் கிற வெடிப்புகளை வேகமாகக் குணப்படுத்துகிறது. தொண்டை அழற்சியை உடனடியாக நிறுத்துகிறது | • உங்கள் மூக்கில் செயல் புரிகிறது<br>விக்ஸ் பார்முலா 44 மூக்கடைப்பை குணப்படுத்துகிறது. உங்களை மறுபடியும் தாராளமாகச் சுவாசிக்கச் செய்கிறது. நீங்கள் இரவின் நித்திரைக்கு வேண்டிய ஆசுவாசமடைகிறீர்கள். |




## விக்ஸ் பார்முலா 44

காஃப் மிக்ஸர் இருமல் ஆரம்பமாகும் இடத்தில் வேலை செய்கிறது

# மற்றொரு இணையற்ற

## நேஷனல் எக்கோ ரேடியோ

### வனப்பு மிக்கது, சிக்கனமானது!

இதோ, நேஷனல்-எக்கோ கம்பெனியின் உன்னத ரேடியோக்களின் வரிசையில் ஏற்றமுள்ள ரேடியோ, புதிய மாடல் A-779! கண்ணைப் பறிக்கும் வனப்புக்கும், தெள்ளிய நாதத்துக்கும், சீரான உழைப்புக்கும் இதன் வகையில் ஒப்பற்ற ரேடியோ இது!

இன்றே உங்கள் அருகில் உள்ள நேஷனல்-எக்கோ வியாபாரியை அணுகி இலவசமாக இதன் இனிய நாதத்தைக் கேளுங்கள்!

**மாடல் A-779:** ஏஸி ரேடியோ. 6 வால்வுகள், 3 பாண்டுகள். பர்மனென்ட் மாக்னெட் எலிப்டிகல் ஸ்பீக்கர். அழகிய மூவர்ண டயல் கொண்ட வனப்புள்ள பெட்டி, பொன்னிற ஸ்டைலிங் பார் மற்றும் மாஜிக்-ஐ. தனியான டோன் கண்ட்ரோல், கிராமபோன் பிக்-அப் மற்றும் எக்ஸ்ட்ரா ஸ்பீக்கர் இணைக்க கனெக்ஷன்கள். "மான்ஸூனைஸ்" செய்தது

**ரூ. 395.00**

எக்ஸைஸ் ட்யூடி உள்பட; வரிகள் தனி




ஜெனரல் ரேடியோ & அப்ளையன்ஸஸ் லிமிடெட்
பம்பாய் . கல்கத்தா . மதராஸ் . டில்லி . பெங்களூர் . செகந்திராபாத் . பட்னா

**நேஷனல் எக்கோ** தரத்தையும் சிக்கனத்தையும் குறிக்கிறது!




## 34

இறைவனுடைய திருவருளைப் பெறுவதற்காகக் கடுமையான தவம் புரிகிறார்கள். மலையில் சென்று, நின்ற நிலையிலேயே தவம் செய்கிறார்கள் சிலர். பொய்கையிலே குளித்து நியமங்கள் அனுஷ்டிக்கிறார்கள் மற்றும் சிலர். பஞ்சாக்கினி மத்தியிலே நின்று கடுந்தவம் செய்வாரும் உண்டு. அதாவது நான்கு பக்கமும் நெருப்பு மூட்டிக் கொண்டு; தலையின்மேல் சூரிய வெப்பமுமாக நின்று தவம் செய்வதே இந்தக் கடுந்தவம். இத்தகைய உடல் வாதனைகள் ஒன்றுமே வேண்டாம், மிக எளிய மார்க்கம் ஒன்று இருக்கிறது என்கிறார் பேயாழ்வார்.

பொருப்பிடையே நின்றும்
புனல்குளித்தும் ஐந்து
நெருப்பிடையே நிற்கவும்நீர்
வேண்டா—

*[பொருப்பிடையே நின்றும் - வீடுவாசலைத் துறந்து மலையிலே சென்று நின்றும். புனல் குளித்தும் - பொய்கையிலே நீராடியும். ஐந்து நெருப்பிடையே - பஞ்சாக்கினி மத்தியிலே. நீர் நிற்கவும் வேண்டா - நீங்கள் நிற்க வேண்டிய அவசியம் இல்லை.]*

—விருப்புடைய
வெஃகாவே சேர்ந்தானை
மெய்ம்மலர் தூய்க் கைதொழுதால்
அஃகாவே தீவினைகள்
ஆய்ந்து

*[விருப்புடைய - மனத்துக்கு உகப்பான. வெஃகாவே சேர்ந்தானை - திருவெஃகாவில் எழுந்தருளியுள்ள விஷ்ணுமூர்த்தியை. மெய்ம் மலர் தூய் - பக்தியோடு ஏதேனும் ஒரு மலரைத் தூவி. கைதொழுதால் - அஞ்சலி செய்தால். தீவினைகள்-பாவங்கள். ஆய்ந்து- இந்தப் பக்திக்கு மத்தியில் தங்களுக்கு இருக்க இடமில்லை என்று கண்டு. அஃகாவே-நீங்கிவிட மாட்டாவோ; நீங்கிவிடும்.]*

பாவங்களை நீக்கிக் கொள்வதற்குச் சாஸ்திரங்களில் சொல்லியுள்ள கடுமையான தவங்களைச் செய்து உடலை வருத்துவது இல்லாமலே எளிய முறையான பக்தி மார்க்கம் இருக்கிறது. அதைப் பின்பற்றுங்கள் என்கிறார். வெஃகாவிலுள்ள விஷ்ணுமூர்த்தியை வழிபட்டால் போதும். வினைகள் நீங்கிவிடும் என்கிறார் ஆழ்வார்.

பொருப்பிடையே நின்றும்
புனல்குளித்தும் ஐந்து
நெருப்பிடையே நிற்கவும்நீர்
வேண்டா — விருப்புடைய
வெஃகாவே சேர்ந்தானை
மெய்ம்மலர் தூய்க் கைதொழுதால்
அஃகாவே தீவினைகள்
ஆய்ந்து!










# குண்டு மல்லிகை

அரு. ராமநாதன்

## அத்தியாயம் இருபத்தொன்று

## அன்பின் தொல்லை!

"உமா! என் காதலி யார் தெரியுமா?" என்று டாக்டர் ஜகந்நாதன் அவளைக் கூர்ந்து பார்த்துக்கொண்டே கேட்டார்.

உமாவின் அழகிய விழிகள் அமைதியின்றிச் சரிந்தனவே தவிர அவளுடைய அதரங்களிலிருந்து பதில் வரவில்லை.

ஜகந்நாதன் அதை வெகுவாக ரசித்து மென்னகை புரிந்து விட்டுக் கூறலானார்.

"உமா, நான் எதிலும் பற்றற்றவனாய், எந்தவிதத் தளைகளுக்கும் பிடி கொடுக்காதவனாய், எத்தனையோ பெண்களின் எத்தனையோ விதமான ஆசை வலைகளுக்கு இடம் கொடுக்காமல், வாழ்க்கையை விளையாட்டாகக் கருதி நடத்திக் கொண்டும் சுதந்திர புருஷனாகத் திரிந்துகொண்டும் இருந்தேன். அந்நாட்களில் நான் சிங்கப்பூரில் தங்கியிருந்த சமயம் மல்லிகா என்ற பெண்ணொருத்தி மட்டும் என் வாழ்க்கையில் குறுக்கிட்டு, எப்படியோ என் உயிர்க் காதலியாக உருவெடுத்தாள். அவள் அழகாகவும், நல்ல சதைப் பிடிப்பாகக் குண்டாகவும் இருப்பாள். அதனால் அவளை நான் குண்டுமல்லிகை என்று பரிகாசமாகக் கூப்பிடுவதும் உண்டு. அவளும் கொழுகொம்பைச் சுற்றிப் பின்னிக்கொள்ளும் பூங்கொடி போலவே பொங்கிப் படர்ந்து குதூகலப்படுவாள். அவள் என்மீது வேறு யாருமே வைத்திராத அளவு மதிப்பும் அன்பும் கொண்டிருந்தாள். என்னை ஒரு நிமிஷம் கூடப் பிரிந்திருக்க அவள் சம்மதிக்க மாட்டாள். என் விழிகள் அவளை விட்டு ஒரு விநாடிகூட இலேசாகத் திரும்புவதையும் விரும்ப மாட்டாள். அத்தகைய அளவு கடந்த அவளுடைய காதலை ஒருவித ஆசைப் பித்து என்றோ, பைத்தியக்காரத்தனம் என்றோ, குழந்தைத்தனம் என்றோகூடச் சொல்லலாம்! ஆமாம்... அவள் குழந்தை போலவே என்னிடம் கொஞ்சிக் கொஞ்சிப் பேசுவாள். பழகுவாள்; சிரிப்பாள். சில சமயங்களில் குழந்தை போலவே சிறு சிறு விஷயங்களுக்குக் கூடச் சிணுங்குவாள்; அடமும் பிடிப்பாள்; அழவும் செய்வாள்; பெரிதாகச் சண்டையும் போடுவாள். எனக்கோ அவையெல்லாம் வேடிக்கையாக இருக்கும். குழந்தையைக் கிள்ளி விடுவதைப் போல் அவளை அழ வைத்து வேடிக்கை பார்ப்பதுகூட எனக்கு உற்சாகமாக இருக்கும். ஆனால் சில சமயங்களில் அவளுடைய குழந்தைத்தனமான கொஞ்சுதல்களும், பிடிவாதங்களுமே எனக்குச் சங்கடமாகவும், பெரும் தலைவலியாகவும் மாறி விடுவதும் உண்டு. இருதய

மில்லாத யந்திர மனிதனை என்னிடம் அவள் தன் உணர்ச்சிகளைக் கொண்டு ஒரு புதிய இருதயத்தைச் சிருஷ்டி செய்ய முயன்றாள். அதற்காக அவள் தன்னையே பணயம் வைக்கவும், பலியிடவும் கூடத் தயாராக இருந்தாள். அதனால்தான் எனக்கும் அவளிடம் ஒரு சுவாரசியம் பிறந்திருந்தது. நாங்கள் இருவரும் நிரந்தரத் தம்பதிகளாகக் கூட ஆகி யிருப்போம்.' ஆனால்....''

''ஆனால் என்ன டாக்டர்?''

''எதையும் ஊடுருவி ஆராய்ந்து தராசு முனையில் சீர்தூக்கிப் பார்க்கும் என் பகுத்தறிவு அத்தகைய நிரந்தரப் பிணைப்புக்கு இடம் கொடுக்க மறுத்தது. உணர்ச்சி மோதல்களால் எதிர்காலத்தில் ஏற்படக் கூடிய விளைவுகளையெல்லாம் எண்ணிப் பார்த்துத் தயங்கியது. மல்லிகாவோ உணர்ச்சிகளுக்கு உறைவிடம். சிறு சிறு உணர்ச்சிகளைக் கூட ஆழ்ந்த அர்த்தமுள்ளதாகக் கருதி, அவஸ்தையோ ஆனந்தமோ படுவாள். நானோ உணர்ச்சிகளோடு ஒட்டாமல் அவற்றை வெறும் கதாபாத்திரங்களின் நாடக ரசமாகக் கருதி வேடிக்கை பார்ப்பவன். எத்தகைய ஆழ்ந்த உணர்ச்சிகளையும் கூட அர்த்தமற்றதாக்கிவிடக் கூடியவன். மேலும் மல்லிகாவுக்கு என் மீது எவ்வளவுக்கெவ்வளவு அன்பும், ஆசா பாசங்களும் பெருகினவோ, அவ்வளவுக்கவ்வளவு பொறாமையும் அசட்டுத்தனங்களும் பெருகின. அவள் ஒருத்தியைத் தவிர நான் வேறு எந்தப் பெண்ணோடும் பழகக் கூடாது, பேசக் கூடாது, கண்ணால் இலேசாகப் பார்க்கவும் கூடாது என்றெல்லாம் தவித்துப் பிணக்குகள் செய்வாள். நானோ ஒரு டாக்டர்! ஓர் எழுத்தாளன்! என்னிடம் எத்தனையோ விதமான பெண் நோயாளிகளும் ரசிகைகளும் வருவார்கள். மல்லிகா சண்டை பிடித்தோ, முகம் சிணுங்கியோ, எனக்குத் தர்ம சங்கடங்களை உண்டாக்கியோ, அப் பெண்களை யெல்லாம் எப்படியாவது விரட்டியடித்து விட முயல்வாள். என்னையும் வார்த்தைகளாலும், அழுகை விம்மல்களாலும் ரம்பம் போல் அறுப்பாள். அவளைச் சமாதானப்படுத்துவது எனக்குப் பெரும்பாடாகி விடும். அடம் பிடித்து அழுகிற குழந்தைகளுக்குக் கிலுகிலுப்பைப் பொம்மைகளை வேடிக்கை காட்டுவது போன்ற வித்தைகளை யெல்லாம் நான் கையாண்டாலும் அவள் எகிறி நிற்பாள். 'உங்களுக்கு நான் எதற்கு? எவளாவது சனியன் பிடித்த சரஸாவோ வனஜாவோ தலைவலியென்று வருவாள். அவள் தலையைப் பிடித்துக்கொண்டிருங்கோ!' என்பாள்! நான் தப்பித் தவறி எவளாவது ஒரு பெண்ணைப் பற்றிப் பேசி விட்டால் போதும்! அதைப் பெரிதாக நினைத்து முறைப்பாள், முரண்டு பிடிப்பாள், முனகிக் கொண்டே யிருப்பாள். என்மீது வேறு பெண் வாடையே படக்கூடாது என்பது மட்டுமல்ல, ஆண்களாகிய நோயாளிகள், நண்பர்கள், சீடர்கள், ரசிகர்கள் முதலானவர்களில் கூட யார் மீதாவது நான் அன்போ, அக்கறையோ கொண்டு விடக் கூடாது என்று துடிப்பாள். அவளைத் தவிர எனக்கு வேறு உலகமோ, சுவாரசியமோ, சிந்தனையோ, ரசனையோ அக்கறையோ இருக்கக் கூடாது. எந்த நேரமும் அவளிடமே, அவள் நினைவாகவே ஒன்றி யிருக்க வேண்டும் என்றெல்லாம் நினைத்து அவள் ஏங்கித் தவிப்பாள். நான் யாராவது ஒரு நண்பரோடு சற்று அதிகமாகச் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தாலோ, யாராவது ஒரு நோயாளியைக் குணப்படுத்த நான் அதிக அக்கறை கொண்டு அரும்பாடு பட்டாலோ அவளுக்குக் கோபம் கொந்தளித்துவிடும்! அதன் பிறகு அவளிடம் நான் பேசச் சென்றால், 'என்னிடம் எதற்காக வருகிறீர்கள்? தெருவிலே போகிற குழந்தையை எடுத்துக் கொஞ்சிக் கொண்டிருங்கள்! எவனாவது நண்பனோ, நோயாளியோ வந்து விழுவார்கள். அவர்களோடு குலாவுங்கள்!' என்று குமுறுவாள். அவளைத் தவிர வேறு எந்த ஜீவன் மீதும் நான் கவனம் வைக்கக் கூடாது என்பது மட்டுமல்ல, ஜீவனற்ற பொருள்களான புஸ்தகங்கள் முதலானவற்றின் மீதும் நான் சுவாரசியம் கொண்டுவிடக் கூடாது என்று துளைப்பாள். ஏதாவது செடி கொடிகளின் அழகையோ, பூக்களின் வாசனையையோ, புத்தக விஷயங்களையோ நான் சற்று அதிகமாக ரசித்துவிட்டால் போதும்; அவளுக்குப் பொறுக்காது! அவற்றை யெல்லாம் என் கையிலிருந்து , பிடுங்கி எறிந்து விடுவாள். 'உங்களுக்கு என்னை விடப் பூக்களும், புத்தகங்களும், வியாதிகளும்தான் பெரிதாகப் போய்விட்டதாக்கும்? நான் ஒருத்தி இருப்பது உங்கள் கண்களுக்குத் தெரியவில்லையா?' என்று குறை கூறிப் புலம்புவாள். அவள் மீது எனக்கு ஆசையை ஊட்டுவதற்காகப் பெண்களுக்கே இயல்

பான பிணக்கு வித்தைகளையெல்லாம் காட்டுவாள். அவனுக்காகத் தன்னையே சித்திரவதை செய்துகொள்ளவும், தற்கொலை செய்துகொள்ளவும் கூடத் தயாராக இருப்பாள்!'' என்று கூறி நிறுத்திய டாக்டர் ஜகந்நாதன் ஒரு பெருமூச்சு விட்டு விட்டு, ''அந்த மல்லிகா ஒரு விசித்திரமான பெண்! அவளுடைய போக்கெல்லாம் உனக்கு வேடிக்கையாகத் தோன்றுகிறதில்லையா, உமா? அவளைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?'' என்று மெல்லக் கேட்டார்.

அவரை உமா ஒருமுறை ஏறிட்டுப் பார்த்து விட்டு, ''அந்தப் பெண் குழந்தையுள்ளம் படைத்தவள்! உங்கள் மீது எல்லையில்லாத அன்பு வைத்திருக்கிறாள்!'' என்றாள் அனுதாபத்தோடு.

''அது உண்மைதான் உமா! ஆனால் எல்லை யில்லாத அன்பே சில சமயங்களில் அபாரத் தொல்லையாகி விடும். அவளுடைய குழந்தைத் தனத்தைக் கண்டுதான் அவளிடம் எனக்கு ஒரு சுவாரஸ்யம் பிறந்ததென்றாலும் அதன் அசட்டுத்தனமான ஆவலாதிகளும், பிடிவாதங்களும், அழுகை ஓலங்களும் அலுப்பூட்டிவிடும் இல்லையா? அதிலும் என்னைப் போன்ற ஒருவனுக்கு!.... காதல் கதைகள் படிக்கும் பருவப் பையனாக இருந்தால் அத்தகைய அபாரமான காதலை அரும் பெரும் பொக்கிஷம் எனப் பிதற்றித் தன்னையும் அவளுக்கேற்ற அசடாக்கிக்கொள்வான். நானோ அறிவு வளர்ச்சி பெற்றவன். மல் யுத்த வீரன் தனக்குச் சமதையான பகையாளியைச் சமாளிப்பதிலேயே அதிக சுவாரஸ்யம் காண்பது போல் எனக்குச் சமதையான ஒருத்தியோடு வாழ்க்கையைப் பகிர்ந்து கொண்டு விளையாடுவதிலேயே அதிக சுவாரசியம் காண முடியுமென்று நினைத்தேன்.''

''டாக்டர்! அவள் மீது உங்களுக்கும் அன்பிருந்து நீங்கள் நினைத்திருந்தால், அவளை உங்களுக்கு ஏற்றவளாக ஆக்கிக்கொண்டிருக்க முடியும். ஒரு பெண் எப்படிப்பட்டவளாக இருந்தாலும் ஒரு ஆடவரின் அன்பினால் அவளுக்கேற்றபடி தன்னை மாற்றிக்கொண்டு விடுவாள்.''

''ஓ! ஆடவன்தான் ஒரு பெண்ணுக்காகத் தன் சுபாவத்தை மாற்றிக்கொள்ள மாட்டானே தவிர, பெண் ஒரு ஆடவனுக்காகத் தன்னையே மாற்றிப் புதுப்பித்துக் கொண்டு அவன் அளவுக்கு உயர்ந்து விடுவாள் என்கிற தத்துவத்தைச் சொல்லுகிறாயா? அது உண்மைதான் உமா! ஆனால் அந்த மல்லிகா எனக்காகத் தன்னை அழித்துக்கொள்ளவும் தயாராக இருந்தாளே தவிர, தன் சுபாவத்தில் ஓர் அங்குலம் கூட மாற்றிக்கொள்ள அவள் விரும்பவில்லை!''

''அதற்குக் காரணம்?''

''நான்தான்!'' என்று சிரித்த டாக்டர் ஜகந்நாதன், ''நான் ஒரு விசித்திரமான பாத்திரம் இல்லையா? எத்தனையோ விதமான பெண்களோடு பழகியும், எவளுடைய வலையிலும் சிக்காத நான் அந்த மல்லிகாவிடம் மட்டும் ஏன் சுவாரஸ்யம் கொண்டேன் என்பதைப் பற்றி அவளே சிந்தித்திருக்கிறாள். அதற்குக் காரணம் தன்னுடைய குணச் சித்திரமும், சுபாவப் போக்குகளும்தான் என்றும் அவள் தீர்மானித்துவிட்டாள். அதன் பிறகு அவள் தன்னை மாற்றிக்கொள்வாளா? 'பெண் ஒரு புரியாத புதிராக இருக்கும்வரைதான் அவளிடம் ஓர் ஆடவனுக்குக் கவர்ச்சி இருக்கும். புரிந்து விட்டால் அந்தக் கவர்ச்சி யெல்லாம் பறந்து விடும்' என்பார்கள். அதனால்

எனக்குப் புரியாத போக்குகளையெல்லாம் கையாளுவதாக அவள் நினைத்துக்கொண்டு அசட்டுத்தனமான ஆவலாதிகளுடன் அர்த்தமற்ற காரியங்களைச் செய்ய ஆரம்பித்தாள்!'' என்றார்.

''அப்படியானால் அவள் அசடாக இருக்க முடியாது! கெட்டிக்காரியாகத்தான் இருப்பாள்!''

''ஆமாம். என்னோடு பழகிப் பழகி அவளும் கெட்டிக்காரியாகி விட்டாள். 'பூவோடு சேர்ந்த நாரும் மணம் பெறும்' என்பது போல!'' என்று சிரித்த ஜகந்நாதன், ''நான் அவளை முதல் பார்வையிலேயே புரிந்து கொண்டு விட்டேன். அது போலவே அவளும் என்னைப் புரிந்துகொண்டு என் அளவுக்கு அறிவில் உயர்ந்து என் பிரதிபிம்பமாக விளங்க வேண்டுமென்று விரும்பினேன். அதற்கு முதற் பாடமாக 'என்னை நம்பாதே' என்று ஆரம்பித்து, குயுக்திகள், ராஜ தந்திரம், சுயநலச் சாதனைகள், உலகத்தின் வஞ்சனைகள், பித்தலாட்டங்கள் அத்தனையையும் அவளுக்குக் கற்பித்தேன். அவற்றையெல்லாம் அவள் மனப்பூர்வமாகக் கற்றுக் கொண்டாளோ என்னவோ, என்வரைக்கும் பிடிவாதக் குழந்தை போலவே நடந்து கொண்டாள்'' என்றார் ஜகந்நாதன்.

''அதற்குக் காரணமும் அவளுக்கு உங்கள் மீதுள்ள அன்புதான், டாக்டர்!'' என்று உமா தழுதழுக்கும் குரலில் சொன்னாள்.

''ஆமாம். ஆனால் அதே அளவு அன்பு நானும் அவள் மீது வைக்க வேண்டுமென்று எதிர்பார்த்தாள். தன்னைப் போலவே என்னையும் ஒரு குழந்தையாக்க முயன்றாள்! என்றால்



குழந்தை ஆக முடியுமா? அவளுடைய குழந்தைத்தனமான ஆவலாதிகள் போக்குகள் எல்லாம் என் சுபாவத்துக்கோ, என் தொழில் துறைக்கோ பொருந்தி வருமா? நீயே சொல் உமா! இருதயமே இல்லாத யந்திர மனிதனை என்னுள் மல்லிகா ஒரு புதிய இருதயத்தை உருவாக்க முயல்கிறாள் என்பதினால்தான் அவளிடம் எனக்கு ஒரு சுவாரஸ்யம் உண்டாயிற்று என்றாலும் அவள் தன் இருதயத்தையே என் இருதயமாக்கி, என்னைத் தன் மயமாக்க முயன்றது எனக்குப் பிடிக்கவில்லை. நானே அவளைத் திருத்தி என் பிரதிபிம்பமாக்க முயன்றேன். இரு துருவங்கள் போன்ற இத்தகைய இருவர் திருமணம் புரிந்துகொண்டு வாழ்க்கையின் நிரந்தரக் கூட்டாளிகளாகி விட்டால் அப்புறம் அந்தக் குடும்ப வாழ்க்கை குருக்ஷேத்திரமாகவோ, ஆயுட் கைதிகளைச் சீர் திருத்தும் சிறைக்கூடமாகவோ மாறிவிடும். எங்களுடைய மாறுபட்ட சுபாவங்களின் மீதுள்ள கவர்ச்சிகள் எல்லாம் கல்யாணமான உடனேயே மாயமாக மறைந்துவிடும். அப்புறம் வெறும் தளைகளையும், சச்சரவுகளையும்தவிர எதுவும் மிஞ்சாது.''

''அதனால்தான் நீங்கள் 'ப்ரீ லவ்' (சுதந்திரக் காதல்) பற்றிய தத்துவத்தைப் பிரமாதமாகப் பேசுகிறீர்களோ...?''

''ஆமாம். ஆனால் மல்லிகா அதை ஒப்புக் கொள்ளவில்லை. கல்யாணம் கல்யாணம் என்று அவள் பரிதவித்தாள். ஆனால் அந்தக் கால் விலங்கைப் பூட்டிக்கொள்ள முடியாதென நான் மறுத்து விட்டேன்!''

''அந்தப் பெண் மீது உங்களுக்குக் கொஞ்சமாவது அன்பு ஏற்படவில்லையா, டாக்டர்?''

''இருதய மில்லாத என்னிடம் அதிகப்படியான அன்பை அவள் எதிர்பார்த்திருந்தாள். அதிக உரத்தினாலோ அதிகத் தண்ணீரினாலோ சில செடிகள் துளிர்விடும்போதே அழுகிப் பட்டுவிடுவது போல் அவள் மீது எனக்கு அவ்வப்போது மலர முயலும் அன்பெல்லாம் அரும்பிலேயே வாடி விழுந்து விட்டன!' உமா! அன்பு என்பது மனிதனின் பண்புகளைப் பயிரிட்டு வளர்த்து அவன் செழிப்பதற்கு உதவும் உரமாக விளங்க வேண்டுமே தவிர அந்த அன்பே அவனுக்குத் தளைகளாகி விடக் கூடாது!''

''அதனால்...?''

''அதனால் நான் தீவிரமாகச் சிந்தித்தேன். எங்களது இருவரின் எதிர்காலத்தை உத்தேசித்து எங்கள் இருவருக்கிடையே உள்ள இணைப்பைக் கத்தரித்து விடத் தீர்மானித்தேன். மல்லிகா தானாகவே என்னை விட்டு விலகிப் போக மாட்டாள். அதனால் என்னை ஒரு நயவஞ்சகத் துரோகியாகவும், கொடூரமான வில்லனாகவும் உருவகப்படுத்திக் காட்டி அவளைப் புறக்கணித்தேன். அவள் கண்ணீருக்கிடையே என்னைப் பார்த்து ஒரு சிரிப்புச் சிரித்து விட்டுப் போனாள். அந்தச் சிரிப்பில் எத்தனையோ விதமான அர்த்தங்கள் தொனித்தன!''

''பாவம்! அப்புறம் அவள் கதி என்ன ஆயிற்று?'' என்று உமா பரபரப்புடன் கேட்டாள்.

''அது எனக்குச் சரியாகத் தெரியவில்லை. என்னைப் பொறுத்த வரையில் ஒரு கேள்விக் குறியோடு அந்தக் கதை முடிந்து விட்டது என்று நினைத்துக் கொண்டு சிங்கப்பூரிலிருந்து புறப்பட்டு வந்துவிட்டேன். ஆனால் அந்த



## துப்பறிதல் பற்றி...



ஒருவரது விரல் ரேகை அடையாளம் மற்றொருவருடையதைப் போல் இருக்கவே முடியாது. இதை ஆதாரமாகக் கொண்டுதான் விரல் ரேகை நிபுணர்கள் பல பயங்கரக் குற்றவாளிகளைக் கண்டு பிடித்துத் தண்டிக்க உதவியிருக்கிறார்கள். அது மட்டுமல்ல, ஒரு கொலைக் குற்றம் சம்பந்தமாக ஏதோ சில தடயங்கள் கிடைக்கின்றன. அவற்றை வைத்துக் கொண்டு சாதாரணமாகக் கவனித்தால் குற்றவாளியைக் கண்டு பிடிக்க முடியாதிருக்கலாம். ஆனால் அதே தடயங்களை வைத்துக் கொண்டு மூளையை நன்றாக உபயோகித்துத் தர்க்கவாத ரீதியில் யோசனை செய்து ஆராய்ச்சி செய்து பார்த்தால் வெற்றி ஏற்படும் என்பதை அமெரிக்கக் கவிஞரும் கதாசிரியருமான எட்கார் ஆலன்போ நிரூபித்தார்.

மேரி ரோஜர்ஸ் என்ற ஒரு பெண்ணின் கழுத்து நெரிக்கப்பட்டு நியூயார்க்கில் ஹட்ஸன் நதியில் எறியப்பட்டிருந்தாள். போலீசார் கொலை செய்தவனைக் கண்டு பிடிக்க முடியாது எனக் கூறிக் கைவிட்டு விட்டனர். எட்கார் ஆலன்போ இந்தக் கொலை சம்பந்தமாக வெளியாகி யிருந்த விவரங்களை அடிப்படையாக வைத்துக்கொண்டே ''மேரி ரோஜர்ஸ் மர்மம்'' என்று ஒரு கதை எழுதினர்.

நியூயார்க் போலீஸ் அதிகாரிகள் இது ஏதோ கதை தானே என்று சும்மா இருக்கவில்லை. மறுபடியும் அந்த மேரி ரோஜர்ஸ் கொலை வழக்கை எடுத்துக் கொண்டு ஆலன்போ காட்டிய வழியைப் பின்பற்றித் துப்பறிந்து கொலையாளியைக் கண்டு பிடித்தார்கள்!

மல்லிகா தற்கொலை செய்து கொண்டிருப்பாள் என்றோ, பித்துப் பிடித்துப் பைத்தியக்காரியாய் அலைந்து கொண்டிருப்பாள் என்றோ, அல்லது என்னை அடியோடு மறந்திருப்பாள்என்றோ எனக்குத் தோன்ற வில்லை. அவள் கெட்டிக்காரியாக இருந்தால் என்னை ஒருபோதும் மறவாமல் என்னிடம் கற்ற புத்திசாலித் தனத்தை யெல்லாம் பயன்படுத்திக் கொண்டு என்னைப் போல் உருமாறி அவளும் ஒரு வில்லியாகவும், பெண் சகுனியாகவும் உருமாறியிருப்பாள். விரக்தியாலும், வெறுப்பாலும் சமுதாயத்தை வஞ்சம் தீர்க்கும் வெறிகொண்டு வஞ்சனையின் வடிவமாகவும் வன்நெஞ்சக் கூனியின் மறுபதிப்பாகவும் வெளிக் கிளம்புவாள். அப்போது அவளால் ஏற்படக் கூடிய விளைவுகள் வெகு சுவாரஸ்யமாக இருக்கும்!'' என்று ஜகந்நாதன் கூறி முடித்தார்.

உமா யோசனையில் ஆழ்ந்தாள்.

''உமா! இப்போது நீ என்ன நினைக்கிறாய்...?''

''ஒன்றுமில்லை. பரிதாபப்படுகிறேன்'' என்ற உமாவின் கண்களில் இலேசாக நீர் துளித்தது.

''அந்தப் பெண்ணுக்காகவா பரிதாபப்படுகிறாய்?''

''உங்களுக்காகவும்தான் டாக்டர்!''

''ஏன்? என் மனத்தை எந்தப் பெண்ணாலுமே மாற்ற முடியாது, ஆத்மா இல்லாத யந்திர மனிதனாகவே நான் காலமாகிவிடுவேன் என்று நீ பயப்படுகிறாயா?'' என்று ஒரு சிரிப்புடன் கேட்ட ஜகந்நாதன், ''உமா! குழந்தைத்தனமும் என்னைப் போன்ற அறிவுமுதிர்ச்சியும் ஒருங்கே வாய்ந்த பெண்ணொருத்தி எனக்கும் கிடைக்க வேண்டுமென்று ஒரு காலத்தில் நான் எதிர்பார்த்தேன். ஆனால் இப்போதோ...'' என்று கூறி, ஒருகணம் தயங்கி நின்று, ''இப்போது என்னைப் புரிந்து கொண்டு, என்னை அனுசரித்து, என் பண்புகளைப் பயன்படுத்தி, வாழ்க்கையை வளமாக்கக்கூடிய ஒருத்தி முயன்றால், எனக்கு ஒரு இதயத்தைக் கொடுக்க முடியும்!'' என்று கூறி விட்டு, உமாவின் அழகான முகத்தையும், அமைதி தவழும் நெற்றியின் ஒளியையும், அன்பு கனியும் கரு விழிகளையும் கூர்ந்து பார்த்தார்.

அந்தப் பார்வையைத் தாங்க முடியாமல் உமா தன் முகத்தை வேறுபுறம் திருப்பிக் கொண்டாள்.

''உமா! என் காதலியைப் பற்றி என் வாயாலேயே நான் கூறிய கதையைக் கேட்டதிலிருந்து என்னை ஒரு பயங்கர வில்லன் என்று யாரும் நினைக்கக் கூடும். ஆனால் அந்தக் காதலியே ஒரு கற்பனையாகவும் இருக்கலாம்!'' என்று ஜகந்நாதன் சொல்லி விட்டுக் கலகலவெனச் சிரித்தார்.

''நீங்கள் நாவலாசிரியர் அல்லவா? சமயோசிதம் போல் கதையை எப்படி வேண்டுமானாலும் திருப்புவீர்கள்!'' என்று கூறி உமா மென்னகை பூத்தாள்.

''உமா! நீ நிம்மதியாகக் கொஞ்சம் தூங்கு! நான் பிச்சுமணியின் தாத்தாவைப் பார்த்து விட்டு வருகிறேன். என் இதோபதேசங்கள் இல்லாவிட்டால் அவருக்கு இருதயம் வெடித்துவிடும்.'' அவர் போனதும் உமா கட்டிலில் படுத்தபடியே அவரைப் பற்றிய சிந்தனைகளில் வெகு நேரம் ஆழ்ந்திருந்தாள். இறுதியில் அவளுக்குப் பெருமூச்சு வந்தது! (தொடரும்)

கலா மண்டபம்

# கண் கவரும் கதக்களி

கதக்களி என்ற வார்த்தைக்கே கதை சொல்லும் நாட்டியம் என்றுதான் பொருள். இந்த நாட்டியம் மலையாள தேசத்தில் பிரசித்தமானது என்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயம். இந்த நாட்டியத்தில் கதையே பிரதானமானது. கேரள தேசத்தில் ஒரு கதையைத் தொடர்ந்து பல இரவுகள் நடிப்பார்கள்.

எழும்பூர் மியூஸியம் தியேட்டரில் சமீபத்தில் நடைபெற்ற கலாக்ஷேத்திரத்தின் ''கிராதார்ஜுனீயம்'' கண்களுக்கு விருந்தாக இருந்தது.

இந்தப் புராதனமான நாட்டியத்தைப் பார்க்கப் பல 'டூரிஸ்டு'கள் கூடுகிறார்கள். ''மேக் அப்'' எனப்படும் முக அலங்காரம் கதக்களி நாட்டியத்தில் மிகவும் முக்கியமானது. கதா பாத்திரங்களின் குணங்களுக்கு ஏற்றபடி முகத்தில் வர்ணம் பூசிக்கொள்வார்கள். இந்த முக அலங்காரமும், கிரீடம் முதலிய ஆபரணங்களும் பிரமாதமாக இருப்பதாலேயே வெளி நாட்டார் கதக்களி நாட்டியத்தை விரும்பிப் பார்க்கிறார்கள்.

அன்றைய தினம் கலாக்ஷேத்திரக் குழுவினர் எடுத்துக் கொண்ட கிராதார்ஜுனீயம் என்ற கதை மிகவும் புகழ் பெற்றது: அர்ஜுனன் பாசுபதாஸ்திரம் பெறுவதற்காகத் தவம் செய்கிறான். அதைக் கலைக்க இந்திரன் தேவஸ்திரீகளை அனுப்புகிறான். அர்ஜுனனுடைய தவம் கலையவில்லை.

அன்னை பார்வதி தேவி ஈசுவரனிடம் அர்ஜுனனுக்கு வரம் கொடுக்கும்படி மன்றாடுகிறாள். அர்ஜுனனுடைய ஆணவத்தைத் தொலைத்த பிறகே அவனுக்கு வரம் கொடுக்க முடியும் என்கிறார் ஈசுவரன். அர்ஜுனனுடைய கர்வத்தை ஒடுக்குவதற்காக இறைவனும் இறைவியும் வேடனாகவும் வேடஸ்திரீயாகவும் வேடம் தரித்து வருகிறார்கள்.

அந்தச் சமயத்தில் மூகாசுரன் என்ற அரக்கன் காட்டுப் பன்றி வடிவம் எடுத்துக் கொண்டு அர்ஜுனனைத் தாக்க வருகிறான். தவம் கலைந்த அர்ஜுனன் காட்டுப் பன்றியின் மீது பாணம் தொடுக்கிறான். அதே கணத்தில் வேடனாக வரும் ஈசனின் அம்பும் அதன் மீது தைக்கிறது. இந்தக் காரணத்தினால் இருவருக்கும்போர் மூள்கிறது. அர்ஜுனன் தோற்றுப் போகிறான். வேடனால் சுழற்றியடிக்கப்பட்டுக் கீழே விழுந்ததும் அவமானத்தினால் குன்றிப் போன அர்ஜுனன் மண்ணில் லிங்கம் பிடித்து வைத்துப் பூஜிக்கிறான். அவன் லிங்கத்தின் மீது அர்ச்சித்த புஷ்



பங்கள் எதிரே நிற்கும் வேடன் மீது போய் விழுகின்றன. அப்போதுதான் தன்னோடு சண்டையிட்டது சங்கரனே என்று அர்ஜுனனுக்குத் தெரிகிறது. பிறகு அம்மையும், அப்பனும் தங்களுடைய திவ்ய ரூபத்தில் தரிசனம் தந்து பாசுபதாஸ்திரத்தையும் அர்ஜுனனுக்கு அளிக்கிறார்கள்.

அர்ஜுனன் தவம் செய்வதற்காக இமய மலைச் சாரலுக்குச் செல்லுவதற்கு முன்னால் திரௌபதியிடம் விடைபெற்றுக் கொண்டு போகிறான். இந்தக் கட்டத்தில் ஸ்ரீ தனஞ்சயனின் பாவபூர்வமான ஆட்டம் மெச்சும்படியாக இருந்தது.

வேடனாகத் தோன்றியவர் ஸ்ரீ குன்னிராமன். வேடனின் ஆர்ப்பாட்டங்களும் அவனுடைய ஆட்டமும் சபையோரை — முக்கியமாக நாட்டியம் பார்க்க வந்திருந்த குழந்தைகளைச் சிரிப்பில் ஆழ்த்தின. கதக்களி நாட்டியத்தில் பிரசித்தி பெற்ற ஆசிரியரான ஸ்ரீ சந்துபணிக்கரின் மாணவர்கள் இவர்கள் அனைவரும். வேட ஸ்திரீயாக நடித்த ஸ்ரீ. பாலகோபாலன் ஆச்சரியப்படும் வகையில் சிறப்பாகத் தம் பாகத்தை உணர்ந்து நடித்தார்.

கலாக்ஷேத்திரத் தயாரிப்புக்களில் குறிப்பிட வேண்டிய அம்சம் ஒன்று உண்டு. கண்களுக்கு இதமான முறையில் மேடையில் வெளிச்சம் போடுகிறார்கள். அதே சமயம் மேடை முழுவதும் போதுமான அளவு வெளிச்சம் எப்போதும் இருக்கிறது.

எளிய நடிப்பும் விதம்விதமான அலங்காரங்களும், சிறந்த கதையும், உயர்ந்த கருத்தாழமும் உள்ள இந்த நாட்டியத்துக்குத் தமிழ் நாட்டில் இன்னும் பெருத்த அளவில் ஆதரவு ஏற்பட வேண்டும்.

# விருதுபெற்ற கலைஞர்கள்

ஸங்கீத நாடக அகாடமி இவ்வாண்டு கௌரவித்த கலைஞர்களில் பேராசிரியர் பி. சாம்பமூர்த்தி தமிழகத்துக்கு மட்டுமின்றி வெளிநாடுகளிலும் அறிமுகமானவர். கர்நாடக சங்கீதத்துக்குச் சுமார் முப்பத்தைந்தாண்டுகளாக அவர் இடைவிடாது ஆற்றிய தொண்டு மிகவும் சிறப்பானது. சென்னை சர்வகலாசாலையில் சங்கீதத்துக்குத் தனி இடம் ஏற்படுத்திக் கொடுத்த பெருமை திரு சாம்பமூர்த்தியையே சாரும். மேல்நாட்டுச் சங்கீதத்தை நமது முறையில் புகுத்தி ''ஆர்கெஸ்ட்ரா'' என்ற இணைப்புச் சங்கீதத்தை நமக்கு அளித்துப் புதுமையைப் பரிசோதனை செய்து காட்டியவர் அவர். தியாகராஜ நௌகா சரித்திரத்தை நடன நாடகமாக நடத்தியிருக்கிறார். திருப்பதி ஸ்ரீ வேங்கடேச்வரா இசைக் கல்லூரியில் உயர்பணி ஆற்றி வருகிறார். சங்கீத அரங்குக்கு வெளியே எவ்வளவு விரிவாகக் கர்நாடகசங்கீதத்துக்குத் தொண்டாற்ற முடியும் என்பதற்குப் பேராசிரியர் சாம்பமூர்த்தி அரிய எடுத்துக்காட்டு.

விருதுபெற்ற மற்றொரு கலைஞர் சங்கீத கலாநிதி திரு டி. கே. ஜயராம அய்யர். வயலின் வாத்தியத்தை விசேஷ திறமையுடன் கையாண்டு, பல வித்துவான்களுடைய கச்சேரிகளில் பங்குகொண்டு அனுபவமிக்கவர். தனிக் கச்சேரி செய்து ரசிகர்களை மகிழ்விக்கக் கூடியவர். சென்னை சங்கீத வித்வத் சபை விழாவுக்குத் தலைமை வகித்து வித்துவான்களின் பாராட்டுதலைப் பெற்றவர். அகில இந்திய ரேடியோவின் கர்நாடக இசைப் பகுதியை நிர்வகித்து வருபவர்.

மைசூர் ராஜ்யத்தைச் சேர்ந்த வித்துவான் தேவேந்திரப்பாவை இந்தக் காலத்திய இளம் ரசிகர்கள் கேட்டிருக்க மாட்டார்கள். ஆனால் சுமார் முப்பது ஆண்டுகளுக்கு முன்பு மைசூர் வித்துவான் பிடாரம் கிருஷ்ணப்பாவின் ராகங்களையும், ஸ்வரப் பிரஸ்தாரங்களையும், கமகங்களையும் கேட்டவர்கள் கான விசாரத தேவேந்திரப்பாவின் இசையில் பிடாரம் கிருஷ்ணப்பாவின் முழு பாணியும் பிரதிபலிப்பதை உணர்வார்கள். கர்நாடக இசையுடன் ஹிந்துஸ்தானி ''கியால்''களையும், ''டும்ரி''களையும் சரளமாகப் பாடும் ஆற்றல் பெற்றுள்ளவர். அத்துடன் பல்வேறு வாத்தியங்களையும் சுலபமாக வாசிக்கும் அசாதாரண வல்லமை பெற்றவர். ஒரு சமயம் வெளிநாடுகள் சென்றிருந்த போது, சீனக் கலைஞர் வாசித்துக் கொண்டிருந்த ஒரு வாத்தியத்தை வாங்கி அவர்கள் வாசித்தது போலவே வாசித்துக் காட்டியதாக மைசூர் ரசிகர்கள் சொல்லிக் கொள்வதுண்டு.

பிரபல மடைந்துள்ள கலைஞர்களுடன் மறைந்து வாழும் கலைஞர்களையும் தேடிப் பிடித்துக் கௌரவித்ததற்குச் சங்கீத நாடக அகாடமியைப் பாராட்ட வேண்டும்.

திரு தேவேந்திரப்பா



திரு சாம்பமூர்த்தி



திரு டி. கே. ஜயராம அய்யர்



இரண்டு வருஷங்களுக்கு முன் கம்பன் சொஸைட்டியாரால் ஏற்பாடு செய்யப்பட்ட ஒரு சிறப்புக் கூட்டத்தில் சென்னையில் அன்றைய அமெரிக்க கான்ஸல் ஜெனரலாகப் பணியாற்றிய டாக்டர் தாமஸ் டபிள்யூ. சைமன்ஸ் அவர்கள் கம்பனரைப் பற்றியும், அவரது இராமாயணக் காப்பியத்தைப் பற்றியும் ஒரு விரிவான ஆராய்ச்சிச் சொற்பொழிவை நிகழ்த்தினார்கள். சுமார் இரண்டு மணி நேரத்துக்கும் மேல் பேசிய அவர் கவிச் சக்கரவர்த்தியைப் பற்றி நாம் இது வரை எண்ணாத பல புதிய கருத்துக்களை மிகப் புரட்சிகரமாக — ஆனால் அமரிக்கையாக வெளியிட்டார். அவர் கூறினார்: ''தமிழறிவு எனக்குப் பூஜ்யம் என்பது அனைவரும் அறிந்ததே. ஆதலால் இந்தக் காரியத்துக்குக் கம்பராமாயண ஆங்கில மொழிபெயர்ப்பையேதான் முழுதும் நம்பியிருக்க வேண்டியதாயிற்று. தமிழ் இலக்கிய வரலாறுகளைப் படித்ததில் தமிழ் எழுத்து மண்டலத்தில் கம்பரது இடத்தை நிர்ணயிக்க முடிந்தது. மாண்பு மிக்க திருவள்ளுவருடன் உடன் வைத்து எண்ணும் பெருமையுடையவராக அவர் திகழ்வதும் தெரிந்தது.''

கம்பன் தமிழில் இராமாயணத்தை ஏன் பாட வேண்டும் என்ற முக்கிய வினா ஒன்றை டாக்டர் சைமன்ஸ் எழுப்பி அவரே பதிலும் சொன்னார். கம்பன் இந்திய ஒருமைப்பாட்டினின்று வேறான — தென்னகத்துக்கே உரியதொரு தேசிய இலக்கியத்தை உருவாக்கி, மேனாட்டு ''வர்ஜிலைப்'' போல் ஒரு புதிய கலைப் பாரம்பரியத்தைக் காண முயன்றான் என்று டாக்டர் சைமன்ஸ் அவர்களுக்கு முதலில் தோன்றியது. ஆனால் அவர் மேலும் செய்த ஆராய்ச்சிகளின் விளைவாகத் தமது இந்தக் கருத்தை மாற்றிக் கொள்ளும்படி ஆயிற்று. அதை அவரே இவ்வாறு விவரிக்கிறார்:

''கல்வியில் சிறந்தவன் கம்பன் என்பது அனைவராலும் ஒப்புக் கொள்ளப்படுகிறது. அவன் வால்மீகி இராமாயணத்தையும், அதையொட்டி எழுந்துள்ள பண்பாட்டையும் அறியாதவனல்ல. இந்தியாவைக் கலாசார வழியில் ஒன்றாக இணைக்க வால்மீகி இராமாயணம் விளங்குவதை அனைவரும் ஒப்புக் கொள்வர். இந்தியாவை ஒரே நாடாகக் காணும் முயற்சிதான் வால்மீகியினுடையது. வால்மீகியை நன்கறிந்த கம்பர் அவரது கருத்துக்கு முற்றிலும் மாறாகத் தென்னிந்தியாவில் ஒரு தனி தேசியத்தை உருவாக்க முயன்றான் என்று நம்புவதே கஷ்டமாக இருக்கிறது. மாறாக, இந்திய தேசிய விழிப்புணர்ச்சியைத் தமிழர்களிடையே ஏற்படுத்தக் கம்பர் தமது இராமாயணத்தை ஆக்கவில்லையா என்று ஆராய்வது சுவையாக இருக்கும். கம்பராமாயணம் எல்லாத் தமிழக மக்களாலும் கற்கப்பட்டோ அல்லது கேட்கப்பட்டோ வந்தது என்று நம்பப்படும்போது, வடக்கில் வால்மீகி வளர்த்த கலாசாரத்தைத் தென்னிந்திய மக்களிடையே பரப்புவதுதான் கம்பரது குறிக்கோளாக இருந்திருக்குமோ என்ற வினா எழுகிறது. இந்த வினாவுக்கு மற்ற ஆதாரங்களைப் பார்க்கும்போது 'ஆம்' என்றே சொல்லும்படி யிருக்கிறது.''




கவிச் சக்கரவர்த்தியே,

**'பொய்யில் கேள்விப் புலமையினோர் புகழ்**
**தெய்வ மாக்கவி மாட்சி தெரிக்கவே'**

என்று வாய்மொழிந்த பிறகு சைமன்ஸ் அவர்கள் இந்த முடிவுக்கு வந்ததில் ஆச்சரியம் என்ன இருக்கிறது!

கம்பனைப் பற்றி அதிகமாக ஆங்கிலத்தில் நூல்களோ, மொழிபெயர்ப்புக்களோ இல்லையென்பதைக் கண்டார் ஸ்ரீ சைமன்ஸ். வால்மீகி இராமாயணத்தைப் பற்றிய பல ஆங்கில ஜெர்மன் அறிஞர்கள் எழுதியுள்ள நூல்கள் இருக்கும்போது கம்பனைப் பற்றி இந்தியரல்லாதவரால் எழுதப்பட்ட நூல் எதுவுமே

இல்லாதது பெரு வியப்பாகவும், வருத்த மாகவும் இருந்தது. உள்ள சில நூல்களும் தமிழ் அறிஞர்களால் ஆங்கிலத்தில் எழுதப் பட்டவையே. ஆனால் அதிர்ஷ்டவசமாகக் கம்பராமாயணத்தைப் பற்றிய கட்டுரைகள் பிரசுரமான பத்திரிகைகள் சைமன்ஸ் அவர் களுக்குக் கிடைத்தன. இவைகளின் துணை கொண்டு தமது 'கம்பன் படிப்பை' அவர் நடத்தினர். அவ்வாறு படித்ததில் அவருக்குத் தமிழறிஞர்களிடையே உள்ள ஒரு பெருங் குறை தெரிய வந்தது. கம்பனைப் பற்றி எழுதியுள்ள தமிழறிஞர்க ளெல்லாம் கம்பரை உலகப் புகழ் பெற்ற மேனாட்டு இதிகாசப் புலவர்களான ஹோமர், வர்ஜில், டாண்ட்டே, மில்டன், கந்தே முதலியவர்களுடன் ஒப்பிட்டு, கம்பரை அவர்களுக்கும் ஒரு படி அதிகமாகவே காட்ட முற்பட்டிருக்கிறார்கள். மேற்படி நூலாசிரியர்கள் மேனாட்டு இலக்கியங்களைக் கற்கவில்லை என்று சொல்ல முடியாவிட்டா லும் அவர்கள் அவ்வாறு வலியுறுத்தும் கருத்துக்களுக்குத் தக்க ஆதாரங்களைக் காட்டுவதில்லை என்று சைமன்ஸ் அபிப் பிராயப்பட்டார். அவர் கூறினர்:

''இத்தகைய முயற்சிகளால் அவர்கள் கம்பருக்கு அநீதி இழைத்தவர்களா கிறார்கள். கம்பர் தம்மோடு வாழ்ந்த மற்றப் புலவர்களை யெல்லாம் நன்கு மதித்துப் போற்றியதாகக் கதைகள் கூறு கின்றன. கருவிலே திருவுடைய அத் தகைய வித்தகர்களுள் ஒருவராகத் தான் இருந்ததைக் கம்பரே உணர்ந்திருக்கக் கூடும்; ''கவிச் சக்கரவர்த்தி'' என்று மற்றவரும் அவரை மகிழ்ந்து அழைத் திருக்கக் கூடும். ஆனால் வால்மீகியைக் காட்டிலும் தம்மைத் தாமே உயர்ந்தவர் என்று கம்பர் எண்ணி விருப்பாரா என்று நான் வியப்படைகிறேன்.

''இத்தகைய புலமை வழிக்கு இனி ஒரு முடிவு கட்டுவோம். இந்தியா இன்னமும் ஒரு காலனி அல்ல. அதன் படைப்பாற்றல் மிக்க கலைஞர்களின் திறமைக்கு இனியும் சான்றுகள் தேவையில்லை. தனக்கே உரித் தான ஒரு தனிப் பண்பாடும் கலாசார மும் கொண்ட இந்தியா இன்று ஒரு சுதந்திர நாடு: அவைகளைக் காக்க எத் தகைய பாதுகாப்பு முயற்சியும் அவசிய மில்லை.—அவை தாமாகவே நிற்கும் தகுதி யும் சிறப்பும் பெற்றவை. இத்தகைய 'ஆதரவு—எழுத்துக்கள்', பாரத நாட்டை யும், அதன் இலக்கிய, கலாசாரத்தையும் சரிவர நாம் புரிந்து கொள்ள முடியாமல் செய்து விடுகின்றன.''

அறிஞர் திரு வ. வே. சு. ஐயர் எழுதிய 'Kambaramayana - a study' என்ற ஆங்கில நூலைப் படிக்கும் வாய்ப்பு டாக்டர் சைமன்ஸுக்குக் கிடைத்தது. இதில் கம்பர் கவியின் சில பகுதிகள் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளமை கம்பரது காப்பி யத்தின் பல்லலங்காரப் பண்பை அறிய உதவியாக இருந்தது. ஆனால் இவைகளுக்கு எல்லாம் சிகரமாக டாக்டர் சைமன்ஸ் மதிப்பது ராஜாஜி அவர்களின் கம்ப ராமாயண — அயோத்தியா காண்ட ஆங்கில மொழிபெயர்ப்பையே. ஒரு பெரும் அந்நிய மொழி இலக்கியத்தை வெறும் மொழி பெயர்ப்பின் மூலம் அறிய முற்படுபவன் உடனே கண்டனத்துக்கு உள்ளாவதும், மூலத்துக்கு அதன் மொழிபெயர்ப்பு சாதா ரண ஒரு நகல் பிரதியே என்பதும் எல் லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட விஷய மாக இருந்தாலும், இவை எல்லாவற் றையும் மீறி ராஜாஜி அவர்களின் அயோத் தியா காண்ட மொழிபெயர்ப்பு தமக்கு ஒரு வரப்பிரசாதமாகக் கிடைத்தது என சைமன்ஸ் அவர்கள் கூறிச் சந்தோஷப்பட்டார்கள்.

இறுதியாக, ''என்றோ ஆயிரம் ஆண்டு களுக்கு முன்னர் வாழ்ந்த ஒரு தமிழ்ப் புலவ னிடம் உங்களுக்கு ஏன் இத்தனை ஈடுபாடு என்று இந்திய நண்பர்களாகிய உங்களில் சிலர் கேட்கக் கூடும். என்னைப் போல் லட்சக்



டாக்டர் சைமன்ஸ்

கணக்கான அமெரிக்க மக்கள் இந்தியப் பண் பாட்டிலும், கலைகளிலும் தணியாத ஆர்வம் உடையவர்களாக இருக்கிறார்கள். 1961ம் ஆண்டில் மட்டும் 39 லட்சத்துக்கும் மேற் பட்ட அமெரிக்க இளைஞர்கள் இந்திய சரித் திரம், பொருளாதாரம், அரசியல், கலா சாரம் இவைகளைக் கற்றுக் கொடுக்கும்படி தமது கல்லூரி நிர்வாகிகளை வற்புறுத்திப் பயின்றிருக்கிறார்கள். இந்த அடிப்படையில் பார்க்கும்போது இந்தியப் பண்பாட்டின் முக்கியமான உயிர்ப் பகுதியில் ஒன்றான கம்பராமாயணத்தில் எனக்கு ஏற்பட்டுள்ள ஆர்வம், இன்றைய அமெரிக்கருக்கு இந்தி யக் கலைகளில் உள்ள ஆர்வத்தின் பிரதி பலிப்பே'' என்றார் டாக்டர் சைமன்ஸ்.

## அன்பு மனைவிக்கு அரிய பரிசு




"இல்லை, ஆயுள் இன்சூரன்ஸ் பாலிஸி"

"ராதா, நெக்லஸை விட மிகவும் பயனுள்ளது இந்தப்பாலிஸி. இதன் மூலம் நான் ஒழுங்காகப் பணம் சேமித்து வருவேன். எனக்கு ஏதேனும் நேர்ந்தால் உனக்கும் நம் மகனுக்கும் பெருந்தொகை யொன்றை வழங்க வழி வகை செய்கிறது இந்தப்பாலிஸி."




"5 ஆண்டுகளுக்குப் பின் ராதாவின் கணவர் காலமாகிவிட்டார். அவருடைய ஆயுள் இன்சூரன்ஸ் பாலிஸி ரூ. 5000 த்தை அவளுக்கு வழங்கியது. இந்தப் பணத்தைக் கொண்டு தன் மகனை விவசாயக் கல்லூரியில் சேர்த்தாள் ராதா. அவனும் நல்ல முறையில் படித்து நவீன முறை விவசாயத்துறைத் தேர்ச்சி கொண்டான்"




"மகிழ்ச்சி மகனே, இதைக் கேட்க உன் அப்பா இல்லையே. ஒவ்வொரு ஆண்டும் அறுவடைக்குப் பின் ஏதாவ-தொரு நகை வாங்கி வருவார் உன் அப்பா. ஒரு ஆண்டு நகைக்குப் பதிலாக ஆயுள் இன்சூரன்ஸ்பாலிஸி மூலம் சேமிக்க ஆரம்பித்தார். அந்தப் பணம்தான் உன் கல்விக்கு உதவியது. நம் குடும்பத்தைக் காப்பாற்றியது."





1. பாரத நாட்டின் வடஎல்லையிலுள்ள நேப்பாள நாட்டுடன் நல்லுறவை வளர்த்துக் கொள்ளும் வகையில் பாரத ஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் அந்நாட்டு மன்னரின் அழைப்பை ஏற்றுச் சமீபத்தில் சுற்றுப்பிரயாணம்செய்து பல அலுவல்களில் ஈடுபட்டார். அப்போது, நேப்பாளத்திலுள்ள புட்பூர்வா பாரதீய கூர்க்கா சைனிக் உயர்தரப் பள்ளிக்குப் பாரத ராஷ்டிரபதி விஜயம் செய்தார்.



2. எழும்பூர் குழந்தைகள் ஆஸ்பத்திரிக்குத் தில்லி சுகாதார மந்திரி டாக்டர்சுசீலா நய்யார் அடிக்கல் நாட்டினார்.



3,4. நுங்கம்பாக்கம் பத்மா சேஷாத்திரி பள்ளிக் கட்டட நிதிக்காகச் 'சர்வர் சுந்தரம்' என்னும் நாடகம் நடத்தப்பட்டது. இவ் வைபவத்தில் வெள்ளித் திரைக் கலைஞர்களும் கலந்து கொண்டனர்.



5. ம. பொ. சி. அவர்கள் எழுதிய 'வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு' என்னும் நூல் வெளியீட்டு விழா கோகலே மன்றத்தில் விமரிசையாக நடந்தது. திருமுருக கிருபானந்த வாரியார் அவர்கள் இந் நூலை வெளியிடுகிறார்.




6. கல்கத்தா தமிழ் எழுத்தாளர் சங்கத்தினர் ஆங்கிலத்தில் தயாரித்துள்ள 'தமிழ் இலக்கியம்' என்ற புத்தகத்தை நீதிபதி திரு கைலாசம் அவர்கள் சென்னையில் சமீபத்தில் வெளியிட்டார்.








# கனரா-பாண்டியன் இணைப்பு

கங்கையுடன் யமுனை கலப்பது போலவும் காவேரியுடன் கொள்ளிட நதி கலப்பதுபோலவும், தென்னாட்டில் பாங்குத் தொழில் துறையில் மங்களூரை நிலைக்களனாகக் கொண்டு சிறப்புப் பணியாற்றி வரும் கனரா பாங்குடன் பாண்டிய நாட்டின் தலைநகரைத் தனது நிலைக்களனாகக் கொண்டு உயர்பணி புரிந்து வரும் பாண்டியன் பாங்கு இம்மாத இறுதியில் ஒன்றிக் கலக்கிறது. பாங்குத் தொழில் உலகில் இது ஒரு முக்கியமான சம்பவம். தொழில் உலகில் குறிப்பிடத் தக்கதொரு நிகழ்ச்சி.

கனரா பாங்கின் வரலாறு நீண்டது. சுவை மிக்கது. வங்கப் பிரிவினை, தேசியக் கொந்தளிப்பு, சுதேசி இயக்கம் ஆகியவை நாட்டை ஆட்கொண்ட காலத்தில், தொழில் துறையில் தீவிரமாகப் பலர் ஈடுபட்டு, நாட்டின் வளர்ச்சிக்கு வித்திட்டனர். அவர்களில் ஒருவரான மங்களூர் வழக்கறிஞர் ஏ. சுப்பாராவ் பாய் 1906-ல் எளிய முறையில் தோற்றுவித்ததுதான் கனரா பாங்கு. முதலில் சாசுவத நிதியாகத் தோன்றி, பின்னர் கனரா பாங்காக மாறி, படிப்படியாக முன்னேறி, பல ஊர்களில் கிளைகள் ஸ்தாபித்து வேகமாக வளர்ந்து வந்தது. பாங்குத் துறையில் தலைசிறந்த வித்யாலாகர் பாண்டியா போன்றவர்களின் நன்மதிப்பை ஐம்பதாண்டுகளுக்கு முன்னரே கனரா பாங்கு பெற்றிருந்தது. இப்போது மைசூர், கர்நாடகம், ஆந்திரா, மகாராஷ்டிரம், கேரளம் முதலிய பிரதேசங்களில் 115 கிளைகளை முக்கியமான வியாபார நகரங்களில் எல்லாம் அமைத்துக் கொண்டு, நவீன சூழ்நிலைகளுக்கும் தொழில் வளர்ச்சிக்கும் தேவைப்படும் எல்லாவித பாங்கு அலுவல்களையும் மிகத் திறமையாக நடத்திக் கொண்டு வருவதுடன் சமூக முன்னேற்றத்துக்காக உயர் கல்வித் துறையிலும் செய்துவரும் பணி முக்கியமாகப் பாராட்டத் தகுந்தது. படிப்பின் ஆற்றலையும் புத்திகூர்மையையும் மட்டுமே அடமானமாகக் கொண்டு ஸ்காலர்ஷிப் கடன்கள் வழங்குவதும், விலையுயர்ந்த பொறியியல் புத்தகங்களை இலவசமாகப் படிக்க உதவுவதும் கனரா பாங்கு செய்யும் விசேஷ சமூக சேவைகள்.

அடுக்கு மாடிகளுக்கும் அழகு மாளிகைகளுக்கும் புகழ்பெற்ற பெங்களூருக்குக் கனரா பாங்கியின் அலுவலகத்தின் தோற்றம் தனிச் சிறப்பை அளிக்கிறது. 25 லட்சம் ரூபாய் செலவில் இரண்டரை ஏக்கர் நிலத்தில் கட்டப்பட்டுள்ள ஏழு அடுக்கு மாடிக் கட்டடமே பாங்கின் நிர்வாக அலுவலகம்.

**பாண்டியன் பாங்கியின் வரலாறு குறுகிய கால அளவுள்ளதானாலும், சாதனைகள் அபா**

ரம். தமிழ் நாட்டில் மட்டும் ஐம்பதுக்கு மேற்பட்ட இடங்களில் கிளைகள் ஸ்தாபித்துச் சிறப்புத் தொழில் நடத்தி வருகிறது. முற்போக்கு ஆர்வம் மிக்கது. பெண்களைக் கொண்டே பாங்கின் ஒரு பிரிவை நடத்த முடியும் என்பதை நிரூபித்துக் காட்டியது பாண்டியன் பாங்கு. வங்கித் தொழிலில் மேல் நாட்டுப் பாங்கிகளில் அநுபவம் பெற்று வர ஒரு பெண் நிர்வாகியை முதன் முதலாக அனுப்பி வைத்ததும் இந்தப் பாங்கி தான். 'செக்கை' ஒரு முனையில் கொடுத்து விட்டு, மறுமுனையில் பணம் பெற்றுக் கொள்ளும் தீவிரப் பட்டுவாடா முறையை மதுரைத் தலைமை அலுவலகத்தில் அமுலுக்குக் கொண்டு வந்ததும் பாண்டியன் பாங்கு. கிராமப்புற மக்களுக்கு நவீன பாங்கு வசதிகளை எடுத்துச் சொல்ல வேண்டும் என்ற



கொள்கையை நடைமுறையில் கையாண்டதும் பாண்டியன் பாங்கு. ஹார்வே ஸ்தாபனத்தைச் சேர்ந்தவர்களின் கூட்டுறவினால் செல்வாக்குடனேயே பணியாற்றி வருகிறது.

ஒரு பாங்கு மற்றொன்றுடன் இணைவதற்கு, ஒன்றின் நிலைமை சீர்கெட்டுப் போயிருத்தல் வேண்டும் என்று எண்ணுவது பழங்கால வழக்கம். இணையும் முறைகளும் சிக்கலானவை. நஷ்டங்களும் ஏற்படும். இப்போது சுயேச்சையாகவே, வெளியாரின் நிர்ப்பந்தமில்லாமலே, பாங்குகள் ஒன்றோடொன்று இணைகின்றன.

இதனால் இரு பாங்குகளுக்கும் நன்மையுண்டு. தொழில் சமூகத்துக்கும் நன்மை உண்டு. கனரா பாங்கின் ஏராளமான நிதி வசதிகளின் உதவி பாண்டியன் பாங்கியின் கிளைகளுக்கும், வாடிக்கைக்காரர்களுக்கும் கிடைக்கும். கனரா பாங்குக்குத் தமிழ் நாட்டில் உள்ள பாண்டியன் பாங்குக் கிளைகளின் சேவை எடுத்த எடுப்பிலேயே கிடைக்கிறது. தென்னிந்தியா முழுவதிலும் கனரா பாங்கின் கிளைகள் பரவிக் கிடக்க வாய்ப்பு இதன் மூலம் ஏற்பட்டு விட்டது. சென்னையில் 99, கேரளத்தில் 45, ஆந்திரத்தில் 10, மைசூரில் 44, இதர பிரதேசங்களில் 26, ஆக 224 கிளைகளையுடைய பெரிய ஸ்தாபனமாகக் கனரா பாங்கு இப்போது ஆகி விட்டது. அதிகக் கிளைகள் உள்ள பாங்கு என்ற ஜாபிதாவில் இந்தியாவிலேயே மூன்றாவது ஸ்தானத்தைக் கனரா பாங்கு இனி வகிக்கும். டெபாஸிட் தொகையைக் கணக்கிட்டுப் பார்த்தால், — பாங்கியின் உயர்வை இதைக் கொண்டுதான் கணிப்பது வழக்கம் — கனரா பாங்கு ஏழாவது ஸ்தானம் வகிக்கும்.



நிர்வாக டைரக்டர் திரு ஏ. தாமோதர பாய், பாங்குத் தொழிலில் ஊறித் திளைத்தவர். உதவிநிர்வாகஸ்தர்கள் அவரிடம் காட்டும் மரியாதையும் அன்புமே அவருடைய நிர்வாக மேன்மைக்குச் சான்று கூறுகின்றன.

கனரா பாங்கியின் வருங்காலம் மேன்மேலும் வளமுடையதாயிருக்கும் என்பதைச் சென்ற 57 ஆண்டு வளர்ச்சியும் இந்த ஆண்டின் கனரா — பாண்டியன் இணைப்பும் காட்டுகின்றன. — எம். எஸ். சிவஸ்வாமி





# கலை வளர்க்கும் கோயில்கள்

'ஆயிரம் பேரைக் கொன்றவன் ஒரு அரை வைத்தியன்' என்ற ஒரு போலிப் பொன்மொழி வெகுநாட்களாக நம்மிடையே ஒலிக்கப்பட்டு வருகிறது. காலத்தால் சிற்பங்களும் ஓவியங்களும் சிதைக்கப்பட்டு உருமாறுவது போல்தான் அசல் பொன்மொழி சிதைந்து இப்படி ஒரு போலி உருவம் பெற்றிருக்கிறது. 'ஆயிரம் வேரைக் கொன்றவன் ஒரு அரை வைத்தியன்' என்பதுதான் ஒரிஜினல் வார்த்தைக் கோவை. அதாவது குறைந்தபட்சம் ஆயிரம் மூலிகைகளின் வேர்களை எடுத்து ஆராய்ந்து அவைகளின் குணுதிசயங்களைப் பூரணமாகத் தெரிந்து கொண்ட பிறகே அரை வைத்தியனின் தகுதியை எட்டிப் பிடிக்க முடியும் என்பது அந்த வசனத்தின் உட்பொருள்.

நாட்டு வைத்திய முறைகள் மாறி நாகரிக பாட்டில் மருந்து, ஊசி முறைகள் அமுலுக்கு வந்திருக்கும் இந்த நாட்களில், வைத்தியராகத் தகுதி பெறும் ஒவ்வொரு மாணவனும் தன்னுடைய ஐந்தரை வருட மருத்துவப் படிப்புக் காலத்தில் குறைந்த பட்சம் இரண்டாயிரம் நோயாளிகளையாவது நேரடியாகப் பார்த்து, அந்த நோயாளிகளின் உடல் நிலையைத் தங்கள் ஆசிரியர்கள் விவரித்துச் சொல்லக் கேட்டு அதற்கான சிகித்சை முறைகளைச் சிந்தித்துப் பூரண மருத்துவனுகப் பரிணமித்து வெளியேவருகிறுன். மாணவிகளும் அப்படியே!



மேலே: சென்னை மருத்துவக் கல்லூரியின் டீன் (தலைவர்) கே. ஜி. கிருஷ்ணஸ்வாமி; உடற்கூறு சாஸ்திரம் பயிலும் மாணவர்கள். இடது கோடி: டாக்டர் குருசாமி முதலியார் சிலை.

முன்பு மருத்துவத் திறமையைப் பெற வேண்டியவர்கள் வேர்களைத் தேடிப் போனுர்கள். இப்போது அவர்கள் தங்கள் கல்லூரிகளுடன் இணைந்திருக்கும் ஆஸ்பத்திரியின் வார்டுகளில் படுத்திருக்கும் விதம் விதமான நோயாளிகளைச் சுலபமாகப் பார்த்துக் 'கற்றுக் கொள்ளுகிறுர்கள். சென்னையில் உள்ள பெரிய சர்க்கார் ஜெனரல் ஆஸ்பத்திரி சென்னை மருத்துவக் கல்லூரி, மாணவ மாணவிகளுக்கான சிறந்த பரிசோதனைச் சாலையாகவே திகழ்கின்றன.

இன்றைய சென்னை மருத்துவக் கல்லூரியின் வயது நூற்றி இருபத்தி எட்டு. முதன் முதலில் 1835-ம் ஆண்டில் மருத்துவப் பள்ளியாகத் தோன்றிய இந்த ஸ்தாபனம் 1850ம் ஆண்டிலேயே கல்லூரியின் அந்தஸ்தைப் பெற்றுவிட்டது. பதினெரு மாணவர்களுடனும் நான்கே ஆசிரியர்களுடனும் அன்று தொடங்கப்பட்ட இந்த மருத்துவப் பள்ளி இன்று ஏறத்தாழ ஆயிரத்து இருநூறு மாணவர்களுக்கு ஐம்பதுக்கு மேற்பட்ட புகழ்பெற்ற பேராசிரியர்களால் மருத்துவக் கல்வி போதிக்கக் கூடிய மாபெரும் கல்லூரியாக விளங்குகிறது. நாட்டில் இன்று புகழோடும், கைராசியோடும் பிரகாசிக்கும் பல மருத்துவ நிபுணர்களைத் தயாரித்தளித்திருக்கும் பெருமையையும் பெற்றிருக்கிறது. அன்று இரண்டு வகைப் படிப்பு, நான்கே பாட வகைகள். இன்று ஐந்தரை ஆண்டுப் படிப்பு. பத்துக்கு மேற்பட்ட பாடத் திட்டங்கள்.

சர்வகலாசாலையின் சட்ட திட்டத்துக்குள் இந்தக் கல்லூரி வருவதற்கு முன் மாணவர்கள் இந்த மருத்துவப் படிப்பை மேற்கொள்ள மிகவும் தயங்கி ஒதுங்கினுர்கள். வருங்கால வாய்ப்புக்களைச் சந்தேகக் கண்களோடு பார்த்தார்கள். ஆனுல் 1863-ம் ஆண்டில் சர்வகலாசாலையின் ஆட்சியின் கீழ் இந்தக் கல்லூரியின் பாடத் திட்டங்கள் வந்த பிறகு பல இளைஞர்கள் இந்தத் துறையை நாடிப் படிக்க வந்தார்கள்.

ஆனுல் 1875ம் ஆண்டில்தான் முதன் முதலாகப் பெண்மணிகளை இந்தக் கல்லூரியில் அனுமதிக்கும் வழக்கம் அமுலுக்கு வந்தது. அந்த நேரத்தில் இந்தியாவிலிருந்த மற்ற எந்த மருத்துவக் கல்லூரியும் துணிந்து செய்ய முன் வராத காரியம் அது. அப்போது சர்ஜன் ஜெனரலாக இருந்த பால்ஃபர் தான் அதற்குப் பொறுப்பாளி. இங்கிலாந்

# சென்னை மருத்துவக் கல்லூரி





இல்கூட மருத்துவக் கல்லூரியில் பெண்களை அனுமதிப்பதா வேண்டாமா என்ற விவாதம் கடுமையாக நடந்து கொண்டிருந்த காலம்! இந்தியா வழிகாட்டியது என்று கூடச் சொல்லலாம்.

பொது மருத்துவத் துறை (எம். பி. பி. எஸ்.) பல் வைத்தியத் துறை (பி. டி. எஸ்.) மருந்து தயாரிப்புத் துறை (பி. பார்மஸி) ஆகிய மூன்றும் முக்கியமாகக் கற்றுத் தரப்படும் பாடங்கள். இந்த மூன்றில் ஒன்றை இந்தக் கல்லூரிக்குள் நுழைய வாய்ப்புப்பெறும் மாணவன் விரும்பிப் படிக்கலாம். ஆனால் பொது மருத்துவத் துறைக்குத் தான் கிராக்கி அதிகம். இந்தக் கல்லூரியில் ஆண்டு ஒன்றுக்கு நூற்றி இருபது மாணவர்கள் எம். பி. பி. எஸ்ஸுக்கும், இருபது மாணவர்கள் பல் வைத்தியத் துறைக்கும் இருபத்தைந்து மாணவர்கள் மருந்து தயாரிப்புத் துறைக்கும் உத்தேசமாக அனுமதிக்கப்படுகிறார்கள். ஏமாற்றத்துடன் இடம் கிடைக்காமல் திரும்புபவர்கள் எத்தனையோபேர்கள்!

புகுமுக வகுப்பை வெற்றிகரமாகத் தாண்டிய பிறகுதான் மருத்துவக் கல்லூரிக்குள் நுழைய மனுப் போட முடியும். தாவரம், உயிரியல், பௌதிகம், ரசாயனம் ஆகிய பாடங்களில் நிறைய மார்க்குகளோ, விளையாட்டுத் துறைகளில் விசேஷப் பயிற்சியோ என். சி. சி. சமூக சேவை முதலிய பிரிவுகளில் தனித் திறமையோ உடைய மாணவ மாணவிகளுக்கு மருத்துவக் கல்லூரிக் கதவு சிக்கலில்லாமல் திறந்து நிற்கும். இடையே அவர்கள் ஒரு நேரடி 'இண்டர்வியூ'வையும் தாண்டியாக வேண்டும்.

எம். பி. பி. எஸ். பட்டப் படிப்பின் காலம் மொத்தம் ஐந்தரை ஆண்டுகள். பி. டி. எஸ். என்று குறிப்பிடப்படும் பல் வைத்தியத் துறைக்கான படிப்புக்கு ஐந்து ஆண்டுகள் தேவை. பி. பார்மஸி என்ற மருந்துத் தயாரிப்புத் துறைக்கு நான்கு வருடங்கள் போதும். ஆனால் இந்த மூன்று துறைகளுக்குமே முதல் வருடப் படிப்பு பொதுவானதுதான். முதல் வருட 'இன்டெகரேட்டட்' படிப்பு என்று இதைக் குறிப்பிடுகிறார்கள். இந்த வகுப்பில் மருத்துவத் துறைக்கான ஆதாரப் பாடங்களையும் கொஞ்சம் ஆங்கிலத்தையும் போதிக்கிறார்கள்.

ஐந்தரை ஆண்டு எம். பி. பி. எஸ். படிப்பை முடித்துப் பட்டம் பெறுபவர்கள் ஓர் ஆண்டு காலம் ஆஸ்பத்திரியில் 'ஹவுஸ் சர்ஜனு'கப் பணியாற்றிய பிறகுதான் முழு டாக்டராக வெளியேற முடியும். தொடர்ந்து ஆராய்ச்சிப் படிப்பில் ஈடுபட்டுச் சில விசேஷத் துறைகளில் எம். டி., எம். எஸ். பட்டங்கள் பெற விரும்புபவர்கள் இரண்டு வருட காலம் ஹவுஸ் சர்ஜன்களாக இருந்தாக வேண்டும். பிறகுதான் ஆராய்ச்சிப் படிப்பில் ஈடுபடலாம். இந்த 'ஹவுஸ் சர்ஜன் நிபந்தனை பல் வைத்தியத் துறைக்கோ, மருந்து தயாரிப்புத் துறைக்கோ கிடையாது!





சென்னை மருத்துவக் கல்லூரியின் ஒரு தோற்றம். புகழ்பெற்ற டாக்டர் ரங்காச்சாரியின் உருவச் சிலை.

ஏறத் தாழ முதல் மூன்று வருடங்கள் இவர்கள் வகுப்பு அறைகளில்தான் பாடம் கற்க வேண்டும். அதற்கு மேல் தான் பேராசிரியர்களுடன் ஆஸ்பத்திரி வார்டுகளில் உள்ள நோயாளிகளைப் போய்ப் பார்க்கும் தகுதியைப் பெறுகிறார்கள்.

இப்போது கல்லூரி டீனாகப் பணியாற்றுபவர் டாக்டர் கே.ஜி.கிருஷ்ணஸ்வாமி. அவர் மருத்துவ சாலைக்கும் தலைவர்; மருத்துவக் கல்லூரிக்கும் தலைவர். அவரைச் சந்திக்கப் போன வேளையில், "உங்களுக்கு எத்தனையோ அவசர வேலைகள் இருக்கலாம். வெகு குறைந்த அளவிலேயே உங்கள் நேரத்தை இந்தப் பேட்டிக்கு எடுத்துக் கொள்ளலாம் என்று நினைக்கிறேன்" என்று ஆரம்பித்த போது அவர் அளித்த பதில் சிந்தனையைத் தூண்டுவதாக இருந்தது. "டாக்டர்கள் எந்தக் காரியத்திலும் அவசரப்படக்கூடாது. நேரக் குறைவு என்பதற்காக அவர்கள் ஒரு ஆபரேஷனைச் சீக்கிரம் முடிக்க நினைக்கலாமா? ஓர் உயிரைக் காப்பாற்றும் பொறுப் பல்லவா அங்கு இருக்கிறது? டாக்டர்கள் சிந்தனையிலோ, செயலிலோ அவசரத்தைக் காண்பிப்பது அவர்கள் தொழிலுக்கு உகந்ததல்ல!" என்றார்.



மாணவர்களின் பிரதிநிதி திரு பிரசாத்தும், கல்லூரிச் சஞ்சிகை ஆசிரியர் திரு நமசிவாயமும்.

டாக்டர் கிருஷ்ணசாமி மாணவர்களின் நன்மதிப்புக்குப் பாத்திரமான ஒரு சிறந்த மருத்துவப் பேராசிரியர்.

மாணவர்களின் பிரதிநிதியான திரு பிரசாத்தும், இன்முகமும் ஆர்வமும் உள்ள இளைஞர்.

சென்னை மருத்துவக் கல்லூரி மாணவர்கள் சார்பில் வெளியாகும் கல்லூரிச் சஞ்சிகை, தமிழ் நாட்டு முக்கிய பத்திரிகைகள் தயாரித்து விநியோகிக்கும் தீபாவளி மலர்கள் போலவே அமைந்திருக்கிறது. மருத்துவத் துறை சம்பந்தமான விசேஷ ஆராய்ச்சிக் கட்டுரைகளுடன், மாணவ மாணவிகளின் கற்பனை வண்ணத்தையும் கணிசமாகவே காண முடிகிறது. தமிழில் வெளியாகும் விஷய தானங்களுக்காக நிறையப் பக்கங்கள் ஒதுக்குகிறார்கள். மாணவ ஆசிரியர் திரு நமசிவாயம் இந்த ஆண்டு கல்லூரி சஞ்சிகையை அவர்கள் மரபுப்படி கொண்டு வரும் முயற்சியில் தீவிரமாக ஈடுபட்டிருக்கிறார். கடந்த ஆண்டு சஞ்சிகை ஒன்றில் டாக்டர் டி. ராமகிருஷ்ணன் என்பவர் ஒரு மூட்டைப்பூச்சி மருந்து குடித்த கேஸைப் பற்றி விசாரித்த ரிப்போர்ட் படிப்பதற்கு வெகு சுவாரஸ்யமாக இருக்கிறது. இப்போதுதான் தினசரி குறைந்தபட்சம் இரு 'பக் பாய்ஸன்' கேஸ்கள் சென்னை மருத்துவ நிலையத்தின் 'காஷுவாலிட்டி' வார்டுக்கு வந்து சேருகின்றனவே!

**மாணவர்களுக்கான ஹாஸ்டலும், மாணவிகளுக்கான ஹாஸ்டலும் தனித் தனியே சமீப காலத்தில் எழுந்து நிற்**கும் கம்பீரமான கட்டிடங்கள். அறுநூறுக்கும் மேலான மாணவர்கள் ஹாஸ்டலில் வசிக்கிறார்கள். சுமார் நூற்றைம்பது மாணவிகள் ஹாஸ்டல் வாசத்தை மேற் கொண்டிருக்கிறார்கள்.

தமிழ் நாட்டின் மூலைவிருந்து வந்து இந்தக் கல்லூரியில் படிக்கும் ஒரு சீனியர் மாணவரிடம் அவர் டாக்டராகக் கிராமாந்தரப் பகுதிகளில் போய்ப் பணி செய்யத் தயாரா யிருக்கிறாரா என்று கேட்டதற்கு அவர் ஒரு புள்ளி விவரப் பிரசங்கத்தையே பதிலாகக் கொடுத்தார். அவருடைய ஆராய்ச்சியின் விளைவு இந்தப் புள்ளி விவரம்.

"பாரதத்தில் சுமார் எண்பதினாயிரம் டாக்டர்கள் - இருக்கிறார்கள். பாரதத்தின் நகரங்கள் இருபது சத விகிதம். கிராமங்கள் எண்பது சதவிகிதம். ஆனால் நகரத்தில் தொழில் நடத்தும் டாக்டர்கள் எண்பது சதவிகிதம். கிராமங்களில் தங்கும் டாக்டர்களின் இருபது சத விகிதம்தான். எங்களிடையே எடுத்துக்கொள்ளுங்கள். கிராமப் பகுதிகளிலிருந்து வந்து படிக்கும் பல மாணவர்கள் விடுமுறைகளுக்குக் கூட ஊருக்குப் போக மனமில்லாமல் நகரத்தில் தங்க ஆரம்பிக்கிறார்கள். கிராம வாழ்க்கை 'போர்' அடிக்கிறதாம். படிப்பு முடியும்போது இந்த 'போர்' உணர்ச்சி பூரணத்வம் பெற்று அவர்களை நகர வாழ்க்கைக்கே தயாராக்கி விடுகிறது" என்றார். ஆழம் நிறைந்த கருத்தாகத்தான் தோன்றுகிறது.

'மெட்டீரியா மெடிக்கா' என்னும் பாடப் பிரிவுக்கு முதல் இந்தியப் பேராசிரியராக இந்தக் கல்லூரியில் நியமிக்கப்பட்டவர் காலம் சென்ற மருத்துவ மேதை டாக்டர் எம். ஆர். குருஸ்வாமி முதலியார் அவர்கள். அதற்கு முன் ஐரோப்பியர்கள்தான் அந்தப் பதவிக்கு லாயக்கு என்று கருதப்பட்டு வந்தார்கள். அதேபோல் இந்தக் கல்லூரிக்கு முதல் இந்திய முதல்வராக அமர்ந்தவர் டாக்டர் லட்சுமணஸ்வாமி முதலியார்தானும்! இப்போது சென்னை சர்க்கார் மருத்துவத் துறைத் தலைவராகப் பணியாற்றும் டாக்டர் (குமாரி) மரக்காயர் இந்தக் கல்லூரியில் பேராசிரியராகப் பணியாற்றியவர். இந்தியாவிலேயே, ஏன், உலகிலேயே புகழ் பெற்ற சில டாக்டர்கள் இந்தச் சென்னை மருத்துவக் கல்லூரியில் பேராசிரியர்களாகப் பணியாற்றுகிறார்கள். அவர்களுடைய தயாரிப்புக்களான இன்றைய மாணவ மாணவிகள் வருங் காலத்தில் பெரும் புகழும் அடைவார்கள் என்பதில் சந்தேகமில்லை! **டாக்டர் ரங்காச்சாரியின் ஓர் உதாரணம் போதாதோ?**

# கற்பகம்

நல்லசிவம் ஒரு பெரிய மிராசுதார். அவருக்கு ராஜாங்கம் என்றொரு மகன். கற்பகம் என்றொரு மகள். நல்லவனும் உழைப்பாளியுமான சுந்தரத்துக்குக் கற்பகத்தை மணம் முடித்து வைக்கிறார் நல்லசிவம். ராஜாங்கம் பட்டணத்துப் பகட்டுப் பெண்ணைத் தந்தையின் விருப்பத்துக்கு மாறாக மணந்து கொள்கிறான். அப்பெண்ணின் தந்தை ஒரு பேராசைக்காரன். தந்தைக்கும் மகனுக்கும் இடையே தகராறைக் கிளப்பிப் பிளவை உண்டாக்கி விடுகிறான். அவனுக்கு ஒரு குழந்தை பிறக்கிறது. அது கற்பகத்திடம் ஒட்டிக் கொள்கிறது. அந்தக் குழந்தையைக் காளை மாட்டிடமிருந்து காப்பாற்ற முற்பட்டுக் கற்பகம் உயிர் துறக்கிறாள்.

இதுவரையில் தான் கதை புதிது. அப்புறம் கதை பழைய, பழைய, மிகப் பழைய கதிக்குச் சென்று விடுகிறது. அமுதாவை இரண்டாந் தாரமாக மணந்து கொள்ளும் சுந்தரம் ராஜாங்கத்தின் குழந்தையைத் தன்னிடம் வைத்துக் கொண்டு அதன் காரணமாக அமுதாவைக் கண்ணீர் விடச் செய்கிறான்.



குழந்தையைப் பெற்ற பட்டணத்துப் பெண்ணை அவ்வளவு கொடியவளாகக் காட்டியிருக்க வேண்டாம். அவள் கணவனை மதிக்கவில்லை; குழந்தையிடமும் அன்பாயில்லை.

நடிப்பின் முதலிடம் எஸ். வி. ரங்காராவுக்குத்தான் கிடைக்கிறது. நல்லசிவம் இல்லையென்றால் நல்ல நடிப்பில்லை; திரைக் கதைக்கு உயிரும் இல்லை. அமுதாவைச் சுந்தரத்துக்கு இரண்டாம் தாரமாக மணம் முடித்து வைக்க முயன்றபோதும், பிறகு அமுதாவின் துயரத்தைக் கண்டு உருகியபோதும் அவர் நடிப்பு நடிப்பாகவேயில்லை. அந்தப் பாத்திரத்தையே நம் கண் முன் கொணர்ந்து நிறுத்துகிறார்.



அமுதாவின் பாத்திரம் அலுத்துப் போன பழைய இரண்டாந் தாரமானாலும் சாவித்திரியினால் அது புத்துயிர் பெற்று விடுகிறது! கற்பகத்தின் முதல் இரவு தினத்தில் ''ஆயிரம் இரவுகள் வருவதுண்டு'' என்று அமுதா பாடும்போது சாவித்திரியின் முக பாவங்கள் அற்புதமாயிருக்கின்றன. சுந்தரத்தை மணந்த பிறகு அத்தனை துடிப்பையும் எங்கே மறைத்துக் கொண்டாரோ சாவித்திரி! என்ன அடக்கம், என்ன பதவிசு, என்ன குடும்பப் பாங்கு!

புது முகம் கே. ஆர். விஜயாவுக்கு நல்ல நல்ல சந்தர்ப்பங்கள் அளிக்கப் பட்டிருக்கின்றன. அவர் நடிப்பும் பரவாயில்லை.

ஜெமினி கணேசனின் நடிப்பு படம் முழுவதும் பரிமளிக்கிறது. பாத்திரத்தின் தன்மைக்கேற்ப நடை, உடை பாவனை ஆகியவற்றையெல்லாம் மாற்றிக் கொண்டு ஏற்ற பாத்திரத்துக்கும் ஏற்றம் அளித்து விட்டார்.

ஷீலாவும் கடைசிவரையில் கடுகடுப்பும் வெறுப்பும் காட்டியே ஒப்பேற்றி விடுகிறார்.

குழந்தை நட்சத்திரம் ஷகிலா ''கற்பக''த்துக்கே தனிச் சிறப்புத் தரும் வகையில் நடிக்கிறாள். குழந்தை பாட்டுப் பாடும் அழகு அற்புதம்.

கர்ணனின் ஒலிப்பதிவு நன்றாக இருக்கிறது.

போக்கிரிகள் சுந்தரத்தைக் கொன்று விடுவதாகப் பயமுறுத்தும் கட்டத்தில் அமுதா தன் தந்தையிடம் சென்று அவர் சொத்து முழுவதையும் ராஜாங்கத்தின் பெயருக்கு எழுதி வைத்து விடும்படி வேண்டிக் கொள்வதும், அப்பொழுதுகூட ரிடையர்டு கலெக்டர் போலீசுக்கு ரிப்போர்ட் எழுதாமல் குழம்புவதும் உண்மை வாழ்க்கைக்குப் பொருந்தாத சினிமா அசம்பாவிதங்கள்!

''அத்தை மடி மெத்தையடி'', ''மன்னவனே அழலாமா?'' என்ற பாடல்கள் செவிக்கு இனிமையாக இருக்கின்றன.

எல்லாருக்கும் தெரிந்த கதை, சாதாரணக் குடும்பக் கதை ''கற்பகம்'' டைரக்டர் கே. எஸ். கோபாலகிருஷ்ணனின் திறமையான டைரக்ஷனால் சிறந்த படமாக உருவாகி யிருக்கிறது.

— காந்தன்

கூடுதலான பாதுகாப்பிற்கும்,
அதிகமான மைலேஜ் ஓட்டத்திற்கும்,
சுகமான சவாரிக்கும்




# இந்தியா சூப்பர்

நவீனமான கார்களுக்கேற்ற மிகச் சிறந்த டயர்

இந்தியா டயர் & ரப்பர் கம்பெனி(இந்தியா)பிரை. லிட்.,

Maa. IT. 1895 TAM



# நிமிஷக் கதைகள்

முழுச் சோம்பேறி ஒருவன் சென்று கொண்டிருந்தான். தரையில் ஏதாவது கிடக்கிறதா என்று பார்த்தபடி அவன் சென்று கொண்டிருந்தான். பாவம், காலணாக்கூடக் கிடைக்கவில்லை. உடனே கடவுளிடம் இப்படி வேண்டிக் கொண்டான்: 'கடவுளே! இன்று எனக்கு என்ன கிடைத்தாலும் அதில் பாதி உனக்குத் தந்து விடுகிறேன்!'

கொஞ்ச தூரம் அவன் நடந்ததும் வழியில் ஓர் எட்டணா நாணயம் கிடந்தது. அதைக் கையில் எடுத்துக் கொண்டவன், 'கடவுள் ரொம்பக் கெட்டிக்காரர். நான் எங்கே அவரை ஏமாற்றி விடுவேனோ என்ற பயம் அவருக்கு. கீழே ஒரு ரூபாய் கிடந்திருக்கிறது. அதில் தன் பங்குக்குரிய எட்டணாவை எடுத்துக் கொண்டு எனக்கு எட்டணாவைப் போட்டு விட்டார்! என்ன இருந்தாலும் கடவுள் இல்லையா?' என்று கூறியபடி அருகிலிருந்த ஒரு ஹோட்டலை நோக்கி நடந்தான்.

ஃ ஃ ஃ

ஒரு சிறுவன் நான்கைந்து கழுதைகளைத் தெரு வழியாக ஓட்டிச் சென்று கொண்டிருந்தான். அப்போது அவ்வழியே சில இராணுவத்தினர்கள் வந்தார்கள். அவர்களில் ஒருவன் சிறுவனை நோக்கி, ''தம்பி! உன் அண்ணன்மார்களையெல்லாம் எங்கே இழுத்துச் செல்கிறாய்?'' என்று கேட்டான்.

உடனே அச்சிறுவன், ''என் அண்ணன்மார்கள் சொல்லாமல் கொள்ளாமல் இராணுவத்தில் சேரப் போய் விட்டார்கள். அவர்களை இழுத்துச் செல்கிறேன் வீட்டுக்கு!'' என்றான்.

ஃ ஃ ஃ

மனைவி: ''ஒரே கேள்வி; ஒரே கேள்வி, எந்தன் நெஞ்சிலே!''

கணவன்: ''ஒரே பதில், ஒரே பதில் எந்தன் நெஞ்சிலே !''

கேள்வி: தீபாவளிக்குப் பட்டுப் புடவை? பட்டுப் புடவை?

பதில்: இல்லை! இல்லை! இல்லை!

ஃ ஃ ஃ

மலை மீது செல்லும் குறுகிய ரோடு அது. ஏககாலத்தில் ஒரே ஒரு கார் மட்டும்தான் செல்லவோ வரவோ முடியும். அவ்வளவு குறுகலான ரோடு. அந்தக் குறுகலான பாதையில் ஒரு கோடீசுவரரின் படகு போன்ற நீளமான கார் சென்று கொண்டிருந்தது. மிகவும் விலையுயர்ந்த கார் அது.

கார் குஷாலாய்ச் சென்று கொண்டிருந்த போது எதிரே ஒரு கார் வந்து விட்டது. ஒன்றை ஒன்று கடந்து செல்ல விடாதபடி ரோடு மிகவும் குறுகலாக இருந்தது அங்கே. கோடீசுவரர் தம் காரை விட்டு இறங்காமலே அந்தக் காரைப் பின்னாலேயே போகும்படி கூறினார். எதிரே வந்த காரின் சொந்தக்காரர் அதற்கு உடன்படவில்லை. கோடீசுவரரின் காரையே பின்னால் செல்ல வேண்டும் என்று கூறினார்.

கோடீசுவரர் அதற்கு இசையவில்லை. அங்கேயே எதிரே வந்த காரை விலை பேசினார். பேரம் பேசவில்லை. உடனே அக்காரின் விலைக்கு ஒரு 'செக்' எழுதி எதிரே வந்த கார் சொந்தக்காரரிடம் கொடுத்தார். பிறகு தம் டிரைவரைக் கொண்டு தாம் வாங்கிய அக்காரை ரோட்டிலிருந்து உருட்டி அருகில் இருந்த பள்ளத்தாக்கில் விழச் செய்தார்.

ஃ ஃ ஃ

மலையடிவாரத்தில் ஓடிக் கொண்டிருந்தது ஒரு பஸ். அதில் இரண்டு பெண்மணிகள் அமர்ந்திருந்தனர். அவர்களிடையே திடீரென்று சச்சரவு ஏற்பட்டது.

''ஜன்னலை இழுத்து மூடு! குளிர் காற்றடிக்கிறது. நான் விறைத்து இறந்து போய் விடுவேன்!'' என்றாள் ஒருத்தி.

மற்றவளோ, 'ஜன்னலை இழுத்து மூடவா? சரியாய்ப் போச்சு, போ! காற்றில்லாமல் நான் மூச்சு முட்டி இறந்து போய் விடுவேன்!' என்றாள்.

எதிரே யிருந்த மனிதரால் அந்தப் பெண்மணிகள் போடும் கூச்சலைச் சகிக்க முடியவில்லை. அவர் மிகவும் பொறுமை இழந்து விட்டார். ''முதலில் ஜன்னலை இழுத்து மூடு, கண்டக்டர். ஒருத்தி காற்றில்லாமல் மூச்சு முட்டிச் சாகட்டும்! அப்புறம் ஜன்னலை திறந்துவிடு! இன்னொருத்தி குளிர் காற்றில் விறைத்துச் சாகட்டும்! பிறகாவது கொஞ்சம் சத்தமில்லாமல் அமைதியாக இருக்கலாமோ, பார்ப்போம்!'' என்றார்.

ஃ ஃ ஃ

தலை தீபாவளிக்கு வந்த மாப்பிள்ளை: ''இந்த வருஷம் எல்லாம் இரண்டிரண்டு வருகிறதே! தலை தீபாவளியையும் இரண்டாகக் கொண்டாட ஏற்பாடு செய்திருக்கக் கூடாதோ?''

ஃ ஃ ஃ

மூன்று சகோதரர்களுடன் பிறந்த இரண்டாவது பிள்ளையின் புலம்பல் இது:

''இந்த அம்மா சுத்த மோசம்! பெரிய வேலை ஏதாவது செய்ய வேண்டியிருந்தால் பெரிய பிள்ளைகள் இருவரும் செய்யட்டும் என்கிறாள். சின்ன வேலையானால் கடைசி இரண்டு பேரும் செய்யட்டும் என்கிறாள். கடைசியில் இரண்டையும் நான்தான் செய்ய வேண்டியதாகிறது!'' — கே. வி.



TRAYONS

# ட்ரேயான்ஸ் ட்ரேயோபேன் கொண்டு பாக் செய்தது.
## உங்கள் விற்பனையை பன்மடங்கு அதிகமாக்குகிறது



ஒரு பொருளை வாங்கு முன், அதைக்கையிலெடுத்து நன்கு பரிசீலனை செய்யாமல் யாரும் முடிவுக்கு வருவதில்லை. வாடிக்கைக்காரரின் பரிசீலனைக்கேற்ப, கைக்கெட்டியவாறு பொருள்களைக் கடையில் வைப்பது சிறந்த முறைதான். ஆனால், அடிக்கடி கைபடுவதால் பொருள்களின் மேல் அழுக்கும், கறைகளும் பட்டு விடுகிறது. பிறகு அதை வாங்குவார் யார்? இக்காரணத்தினால்தான் பெரும்பாலான உற்பத்தியாளர்கள் தம் பொருள்களை ட்ரேயான்ஸ் ட்ரேயோபேன் கொண்டு பாக் செய்கின்றனர்

ஸ்டாக்கிஸ்டுகள் :

**ரேயான் டிரேடர்ஸ் பிரைவேட் லிமிடெட்**

61, செம்புதாஸ் தெரு, சென்னை-1.
போன் 21641 தந்தி CELYARN.

கிளைகள்: போன் 3253-தந்தி CELYARN 68/416 மெயின் ரோடு, செவ்வாய்ப்பேட்டை, சேலம்.
போன் 2598-தந்தி CELYARN 114/A, தெற்கு மாசி வீதி, மதுரை.
போன் 4425-தந்தி RAYONS இந்தியா லைப் பில்டிங் திருச்சி ரோடு, கோயமுத்தூர்

RT 32-5A

நாடாண்ட நங்கையர்

# ஆண் கோலத்தில் ஆண்ட அரசி

சரித்திர மாணாக்கன்

உலகத்திலேயே முதன் முதலாக நாட்டாண்ட ஒரு நங்கையை எகிப்து தேச சரித்திரத்தில் சந்திக்கிறோம். இவள் பெயர் ஹாஷெப்ஸுட்; ஹடாஸு என்றும் சுருக்கமாக அழைப்பார்கள் இவள் பெண்ணாகப் பிறந்து விட்டபோதிலும் ஆண்போல இருந்து அரசாட்சி நடத்தினாள். எப்படியென்று பார்ப்போம்.

கிறிஸ்து பிறப்பதற்குச் சுமார் முப்பத்தைந்து நூற்றாண்டுகளுக்கு முன், எகிப்து ராஜ்யம், செல்வச் செழுமையிலும், பொருள் பெருக்கத்திலும், கலை வளத்திலும், உலகத்தார் வியக்கும்வண்ணம் மேலோங்கி நின்றது. இந்தக் காலத்தில் தூட்மோஸே என்ற ஓர் அரசன் ஆண்டு வந்தான். இவனை முதலாவது தூட்மோஸே என்று சரித்திரம் அழைக்கிறது. ஏனென்றால், இவனுக்குப் பிறகு, இதே பெயரைத் தாங்கிக் கொண்டு மூன்று நான்கு அரசர்கள் ஆண்டு வந்தார்கள். அவர்களுக்கு இரண்டாவது மூன்றாவது முறையே எண்ணிக்கை கொடுத்து அழைப்பது சரித்திர சம்பிரதாயம்.

இந்த முதலாவது தூட்மோஸே, சிறந்த ராஜ தந்திரி; நாடு பெருக்கவேண்டும் என்பதில் ஆசை கொண்டவன்; ஆசியா கண்டத்தின் கிழக்குப் பக்கத்திலுள்ள சில நாடுகளின் மீது படையெடுத்துச் சென்று, வெற்றி கண்டு, அந்த நாடுகளை எகிப்து சாம்ராஜ்யத்துடன் இணைத்துக் கொண்டான்

இவனுக்குச் சொந்த மனைவியின் மூலம் ஒரு மகளும் ஒரு மகனும் பிறந்தார்கள் ; வைப்பாட்டியின் மூலம் ஒரு மகன் பிறந்தான். ஆகமொத்தம் மூன்று பேர். மூத்த பெண்தான் ஹடாஸு. வைப்பாட்டிக்குப் பிறந்த மகனும் பிற்காலத்தில் ஆளும் உரிமை பெற்றான்.

எகிப்தில் அதிசயமான வழக்கம் ஒன்று உண்டு. அதாவது, தந்தை மகளை மணந்து கொள்வான்; சகோதரன் சகோதரியை மணந்து கொள்வான். இந்த வழக்கம் பெரும்பாலும் அரச வமிசத்திலேயே நிலவி வந்தது. காரணம், அரச வம்சத்தின் தூய்மையைக் காப்பாற்ற வேண்டும் என்பது தான். அந்நியர்களுடன் ரத்தக் கலப்பு ஏற்பட்டால், நாளாவட்டத்தில் அந்தத் தூய்மை மங்கி மாண்டு போகுமென்று கருதப்பட்டது.

முதலாவது, தூட்மோஸே, கி. மு. 1545 முதல் 1514ம் வருஷம் வரை, சுமார் முப்பது வருஷ காலம் ஆண்டான் இவன், தன் கடைசி நாட்களில், தன் மகள் ஹடாஸுவை மணந்து கொண்டான்; தன்னோடு சேர்ந்து ஆளும் உரிமையை இவளுக்கு அளித்தான்.

அந்தக் காலத்தில் எகிப்தில், பெண்களுக்குச் சொத்துரிமை உள்படச் சகல உரிமைகளும் அளிக்கப்பட்டிருந்தன. விவசாயம், தொழில், அரசியல் இப்படிப் பல துறைகளிலும் ஆண்களும் பெண்களும் சம பங்கெடுத்துக் கொண்டார்கள். ''நைல் நதி பாயும் எகிப்தில் பெண்களுக்குச் சட்ட ரீதியாக உயர்ந்த ஸ்தானம் அளிக்கப்பட்டிருந்ததைப் போல், முற்காலத்திலோ, தற்காலத்திலோ உலகத்தில் வேறெந்த நாட்டிலும் அளிக்கப்பட்டிருக்கவில்லை'' என்று மாக்ஸ்முல்லர் என்ற அறிஞன் கூறியிருக்கிறான்.

இருந்தாலும், பெண்கள் தனியாக அரச பதவியில் அமர்ந்து ஆட்சி செலுத்தக் கூடாது. அப்படி ஆட்சி செலுத்த வேண்டும் என்று அவள் விரும்பினாலும் சரி, அல்லது அவள் ஒருத்திக்கே ஆளும் தகுதியிருந்தாலும் சரி, அவள் பெயரளவுக்காவது ஓர் ஆண் மகனைக் கூட்டாக வைத்துக் கொண்டுதான் ஆள வேண்டும் என்ற கருத்தைப் பொது மக்கள் கொண்டிருந்தார்கள். இந்தக் கருத்து, நடைமுறையில் கண்டிப்பாக இருந்து வரவேண்டும் என்றும் அவர்கள் விரும்பினார்கள்.

ஜனங்களின் இந்த மனப் போக்கை, ஹடாஸு, தான் முதலாவது தூட்மோஸேயுடன் சேர்ந்து ஆளும் உரிமையைப் பெற்ற சிறிது காலத்துக்குள்ளேயே தெரிந்து கொண்டாள். அவர்களுடைய மனப்போக்கை அநுசரித்தே நடந்து கொள்ளத் தீர்மானித்தாள்.

ஹடாஸு, ஆளும் உரிமை பெற்ற சொற்ப காலத்துக்குள், தந்தையும் கணவனுமான முதலாவது தூட்மோஸே இறந்து விட்டான். அவனுக்குப் பிறகு ஹடாஸு, தன் அடுத்த சகோதரனை இரண்டாவது தூட்மோஸேயை மணந்து கொண்டு அவனுடன் சேர்ந்து ராஜ்யபாரம் நடத்தினாள். ஆனால் அவன் இவளுடைய கணவனாக இருக்கத் தகுதியற்றவனாக இருந்தான். அவனிடத்தில் இவளால் இன்பம் நுகர முடியவில்லை. அவனும் மூன்று வருஷங்களுக்குப் பிறகு இறந்து விட்டான். இவளே அவனை இறக்குமாறு செய்து விட்டாள் என்று வரலாறு கூறுகிறது.

பிறகு அவனுக்கு அடுத்த சகோதரனை மூன்றாவது தூட்மோஸே என்பவனை மணந்து கொண்டு அவனோடு சேர்ந்து ஆளத் தொடங்கினாள்.

அந்த மூன்றாவது தூட்மோஸே வயதில் இவளுக்கு மிகவும் இளையவனாக இருந்தான். பெயரளவுக்கு அவனைக் கணவனாக வைத்துக் கொண்டு, தானே சுயமாக ஆளத் தொடங்கினாள். அரசாங்கத்தின் சார்பில் வெளியிடப்பட்டு வந்த எந்த ஒரு பிரகடனத்திலும் தனக்கு முதல் ஸ்தானம் இருக்கும்படி செய்து கொண்டாள்.

இப்படித் தன்னிச்சையாக ஹடாஸு நடந்து கொள்வதை மூன்றாவது தூட்மோஸேவினால் சகித்துக் கொண்டிருக்க முடியவில்லை. இருவருக்கும் அடிக்கடி மனஸ்தாபங்கள் ஏற்பட்டு வந்தன. கடைசியில் இருவரும்

பிரிந்து விடுவது என்ற முடிவுக்கு வந்தார்கள். அப்படியே தூட்மோஸே பிரிந்து சென்று ஒரு கோயிலில் பூசாரியாகப் பணியாற்றி வந்தான். மீண்டும் தனக்கு அரச பதவி கிட்டும் என்ற நம்பிக்கையில் தான் ஆண்டவன் தொண்டில் ஈடுபட்டுக் காலத்தைக் கழித்து வந்தான்.

இப்படி அவன் தன்னை விட்டு அகன்று போனது ஹடாஸுவுக்கு மிகவும் நல்லதாகப் போயிற்று. உண்மையில் இவள்தான் அவனை விரட்டி விட்டாள் என்று சொல்ல வேண்டும்.

அரச பீடத்தில் அமரும் ஒவ்வோர் அரசனும், சூரியக் கடவுளின் மகன் என்ற நம்பிக்கை எகிப்தியர்களிடத்தில் வேரூன்றியிருந்தது. இந்த நம்பிக்கைக்கு மதிப்புக் கொடுக்கின்ற முறையில், ஹடாஸு, தன்னைப் பற்றி ஒரு கதை கட்டி விடும்படி செய்தாள்; தன்னுடைய வாழ்க்கை வரலாறாக ஒரு நூலையும் எழுதச் செய்தாள். கதை என்னவென்றால், ஹடாஸுவின் தாயார் ஆஹ்மாஸி என்பவளுடைய கனவில் ஒரு நாள் சூரியக் கடவுள் தோன்றி, ''அம்மே, உனக்குச் சீக்கிரத்தில் ஒரு பெண் மகவு பிறக்கப் போகிறது; அந்தப் பெண் தெய்வ சக்தி பெற்றவளாக விளங்கப் போகிறாள்'' என்று கூறிவிட்டுப் போனாராம். இப்படிக் கதை கட்டி விட்டு, தான் ஆணப்பிறந்தவள் என்பதை மக்கள் நம்பும்படி செய்து கொண்டாள்.

தவிர, ஆண்கள் தான் அரச பதவியில் அமர்வதற்குத் தகுதி படைத்தவர்கள் என்ற நம்பிக்கை ஜனங்களிடத்தில் ஏற்பட்டிருந்த தல்லவா? அதை அனுசரித்து, தன்னை ஓர் ஆண் மகனாகவே காட்டிக் கொண்டாள். அதாவது ஆண் மகனைப் போல் உடையணிந்து கொண்டும், மார்பை மறைத்துக்கொள்ளும்படி நீண்டதொரு பொய்த் தாடியும் அதற்கேற்ற மீசையும் வைத்துக் கொண்டும் அரச பீடத்தில் அமர்ந்து அன்றாட அலுவல்களை நடத்தி வந்தாள். அரச காரியமாக வெளியில் எங்கு செல்ல நேரிட்டாலும் இந்த ஆண் கோலத்துடனேயே செல்வாள். அப்பொழுது இவளைப் பார்த்தால் அசல் ஒரு போர்வீரனைப் போலவே தோன்றும்.

இவற்றோடு திருப்தியடையாமல், இவள் தன்னுடைய உருவத்தை இந்த ஆண்கோலத்திலேயே தான் எழுப்பிய மண்டபங்கள், ஸ்தூபிகள் முதலியவற்றில் பொறிக்கச் செய்தாள். இவள் காலத்தில் வெளியான சாஸனங்கள், பிரகடனங்கள் முதலியவை இவளை, 'சூரியக் கடவுளின் மகன்' என்றும், 'நாட்டுக்கு அரசன்' என்றும் அழைக்கின்றன.

ஹடாஸு, சமாதானம் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு ஆட்சிநடத்தினாள். இவள் ஆட்சியின் கீழ், ஜனங்கள் மன நிம்மதியும், வாழ்க்கையில் நிறைவும் பெற்று வாழ்ந்தார்கள். மற்றும் இவள், வெளி நாடுகளுடன் நல்லுறவு கொள்ள, அநேக கப்பல்களைக் கட்டச் செய்து, அவற்றில் எகிப்



தில் விளையும் பலவிதப் பொருள்களை ஏற்றி அனுப்பச் செய்தாள். மத்தியதரைக் கடலோரமாக உள்ள சில நாடுகளுக்கும், ஆப்பிரிக்காவின் கிழக்குப் பகுதியிலுள்ள சில நாடுகளுக்கும் வியாபார கோஷ்டிகளையும் அனுப்பினாள். மற்றும் இவள் காலத்தில், இந்தியாவுக்கும் எகிப்துக்கும் வியாபாரப் போக்குவரத்து இருந்ததாகத் தெரிகிறது. வெளிநாடுகளிலிருந்து, சிறப்பாக ஆப்பிரிக்காவின் கிழக்குப் பகுதியிலிருந்து இறக்குமதியான பல வகை மரங்கள், மிருகங்கள், வாசனைப் பொருள்கள், தந்தம் முதலியவை எகிப்தின் மார்க்கெட்டுகளை நிரப்பின என்றும், இவை ஜனங்களின் சுகபோக வாழ்க்கைக்குப் பெரிதும் உதவின என்றும் ஒரு வரலாறு கூறுகிறது.

மற்றும் ஹடாஸு, எகிப்தின் முக்கியமான நகரங்களில் அழகான கோயில்களையும் சதுர வடிவான ஸ்தூபிகளையும் கட்டச் செய்தாள். அவற்றில் எகிப்தின் பெருமைகளை விளக்கும் அநேக சிற்பங்களைப் பொறிக்கச் செய்தாள். இப்படிப் புதிய கட்டடங்கள் கட்டியதோடு, சிதிலமாகிப் போன அநேக பழைய கட்டடங்களையும் புதுப்பித்தாள். சுருக்கமாக, எகிப்தை ஒரு சிற்பக் களஞ்சியமாக்கிவிட வேண்டும் என்பதே இவள் நோக்கமாக இருந்தது.

ஹடாஸு, இப்படி எல்லா வகையிலும் ஓர் ஆண் மகனைப் போலவே நடந்து வந்தாளாயினும், இவள் மனம் என்னவோ அடிக்கடி காதல் சோலைக்குச் சென்று வந்தது. தான் கட்டுவித்த கோயில் ஒன்றில் சிற்பியாக வேலை செய்து கொண்டிருந்த ஒருவன் மீது காதல் கொண்டாள்.

இப்படி இவள் ஒரு சிற்பியின் மீது காதல் கொண்டு வாழ்ந்து வந்தது, பூசாரிப் பணியாற்றி வந்த இவளுடைய சகோதரனும் முன்னாள் கணவனுமாயிருந்தவனுமான மூன்றாவது தாட்மோஸேயிக்குத் தெரிந்தது. அந்தச் சிற்பியைக் கொலை செய்து விட்டான். இதனோடு ஹடாஸுவின் காதல் நாடகம் முடிந்து விட்டது.

சிறிது காலத்துக்குப் பிறகு இறந்து போனாள்; ஹடாஸு ஆண்டது கி. மு. 1501 முதல் 1479ம் வருஷம் வரை, இருபத்திரண்டு வருஷ காலம். இந்தக் காலத்தை எகிப்தின் பொன்னான காலம் என்று சொல்ல வேண்டும்.





# வீட்டுக்காரய்யா காப்பாற்றுங்கள்!




**ப**க்கத்துப் போர்ஷனில் இருக்கும் குடித்தனக்காரர் மிகுந்த கோபாவேசத்துடன் வீட்டுக்காரரிடம் வந்தார்.

''சார்! நீங்கள் வீட்டுக்காரர் தானே?''

''ஆமாம்!''

''நான் குடித்தனக்காரன் தானே?''

''ஆமாம்!''

''நான் ஒழுங்காக வாடகை கொடுக்கிறேனு, இல்லையா?''

''மாதம் தவறினாலும் உங்கள் வாடகை தவறுவது இல்லையே!''

''நான் எப்பொழுதாவது வீட்டுக்கு வெள்ளை அடிக்க வேண்டும் என்று சொல்லியது உண்டா?''

''மூச்சு விட்டதில்லையே!''

''உங்களைக் கேட்காமல் வீட்டில் ஒரு ஆணி அடித்தது உண்டா?''

''இல்லையே!''

''இரவு பத்து மணிக்குமேல் விளக்குகளைப் போட்டு அனாவசியமாக உங்களைக் கரண்டு சார்ஜ் கட்ட வைத்தது உண்டா?''

''இல்லை.''

''உங்கள் வீட்டைப் பற்றி ஏதாவது எப்போதாவது யாரிடமாவது ஒரு குறை சொன்னது உண்டா?''

''இல்லை; இல்லை; இல்லை!''

''அப்படியென்றால் என்னை நீங்கள் ஒரு நல்ல குடித்தனக்காரன் என்று ஒப்புக் கொள்கிறீர்களா?''

''என்னுடைய இதர குடித்தனக்காரர்கள் அறியப் பகிரங்கமாக ஒப்புக் கொள்கிறேன்.''

''அப்படியானால் என்னை ஏன் சார் இப்படிக் கொடுமைப் படுத்துகிறீர்கள்?''

''கொடுமையா?'' என்று திகைத்தார் வீட்டுக்காரர்.

''என் பிள்ளைக்குக் கல்யாணமாகி இரண்டு மாதங்களாகின்றன. கல்யாணத்துக்கு வந்த அத்தை, மாமி, மாமா, அவர்களின் பிள்ளைகள், பேரன், பேத்திகள்....''

''எல்லோரும் இன்னும் ஊருக்குப் போகவில்லை. அதற்கு என்ன?''

''என் உறவினர்கள் செய்யும் உபத்திரவத்தையும், குழந்தைகள் அடிக்கும் கும்மாளத்தையும் பார்த்துக் கொண்டு சும்மாதானே இருக்கிறீர்கள்?''

''கண் குளிரப் பார்க்கிறேன்...''

''அப்படிப் பார்க்கலாமா சார்? ஒரு வீட்டுக்காரர் செய்யும் காரியமா சார் அது? நீங்கள் உடனே இதற்கெல்லாம் ஒரு முடிவு கட்டவேண்டும். இல்லாவிட்டால் நான் மிகவும் பொல்லாதவனுகி விடுவேன்!''

''என்ன சார் இது? நான் நல்லபடியாகத்தானே சார் உங்களிடம் நடந்து கொள்ளுகிறேன்?''

''அதுதான் கூடாது என்கிறேன். இன்று முதல், இந்த நிமிடம் முதல் நீங்கள் எல்லா வீட்டுக்காரர்களையும் போல் என்னுடன் சண்டை போட வேண்டும்.''

''என்ன சார், இது?''

''ஆமாம்; கண்டிப்பாகச் சண்டைதான் போட வேண்டும். வேறு வழியே இல்லை. ஊரிலிருந்து வந்திருக்கும் உறவினர்கள் சதா சர்வகாலமும் அரட்டை அடித்துக் கொண்டேயிருக்கிறார்கள். 'மூன்றுபேர் என்று சொல்லிக் குடித்தனம் வந்துவிட்டு முப்பதுபேர் அந்தப் போர்ஷனில் புகுந்துகொண்டு கொட்டமடிக்கிறீர்களே? மூன்று பேர் மட்டும் இருப்பதானுல் இருங்கள். இல்லாவிட்டால் உடனே வீட்டைக் காலி செய்து விடுங்கள்' என்று கண்டிப்பாகச் சொல்லி விட வேண்டும்!''

''வீட்டுக்காரன் பொல்லாதவன் என்ற கெட்ட பெயரை வாங்கிக் கொடுத்து விடுவீர்கள் போலிருக்கிறதே!''

''நீங்கள் நல்ல பெயர் எடுப்பதற்காக நான் கஷ்டப்பட வேண்டுமா? இரண்டு மாதங்களுக்கு முன்பு என் பிள்ளையின் கல்யாணத்துக்கு வந்த என் உறவுக்காரர்கள் என் பிள்ளையின் சீமந்தம் முடிந்துதான் போவார்கள்போலிருக்கிறது. அவர்கள் நகரவில்லை. தயவு செய்து என் மீது இரக்கம் கொண்டு அவர்களை ஊருக்கு விரட்டியடித்து என்னை இந்தப் பேராபத்திலிருந்து காப்பாற்றுங்கள், ஸார்!''

**ஆர்.எஸ்.மணி**

# நம்பகமான
# பார்கோ*

பார்கோ ஒரு நல்ல முதலீடு என்று, பார்கோ வண்டி வாங்கியவர்கள் தம் அனுபவத்தில் கூறுகின்றனர். பார்கோவை நீங்கள் நிச்சயமாக நம்பலாம். சாலையில் ஏற்படும் அதிர்ச்சியையும், பாரத்தால் உண்டாகும் அதிர்ச்சியையும் பார்கோ தாங்குகிறது. ஏனெனில் அதில் ராக்வெல் ஸ்டாண்டர்ட் டிம்கென் ஆக்ஸில்கள் பொருத்தப் பெற்றுள்ளன. அன்றியும் ராக்வெல் டிம்கென் ஆக்ஸில் காரணமாக பார்கோ அதிக பாரத்தைச் சுலபமாக ஏற்றிச் செல்கிறது. பார்கோ விலை குறைவு; எனவே அதிக வண்டிகள் வாங்கலாம்.

தென்னிந்தியாவில் பஸ் சொந்தக்காரர்கள் ஆண்டுதோறும் அதிகப்படியான பார்கோ வாங்குவதில் ஆச்சரியமில்லை.

**ஒவ்வொரு பார்கோ வண்டிக்கும் பூரண டிவிஎஸ் சர்விஸ் உண்டு**

பஸ் சொந்தக்காரர்கள் தங்கள் பஸ் போக்குவரத்தைச் சிக்கன முறையில் நடத்துவதற்கு, தென்னிந்தியாவில் முக்கியமான நகரங்களில் டிவிஎஸ் தங்கள் மிக நவீன ஒர்க்ஷாப்களை அமைத்திருக்கின்றனர்; ஸ்பேர் உறுப்புகளையும் வழங்குகின்றனர்.

*பிரிமியர் ஆட்டோமொபைல்ஸ் லிமிடெட், பம்பாய். அவர்களின் தயாரிப்பு



டி.வி. சுந்தரம் அய்யங்கார்
அண்ட் ஸன்ஸ்
பிரைவேட் லிமிடெட்

மதுரை - திருச்சி - திருநெல்வேலி
புதுக்கோட்டை - சேலம்
கோயமுத்தூர் - திருவனந்தபுரம்




சுந்தரம் மோட்டார்ஸ்
பிரைவேட் லிமிடெட்

மதராஸ் - பங்களூர்
செகந்திராபாத் (டெக்கான்)

சப்ளையர்: மனோரஞ்சன் கங்குலி & ஸன்ஸ் பிரைவேட் லிமிடெட்
5, ரு செயின்ட் லூயி, பாண்டிச்சேரி

# அறிவுக் கனலே, அருட் புனலே!

## ரா. கணபதி

ஆண்டவனிடம் அவனது உண்மையான இயல்பினைக் காட்டி அருளுமாறு அந்தரங்கசுத்தத்துடன் வேண்டிக்கொள்ளும்போது நரேந்திரரின் மனசிலிருந்து மற்ற எண்ணங்கள் யாவும் விலகி விடும். பிறகு பிரார்த்தனை என்கிற எண்ணமுமே மறைந்து விடும். எண்ணமே எழாத ஆத்ம சாம்ராஜ்யத்துக்குள் ஊடுருவிக்கொண்டு பிரவேசித்து விடுவார் நரேந்திரர். உண்மையான ஆர்வமிருந்து விட்டால் அதன்பின் கேட்பானேன்? முன்பு கதாதரருக்குக் கிட்டிய அநுபவங்கள் இப்போது நரேந்திரருக்குக் கிட்டின. அவருக்குக் கால தேச உணர்வுகளும், தேக உணர்வும் அற்றுப் போய் விடும். தியான நிலை கலைந்த பின்தான் அவ்வளவு நேரமும் தாம் இனம் தெரியாததொரு களிப்புக் கடலில் மூழ்கியிருந்தது அவருக்குத் தெரியும். சில சமயங்களில் தியானம் கலைந்த பின்னும் அசையமுடியாமல் ஓர் ஆனந்த போதை அவரை அழுத்தும். இவ்வாறு ஒருமுறை அமர்ந்திருக்கும் போது புத்தரைக் கண்டார் நரேந்திரர். குழந்தைப் பருவத்தில் ஒரு போது தாம் கண்ட தோற்றமும் புத்தருடையது தான் என்று அப்போது புரிந்து கொண்டார்.

வீட்டில் உள்ள யாவரும் உறங்கச் சென்ற பின்பே நரேந்திரர் இவ்வாறு பிரார்த்தனையும், தியானமும் புரிந்து வந்தார். என்ன அதிசயமான வாழ்க்கை அது! இக உலக இன்பங்களைத் தேடித் தேடிச் சென்று பருகும் பருவத்தில் அதை விட அதிக ஆர்வத்துடன் சத்தியத்தைத் தேடித் தவமிருக்கலானார் நரேந்திரர். இந்தத் தவப் பயனாக உலக வாழ்க்கையெல்லாம் அல்பமும் அனர்த்தமுமே என்ற ஞானம் புலரலாயிற்று. உலகுக்கு ஆதாரமான கடவுள் ஒன்றே உண்மை என்பதில் உறுதி கூடலாயிற்று. 'பல கடவுளர் இருப்பதாகச் சொல்வது தவறாக இருக்கலாம். ஆனால் கடவுள் என்று ஒருவர் இருப்பது நிச்சயம்' என்று திடமாகக் கருதலானார் நரேந்திரர்.

'கடவுள் இருக்கிறார்' என்ற கருத்து மாறி, 'கடவுள் இதோ இருக்கிறாரே' என்ற காட்சியாகவேண்டும் என்று விரும்பலானார் நரேந்திரர். கடவுள் இருக்கிறார் அல்லது இல்லை என்பதை வேண்டுமானால் அறிவால் வாதிக்கலாம். ஆனால் கடவுள் தரிசனம் என்பது அறிவைப் பொறுத்த வாதமல்ல; ஆத்மாவைப் பொறுத்த அநுபவம் அது. அந்த அநுபவத்தைப் பெற வேண்டும் என்ற ஆர்வம் நரேந்திரரின் நனவிலும், கனவிலும் இடையறாது அலை மோதிக் கொண்டே இருந்தது. அந்த அலைகளில் அறிவின் சுவர்கள் தகர்ந்தன; ஆத்மாவின் அந்தரங்க ஊழியனான உள்ளுணர்ச்சி கண்களை மலர்த்திக் கொண்டு விழிப்புற்றது. அருமையான ஸ்வப்பனங்கள் கண்டார் நரேந்திரர். மானுட வாழ்வில் காண முடியாத மர்மங்களும், சௌந்தர்யங்களும் ஸ்வப்பன வாயிலாக அவருக்கு லபித்தன. எங்கோ உயிர்நிலையில் ஊஞ்சலாடுவார் அவர். அப்படி ஊஞ்சலாடிய கிளுகிளுப்புடனே காலையில் கண் விழிப்பார். சத்திய வஸ்துவின் இந்தக் கனவுத் தோற்றங்கள் நரேந்திரருக்குச் சகஜமாகி விட்டன.

இத்தனைக்கும் காரணமான குருநாதரை எண்ணுவார் நரேந்திரர். அவரைக் குரு என்று ஏற்றுக் கொள்ளத் தாம் மறுத்ததையும், "நான் உன்னைக் கடிக்காமல் விடமாட்டேன். நான் தண்ணீர்ப் பாம்பல்ல; நல்ல பாம்பாக்கும்" என்று அவர் கூறியதையும் நினைந்து வியப்பார். 'அமுதத்தைக் கக்கும் அதிசய நாகமாக அல்லவா அவர் இருக்கிறார்?'

43

நரேந்திர நாதர் குடித்தனமும் குடி வாக்குமாக அமர வேண்டும்; நிறைந்த செல்வத்தை ஈட்ட வேண்டும் என விரும்பினார் விசுவநாத தத்தர். கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த நரேந்திரரை வழக்கறிஞர் ஒருவரிடம் உதவியாளராகப் பயிற்சிக்கு அனுப்பினார். கலியாணத்துக்கும் ஆசைஆசையாக ஏற்பாடுகள் செய்து வந்தார். நரேந்திரரோ தம் நண்பர்களிடம் ஆண்டிப் பரதேசி வாழ்க்கை பற்றிப் பேசி வந்த சமயம் அது.

அந்த நண்பர்களுக்கு நரேந்திரரின் போக்கு புரியவில்லை. 'வாழ்க்கையில் முன்னேறுவதற்கு உனக்கு இருக்கும் வாய்ப்பு கொஞ்சமா நஞ்சமா? ஏன் இப்படி ஊக்கமில்லாமல் இருக்கிறாய்?' என்று அவரைக் கேட்டார்கள். அந்தப் பேச்சைக் கேட்கவே அருவருத்துத்

தோள்களைக் குலுக்கிக் கொண்டார் நரேந்திரர். புகழாம், பதவியாம், பணமாம், பவிஷாமே! யாருக்கு வேண்டிக் கிடந்தது இதெல்லாம்?

''உலக வாழ்க்கை என்பது என்ன? ஒன்றிலிருந்து மற்றொன்ருக மாறிமாறிச் சஞ்சரிப்பது — சஞ்சலிப்பது — தானே? சந்நியாசியோ மாருத ஒரே பொருளில் வாழ்வதை நாடுகிருன். அவனுடைய வாழ்க்கைதான் வாழ்க்கை'' என்ருர் நரேந்திரர். வாலிப முறுக்கும் துடிப்பும் நிறைந்த அவருடைய நண்பர்களிடம் அந்தப் பேச்சு எங்கேனும் எடுபடுமா? ''போதாத காலம்! இந்த நரேன் போய் அந்தத் தட்சிணேசுவரத்துக் கிழவரிடம் சிக்கிக் கொண்டு விட்டான்! அவருக்கு இந்த உலகத்தைப் பற்றி எதுவும் தெரியாது. உலகத்துக்குத் தெரியாத கடவுளைத்தான் தெரியும். அதைப் பற்றிப் பேசிப் பேசி அவர் நரேனுக்கு ஆசை அபிலாஷை எதுவும் இல்லாமல் செய்து விட்டார்! அவனுடைய எதிர்காலத்தையே பாழாக்கி விட்டார்!'' என்று அந்த நண்பர்கள் வருத்தப்பட்டுக் கொண்டார்கள்.

அவர்களுக்குப் பாரமார்த்திக நாட்டத்தை நரேந்திரரால் உண்டாக்கமுடியவில்லை. ஒரு நாள் அவர் பெருத்த கிலேசத்துடன் கூறிஞர்: ''நான் என்ன செய்வேன்? உங்களுக்குப் புரிய மாட்டேன் என்கிறதே.... உங்களுக்கு மட்டும்தானு? நான் ஏன் இப்படிப் பரமஹம்ஸரை நாடுகிறேன் என்பது எனக்கே புரியவில்லை. ஆமாம், எனக்குமேதான் புரியவில்லை. இருந்தாலும், இருந்தாலும் நான் அவரை...அந்தக் கிழவனுரை, முனிவரை, ஸ்ரீ ராமகிருஷ்ணரை....நேசிக்கிறேன்.''

புவனேசுவரி தேவிக்கு வீட்டு விளக்காக ஒரு மாற்றுப் பெண் வரவேண்டும் என்ற ஆசை கொள்ளையாக இருந்தது. உறவினர் எல்லோருக்குமே அப்பெருங்குடியின் மூத்த மகன் கிருகஸ்த தர்மத்தை மேற்கொள்ள வேண்டும் என்று விருப்பம் இருந்தது. உலகுக்குக் கட்டுப்பட்டு வாழ நினைப்பவர்களுக்கான தர்மங்கள் உலகைத் துறக்க விரும்பியவருக்கு எப்படிப் பொருந்தும்? தூய்மையின் சிகரமாக விளங்க எண்ணியவரை எப்படித் திருமணத்துக்கு இசைய வைக்க முடியும்? மத நம்பிக்கை பெருமலிருந்த போதும் பரிசுத்தத்தைப் போற்றிய நரேந்திரரால் எப்படிப் பௌதிக உறவில் ஈடுபட முடியும்? அவராக எதுவும் ஆட்சேபித்துச் சொல்ல மாட்டாமல் தவித்தார். சர்வேசுவரியின் அருளில் தாளுகவே ஒவ்வொரு முறையும் விவாகப் பேச்சுக்கள் முறிந்து வந்தன. எல்லோரையும் தாயாகக் காண வேண்டியவனை இல்லறம் ஏற்கும்படி உலகத்தாய் விட்டு விடுவாளா, என்ன? அப்படி அவள் விடுவதற்கு அவளை விடவில்லை பரமஹம்ஸர்.

ஒரு முறை நரேந்திரரின் இல்லத்துக்கு வந்த குரு தேவர் பிரம்மசரியத்தின் மாண்பினை மாணவருக்கு எடுத்துரைக்கலானுர்.

''பன்னிரண்டு ஆண்டுகள் ஒருவன் பிரம்மசரியத்தை வழுவாது காத்து வந்தால் அவனுக்கு மேதை நாடி என்று உண்டாகும்; சூக்ஷ்மமான ஆற்றல்கள் கைகூடும். எதுவும் அவனுக்குப் புரியும். எதையும் அவன் ஒருமுறை கேட்டாலே கிரகித்துக் கொள்ள முடியும். எதையுமே அவன் மறக்க மாட்டான். எல்லாவற்றுக்கும் மேலாக இந்தத் தூய்மை



அவனுக்குப் பிரத்தியக்ஷமான தெய்வ தரிசனத்தைத் தரும்'' என்றெல்லாம் உபதேசித்தார்.

இதை நரேந்திரரின் பாட்டியம்மை கேட்டுக் கொண்டிருந்து விட்டாள். மற்றவர்களிடமும் கூறி விட்டாள்! புவனேசுவரி தேவி மிக மிகப் பயந்து போனாள். தாத்தாவைப் போலப் பேரனும் எங்கே கிளம்பி விடுவானோ என்று கதிகலங்கினாள்.

எவ்வாறோ, நரேந்திரர் காட்டில் மழை பெய்தது. விவாகப் பேச்சுக்கள் எவ்வளவு முற்றினாலும் ஏதேனும் தகராறு நேர்ந்து அறுந்து போய் வந்தன. ஐ. ஸி. எஸ். மோகம் ஆரம்பித்திருந்த நாள் அது. இங்கிலாந்தில் சென்று ஐ. ஸி. எஸ். படிப்பது அதிருஷ்டங்களில் முதலாவதாகக் கருதப்பட்டு வந்தது. நரேந்திர நாதருக்குத் தம் பெண்ணைத் தருவதோடு மட்டுமின்றி, அவர் இங்கிலாந்து சென்று ஐ. ஸி. எஸ். படிக்கவும் வசதியாகக் கொழுத்த வரதட்சிணை கொடுப்பதாக ஒரு தனவந்தர் முன் வந்தார். இந்தச் சம்பந்தம் முடிவாகிவிடும் என்றே தோன்றியது. ஆனால் இதுவும் முறிந்துதான் போயிற்று.

மிகவும் துயரமான முறையில் இந்த முறிவு ஏற்பட்டது. விசுவநாத தத்தர் திடீரென மாண்டு போனார்.

**1884**-ம் ஆண்டு நரேந்திரர் பி.ஏ. பரீட்சை கொடுத்தார். இன்னும் முடிவுகள் வெளியாக வில்லை. கல்கத்தாவுக்கு அருகில் வர நகரம் என்ற இடத்தில் இருந்த சிநேகிதன் ஒருவனைக் காண்பதற்காக நரேந்திரர் ஒரு நாள் மாலை சென்றிருந்தார். இரவுவரையில் இளைஞர்கள் ஆட்டமும் பாட்டமுமாக அமர்க்களப்படுத்திக் கொண்டிருந்தனர். அந்த உற்சாகம் மிகுந்த சமயத்திலே நரேந்திரரின் வீட்டிலிருந்து ஓர் ஆள் வந்தான் - துயரச் செய்தியைத் தூக்கிக் கொண்டு. விசுவநாத தத்தர் மாரடைப்பால் திடீரெனக் காலமாகி விட்டாராம்! நரேந்திரர் அதிர்ந்து போய் விட்டார். இயந்திரம் போலக் கல்கத்தாவுக்கு ஏகினார்.

அவருக்கு எத்தனையோ சுக சௌக்கியங்களை அளித்த தந்தை, அவரை எப்படியெல்லாமோ அருமை செய்த அன்புத் தந்தை, தந்தையாக மட்டுமின்றித் தோழனுகவும்





''இப்ப மணி 9-55. பத்து மணிக்கு உங்களுக்கு ஷூட்டிங் என்கிறீர்கள். மாம்பலத்திலிருந்து அடையாறு போய் அங்கிருந்து மகாபலிபுரம், புதுச்சேரி, விழுப்புரம், தாம்பரம் வழியாகக் கோடம்பாக்கம் ஸ்டுடியோவுக்குப் போகச் சொல்கிறீர்களே! முடியுமா?''

''அது சரிப்பா! நான் இப்ப ஒரு ஸ்டாராச்சே! டயத்துக்குப் போனால் நன்றாக இருக்குமா ?''

ருடைய புத்திக் கூர்மையை மேலும் சாணை பிடித்து, அவரது கலைஞானத்தை மேலும் நுந்தி வைத்த விசுவநாத தத்தரின் உடலம் அதில் குடி கொண்டிருந்த உல்லாசமும், உற்சாகமும் கொண்ட ஆத்மாவை இழந்து சடலமாகக் கிடந்தது. பக்கத்தில் சர்வ மங்களங்களும் பொருந்திய புவனேசுவரி பயங்கரமான அமங்கலம் தீண்டி அலறிக் கொண்டிருந்தாள்.

மூத்த சோதரிகள் இருவர், இளைய சோதரர் இருவர் எல்லோரும் அநாதைகளாகப் பரிதவிப்பதைக் காணக் காண நரேந்திரரின் இதயம் குமுறிக் குமுறி எழுந்தது.

விசுவநாத தத்தர் மறைந்த பின்புதான் அந்தப் பயங்கர உண்மை தெரிந்தது — இத்தனை நாளும் ராஜ போகமாக வாழ்ந்து வந்த அந்தக் குடும்பம் இன்று ஓடேந்தும் நிலையில் இருந்தது. விசுவநாதர் இரண்டு கைகளாலும் சம்பாதித்தது மெய்தான். ஆனால் சம்பாதித்ததையும், சம்பாதித்ததற்கும் மேல் கடன் வாங்கியும், அவர் நாலு கைகளால் செலவு செய்திருக்கிறார்! தம் பிரத்தியேக வாழ்வின் பகட்டினால் மட்டும் அவர் கடனாளியாகி விட வில்லை. வீட்டையே அன்னச் சத்திரமாக்கி, வந்தவருக் கெல்லாம் வாரி வழங்கியதால்தான் இன்று தம் குடும்பத்தை அன்னத்துக்கு ஏங்கும் அவல நிலையில் விட்டுச் சென்று விட்டார்.

விசுவநாத தத்தரைத் தவிர அந்த வீட்டில் சம்பாத்தியம் உள்ளவர் யாரும் கிடையாது. சொத்து சுதந்திரம் எதுவும் அவர் வைத்துப் போக வில்லை. இனி காலக்ஷேபம் நடப்பதெப்படி?

கடன் கொடுத்தவர்கள் கதவைப் பிளந்தார்கள். உதவி பெற்றவர்கள் ஓடினார்கள்; அல்லது எதிரிகளாக நின்றார்கள். கணக்கில் வராதபடி தாங்கள் பெற்ற லாபங்களை மறந்து அந்த வீட்டில் பாத்தியதை கோரினார்கள். பாத்தியதை கோரியது மட்டுமல்ல; விசுவநாத தத்தரின் மனைவியையும், மக்களையும் அந்த மனையை விட்டே விரட்ட முடிவுசெய்து விட்டார்கள். தாவா தொடர்ந்தார்கள்.

ராணியாக வாழ்வாங்கு வாழ்ந்த புவனேசுவரி தேவி கூனிக் குறுகிப் போனாள். வைதவ்யமும், வறுமையும் வந்துற்றது போதாதென்று வழக்கும், வியாஜ்யமும் வேறா? மானத்துக்குப் பெயர் போன அந்தக் குடும்பத்தின் விஷயங்கள் ஊரறிய நாடறிய நீதிமன்றத்திலா அற்றுப்படியாக வேண்டும்?

காசிநாதன் ஏன் இப்படி ஒரேயடியாகக் கை விட்டு விட்டான்? கலங்கிக் குழம்பி வெதும்பினாள் புவனேசுவரி.

வாய்க்கும் வயிற்றுக்கும் வழியில்லாத தீன நிலையில், கல்லூரிப் படிப்போடு ஓய்வு நேரத்தில் தொழிலும் தேடிய நரேந்திரர், இத்தனைக்கும் இடையில் நீண்ட பல நாட்களுக்கு நீதிமன்றத்தில் வேறு ஏறி இறங்க வேண்டியதாயிற்று. விசாரணையின் போதுதான் எத்தகைய வினாக்கள்! மறைந்து போன தந்தையைப் புரிந்து கொள்ளாதவர்கள் தனயனைக் குத்திக் குடைந்தெடுத்தார்கள். எவ்வாறோ, நரேந்திரரின் நெஞ்சுரம் அவ்வளவையும் தாங்கிக் கொண்டது. அந்த உறுதிதான் புவனேசுவரிக்குச் சிறிதேனும் உயிரூட்டியது.

குடும்பத்தைக் கட்டிக் காக்க நரேந்திரர் பட்ட பாடு சொல்லி முடியாது. நன்றாக ஒளி பரவி விளங்கும் பட்டப் பகலில் கருமேகங்கள் சூழ்ந்து கொண்டாற் போல் அந்த இல்லத்தைத் துர்பிக்ஷம் பீடித்து விட்டது. பி. ஏ. வகுப்பு வரை ஒரு குறைவின்றிக் கல்லூரிக்குச் சென்று கொண்டிருந்த நரேந்திரர் பி. எல். படிப்புத் தொடங்கியவுடன் கல்லூரியின் ஏழை மாணவர்களில் ஒரு

**18 சிறந்த மூலிகைகள் கலந்து முதல்முதலாக தயாரிக்கப்பட்ட**



## ஆயுர்வேதிக்

### பேஸ்ட்டும், பௌடரும்

உலகத்தில் எல்லா டூத்பேஸ்ட்டும், பௌடரும் பற்களை சுத்தம் செய்கிறது ஆனால், ஈறுகளை பலப்படுத்த என்னென்ன கலவைகள் அதில் சேர்க்கப்பட்டுள்ளன என்று யோசித்துப் பாருங்கள். முதல் முதலாக ஆயுர்வேதிக் 'விக்கோ வஜ்ரடன்தி' (பேஸ்ட்டும், பௌடரும்) 18 சிறந்த மூலிகைகளினால் தயாரிக்கப்பட்டது. ஈறுகளை நன்றாக இறுகச்செய்து பற்களை மிகவும் பலப்படுத்துகின்றன. ஒரு முறை உபயோகித்து திருப்தியடையுங்கள்.

# விக்கோ வஜ்ரடன்தி

## பேஸ்ட்டும், பௌடரும்







**VICCO LABORATORIES** DADAR T.T., BOMBAY 14.

ஸ்டாக்கிஸ்டுகள்:

மெஸர்ஸ் ஆர். எல். கௌடர் அண்டு கம்பெனி, சென்னை-1
மெஸர்ஸ் கே. எஸ். கௌடர் அண்டு கம்பெனி, பெங்களூர்-9
மெஸர்ஸ்என். தேசாய் கவுண்டர் அண்டு கம்பெனி, கோயமுத்தூர்-1

வர் ஆனார். செருப்புப் போட்டுக் கொள்வதுகூட டாம்பீகம் என்று எண்ணும் நிலை ஏற்பட்டது. மோட்டாத் துணிகளும், பழைய பாதரட்சைகளும் அணிந்து, வயிற்றுப் பசி தீரக் கூட உண்ணாமல், கால் நடையாகவே நரேந்திரர் கல்லூரிக்குச் செல்ல வேண்டியதாயிற்று. அப்போதும் தமது தன்மானத்தை அவர் காப்பாற்றிக் கொண்டார்! பசியினால் தலை சுற்றி மயக்கம் வரும் காலங்களில்கூடக் களைத்து விழுந்து விடாமல் மனோ திடத்தால் காத்துக் கொண்டு நண்பர்களுடன் உரையாடுவார் அவர். அவ்வாறு பேசிக் கொண்டிருக்கும் போது நண்பர்கள் ருசியான உணவு வகைகள் ஏதேனும் தருவித்தால் நரேந்திரருக்கு வீட்டில் தமது அன்னையும் உடன் பிறந்தோரும் வாடி நிற்பது நினைவுக்கு வந்து விடும். ஏதோ அவசர அலுவல் இருப்பதாகச் சொல்லிக் கொண்டு நண்பர்களுடன் உண்ணாமலே கிளம்பி விடுவார். வீட்டுக்கு வந்தாலோ நண்பர்களுடன் உண்டு விட்டதாகக் கூறிப் பட்டினி கிடப்பார். தமக்காக ஒதுக்கி வைத்திருந்த உணவையும் மற்றவர்கள் பகிர்ந்து கொள்வதைக் கண்டு மனசு நிரம்பி மகிழ்வார். உடலின் பட்டினியை விட உள்ளத்தின் பட்டினிதானே கொடிது?

நரேந்திர நாதர் விவேகாநந்தராகி இந்த உலகிலிருந்து மறைந்த பின்னும் புவனேசுவரி தேவி உயிர் வாழும் துர்ப்பாக்கியத்தைப் பெற்றிருந்தாள். அப்போது அவள் தனது தவப் புதல்வரை எண்ணும்போதெல்லாம் தங்களுடைய வறுமைக் காலத்தில் நரேந்திரர் செய்த தியாகங்களைத்தான் உருகி உருகிச் சொல்லுவாள். நரேன் வெளியுலகுக்குத் தமது மன வேதனையைக் காட்டிக் கொள்ளாமல் உற்சாகமாக இருப்பது போலவே தோன்றி, மற்றவர்களுக்கும் தைரியமூட்டுவாராம். உல்லாஸப் பயணம், அது இது என்று சொல்லிக் கொண்டு பணக்கார வீட்டு இளவட்டங்கள் சாரட்டில் வந்து நரேந்திரரை அழைத்துச் செல்லும்போதெல்லாம், தம்முடைய பழைய — புதிய ஐசுவரிய மாறுபாடுகளைச் சிறிதும் வெளிக் காட்டிக் கொள்ளாமல் அவர்களுடன் இயற்கையாக இணைந்து நரேந்திரரும் கொட்டமடிப்பாராம்.

ஆனால் எத்தனை நாளைக்கு இப்படி மனக் குமைச்சலை மூடி மூடி வைக்க முடியும்? வீட்டுப்பாடோ பெரும் பாடாகிக் கொண்டு வந்தது. சட்டப் படிப்புப் பயின்று வந்த நரேந்திரர் துணையாக ஓர் உத்தியோகமும் தேட வேண்டியதாயிற்று. வித்யாஸாகரர் ஸ்தாபனங்களில் ஒன்றில் ஒய்வு நேரத்தில் வேலை பார்க்கலானார். அது சரிப்படவில்லை. வேறு வேலை தேடிக் கல்கத்தா மாநகரத்தில் ஒவ்வோர் அலுவலகமாக ஏறி இறங்கலானார். 'நண்பகலில், வெறும் காலோடு, வயிற்றைப் பசி கிள்ளியெடுக்க எவ்வளவோ அலைந்திருக்கிறேன்' என்று பிற்காலத்தில் விவேகாநந்தர் கூறியிருக்கிறார். கால் வலிக்கச் சுற்றியும், கைவலிக்க விண்ணப்பங்கள் எழுதியும் பயனில்லை. சென்றவிடமெல்லாம் கதவை முகத்தில் சாத்தாத குறைதான். 'நம்ம நரேன் தம்பி நம்மிடமே வேலைக்கு வந்துவிடட்டுமே' என்று விசுவநாத தத்தரிடம் இனிக்க இனிக்கப் பேசியவர்களெல்லாம் இன்று முகத்தைத் திருப்பிக் கொண்டார்கள். உலகம் என்றால் என்ன என்று நரேந்திரர் அறிந்தார்.

மண்ணினுடைய தரத்தை அறிந்தால்தானே அதனைக் குயவன் பொம்மையாக உருவாக்க முடியும்? மக்களின் குணத்தை — நற்குணம், தீய குணம் இரண்டையுமே — உள்ளவாறு அறிந்தால் அன்றி ஓர் ஆசாரிய புருஷனால் அவர்களை எப்படிச் செம்மையாக உருவாக்க முடியும்?

வறுமையும், வறுமை காரணமாக ஏற்பட்ட உடல் நலிவும், உள்ளத்து நொய்மையும், வறுமையை நீக்கிக்



## — அண்ணனும் தம்பியும் —

"அண்ணே!"

"என்ன தம்பி?"

"இந்த வெள்ளை — அஸ்கா சர்க்கரை— வெல்லத்திலிருந்துதானே செய்யறாங்க!"

"ஆமாம் தம்பி!"

"அப்ப சர்க்கரைக்கு மூலப்பொருள் வெல்லம்தானே அண்ணே!"



"ஆமாம் தம்பி!"

"ஆனால் இன்னிக்கு மார்க்கெட்டிலே ஒரு கிலோ வெல்லம் ஒண்ணரை ரூபாய்க்கு விற்கிறது!"

"சரி."

"ஆனால் வெல்லத்திலிருந்து செய்கிற அஸ்கா ஒரு ரூபாய் பதின்மூன்று பைசாவாக விற்கிறது! இது எப்படி அண்ணே!"

"இது காங்கிரஸ் சர்க்காரின் கண்ட்ரோல் திட்டத்தின் விந்தை தம்பி! மூலப்பொருள் உற்பத்தியான பொருளை விட விலை அதிகமாக இருக்கிறது!"

கொள்வதற்காக யாரை நாடினாரோ அவர்களிடம் காணப்பட்ட கடின சித்தமும் உலகத்தைப் பற்றியே நரேந்திரர் நம்பிக்கை இழந்து விடுமாறு செய்து விட்டது. உலகத்தை அன்புருவான கடவுள் படைத்து நடத்தவில்லை— ஒரு ராக்ஷஸ சக்திதான் இயக்கி வருகிறது என்று எண்ணத் தலைப்பட்டார்.

இருந்தாலும் காலையில் அவர் எழுந்தவுடன் அவரது நாவு தானாகவே பரம்பொருளைப் பிரார்த்திக்கும். ஆண்டவனை வேண்டிக்கொண்டு தான் பிரதி தினமும் அவர் வேலை வேட்டையைத் தொடங்குவார். ஒருநாள் அவர் இவ்வாறு பிரார்த்திப்பதைக் கண்ட புவனேசுவரிக்கு — காசிவிசுவநாதனை முன்பு உள்ளும் புறமும் கண்ட அதே புவனேசுவரிக்கு —ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்து விட்டது.

"நரேன்! உனக்குப் புத்தியில்லை? நிறுத்து, இந்தப் பிரார்த்தனையை. பிறந்த நாளாகத் தொண்டை வறண்டு போகுமளவுக்கு உன் ஆண்டவனிடம் கதறி வந்ததில் என்ன கண்டாய்?... உனக்கு அவன் என்ன செய்து விட்டான்?" என்று படபடத்தாள்.

நரேனின் உள்ளத்தில் ஆழத் தைத்து விட்டது அந்த வினா. 'ஆகா, உண்மையில் கடவுள் என்றே ஒருவர் கிடையாதா? இருந்தால் தன் குழந்தைகளை இப்படி வாட்டி வறுத்திப் பார்ப்பாரா? கிறிஸ்துவ வேதத்தில் அருள் மயமான ஆண்டவன், இருள் மயமான சாத்தான் என்று இரண்டாகச் சொல்கிறார்களே — அந்தச் சாத்தானிடமே இந்த உலகைக் கடவுள் ஒப்புக் கொடுத்து விட்டாரா? இல்லையென்றால்......கருணை மயமான கடவுளையும் கஷ்ட மயமான உலக வாழ்க்கையையும் இணைத்துப் பார்க்கவே முடியவில்லையே!'

தட்சிணேசுவரத்துத் தபோதனரின் சங்கத்தினால் ஐயம் நீங்கி அகக் கண் சிறுச் சிறுதே மலர்த்தப் பெற்ற நரேந்திரரை இப்போது மீண்டும் ஐயம் நெருக்கிப் பிடித்து விட்டது. அகக் கண்கள் இருட்டிக் கொண்டு வந்தன.

நரேந்திரரின் பக்தி பழுதுபட்டு இடிந்து நொறுங்கியது. நரேந்திரரால் தான் உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேச முடியாதே! எனவே அவர் இப்போதும் தம் மனத்தில் இருப்பதையெல்லாம் நண்பர்களிடமும், மற்றவர்களிடமும் ஒளிவு மறைவின்றிக் கூறத் தொடங்கினார். 'கடவுள் என்பது வெறும் கற்பனை. கற்பனை இல்லாமல் உண்மையாயினும் அந்தக் கடவுளுக்குக் கருணை என்பது கிடையாது. அவரிடம் பிரார்த்திப்பதில் பயன் ஏதும் இடையாது' என்றெல்லாம் பேசலானார். நரேந்திரர் நாஸ்திகராகி விட்டார் என்று பேச்சு தொடங்கிற்று. அதோடு மட்டுமின்றி, தெய்வத்திடம் பயம் போய் விட்டதால் அவர் தீய நெறியில் செல்ல ஆரம்பித்து விட்டார் என்றும் கதைகள் பிறந்தன.

'பனிக் கட்டியைப் போலப் புனிதமாக இருந்தாலும் நீங்கள் பழிக்குத் தப்ப முடியாது' என்று ஷேக்ஸ்பியர் கூறியது நரேந்திரர் விஷயத்தில் உண்மையாயிற்று.

நரேந்திரர் தமது தூய்மையை நிரூபிக்க முயல வில்லை. மக்களின் மடமையைக் கண்டு அவருக்கு எரிச்சல் தான் உண்டாயிற்று. வாதத் திறமையில் சிறப்புப் பெற்றிருந்த நரேந்திரர் இப்போது அந்த ஆற்றலை விபரீதமாகப் பயன்படுத்திக் கொண்டார். "பாழாய்ப் போன இந்தத் துக்க சம்சாரத்தில் ஏதோ சிறிது பொழுது அந்தத் துக்கங்களை மறந்து ஆனந்தமாக இருக்கலாம் என்று யாரேனும் தப்பான வழியில் சென்றால் அது ஒன்றும் அப்படிக் கண்டனத்துக்குரியதல்ல. இவ்வழியில் செல்வது இன்பம் என்று எனக்குத் தோன்றினால் யாருக்கும் அஞ்சாமல் நானும் அப்படிச் செல்லுவேன்" என்று அவர் கூறலானார். **(தொடரும்)**

# நாள் முழுவதும் நீடித்த பொலிவுடன் திகழ

# ரேணுகா

## டால்கம் பவுடர்



துர்நாற்றத்தை அகற்றி புத்துணர்ச்சி அளிக்கிறது

நறுமணம் கமழும் ரேணுகா டால்கம் பவுடரில் சேர்க்கப்பட்டுள்ள ஆக்டமர் வியர்வையினுல் உண்டாகும் துர்நாற்றத்தை அறவே போக்குகிறது. ரேணுகா டால்கம் பவுடரில் மட்டுமே ஆக்டமர் சேர்க்கப்பட்டுள்ளது.

**கல்கத்தா கெமிகல் கம்பெனி லிட்.**
**கல்கத்தா - 29** *(இந்தியா)*

தென்னிந்திய ஆபீஸ்: 5/149, பிராட்வே, சென்னை - 1

---

# ராம்தீர்த் பிரம்மி ஆயில்

**(ஸ்பெஷல் நெ. 1)** **(ரிஜிஸ்டர்டு)**

**தற்போது விட்டமின் C சத்துக்கள் சேர்க்கப்பட்டுள்ளது**



கூந்தல் உதிர்வதையும், பொடுகையும் தடுத்து கேசத்திற்கு கரு நிறத்தையும் பளபளப்பையும் அளிக்கும் ஓர் ஒப்பற்ற கூந்தல் தைலம். பல உயர்ந்த மூலிகைகளைக் கொண்டு தயாரிக்கப்பட்டது. மூளைக்குக் குளிர்ச்சி யளித்து, ஞாபக சக்தியை அதிகரித்து, கண் எரிச்சலையும் அடிக்கடி ஏற்படும் தலைவலியையும் போக்கி நிம்மதி யான நித்திரையை அளிக்கிறது. விட்டமின் C சத்துள்ள சில புதிய மூலிகைகள் இதில் சேர்க்கப்பட்டுள்ளன. இதனுல் தைலத்தின் வழக்கமான வாசனையில் ஒரு சிறு மாறுதல் ஏற்பட்டுள்ளது.

## யோகாசனப் படம்

எங்கள் யோகாசனப் படத்தில் காட்டியுள்ளவாறு ஆசனங்களை முறைப்படி செய்து வந்தால் நீங்கள் உடல் வலிவு பெற்று ஆரோக்யமாக வாழ்வீர்கள்

விலை ரூ. 3/- (தபால் செலவு உள்பட)

# SHRI RAMTIRTH YOGASHRAM

**DADAR, BOMBAY - 14**

*மதராஸ் டிப்போ:* 25, நைனியப்ப நாயக்கன் தெரு, மதராஸ் - 3

மாதர் உலகம்

# கொள்ளையும் மலிவும்

அனுசுயா



ஒரு பழைய ஹாஸ்யம் உங்களுக்கு ஞாபகமிருக்கும். ஒரு பையன் தன் தாயாரைப் பார்த்து, "ஏன், அம்மா! மார்க்கெட்டில் கறிகாய்களெல்லாம் விற்காமல் பழசாகப் போய் விட்டால் என்ன செய்வார்கள்?" என்று கேட்டான்.

"உங்கப்பா கறிகாய் வாங்க வரும்போது அவர் தலையில் வைத்துக் கட்டி விடுவார்கள்" என்று அவள் சொன்னாள்.

பிறகு ஒரு நாள் பையன் தன் தந்தையை விசாரித்தான். "ஏன், அப்பா! வாசலிலே கூடையில் கறிகாய் விற்று வருகிறார்களே, ஒரு சவுக்கத்தில் கொஞ்சம் உருளைக் கிழங்கு, கொஞ்சம் தக்காளிக்காய் எல்லாம் கொஞ்சம் கொஞ்சம்தானே வைத்திருக்கிறார்கள்? அவற்றை மட்டும் விற்றால் சாப்பாட்டுக்குப் போதுமா?"

தந்தை கூறினார்: "அவன் ஒன்றுக்குப் பாதி எடை போட்டு நிறுத்து உங்கம்மா மடியில் கொட்டி விடுவான். அவள் தான் மலிவாக வாங்கி விட்டதாகப் பெருமையடித்துக் கொள்வாள்."



எதையும் மலிவாக, அதுவும் கொள்ளை மலிவாக வாங்க வேண்டும் என்ற பைத்தியம் சாதாரணமாக ஸ்திரீகளுக்கு உண்டு. இரண்டு வாரங்களுக்கு முன்னால் சென்னையில் ஓர் அம்மாளிடம் ஒரு ஸ்திரீ வந்து தான் அரிசி, பருப்பு முதலிய சாமான்களை மிகவும் மலிவாக வாங்கிக் கொடுப்பதாகத் தெரிவித்தாள். அந்த அம்மாள் உடனே தன் பிள்ளையை அழைத்துக் கொண்டு இனம்பி விட்டாள். எல்லாரும் சென்டிரல் ஸ்டேஷன் பக்கம் போனார்கள். "பையனிடம் பணத்தைக் கொடுத்தனுப்புங்கள். சாமான்களை வாங்கி வருகிறேன். நீங்கள் இங்கேயே இருங்கள்" என்று கூறினாள். பையன் பணத்துடன் போனான். வழியில் ஸ்திரீ அவனிடம் பணத்தைப் பெற்றுக்கொண்டு சாமான்கள் வாங்கப் போனாள்.

பிறகு அவள் திரும்பி வரவில்லை. பணம் போய் விட்டது. இதைப் பற்றி, ஏமாற்றப்பட்ட அம்மாளின் புருஷன் பத்திரிகைக்குக் கடிதம் எழுதினார். இது மாதிரி தினமும் நூற்றுக்கணக்கான பேர்வழிகள் ஏமாந்து போய்க் கொண்டுதான் இருக்கிறார்கள். ஆனால் வெளியில் சொன்னால் வெட்கக் கேடு என்று பேசாதிருந்து விடுவார்கள்.

'மலிவு' என்னும் போது ஒரு விஷயம் தெரிந்து கொள்ள வேண்டும். அந்த மலிவுச்சாமான் ஒன்று மட்டமானதாயிருக்கும். அல்லது ஏதாவது ஏமாற்றல் முயற்சி சம்பந்தப்பட்டதாக இருக்கும். இந்த அம்சங்களையெல்லாம் மீறி மலிவாகக் கிடைப்பது மிகவும் அபூர்வம். மலிவாக விற்க, யாரும் பைத்தியக்காரர்கள் அல்ல.

இந்த 'மலிவு'ச் சபலம் நகைகள் செய்யும் விஷயத்தில் ஸ்திரீகளை அதிகம் பாதிக்கிறது. ஒரு நல்ல நகைக் கடையில் பவுனில் சங்கிலி செய்வதற்குப் பிடி ஒன்றுக்கு இரண்டரை ரூபாய் கூலி கேட்கிறார்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். அதையே தனிப்பட்ட தட்டார்களிடம் செய்வதற்குப் பிடிக்கு ஒன்றரை ரூபாய் கொடுத்தால் போதும். ஒரு வடம் சங்கிலி செய்வதில் எட்டு ரூபாய் கூலியில் லாபமாகும். ஆனால் நாற்பது ஐம்பது ரூபாய் பெறுமான பவுன் போய் விடக் கூடும். பொருள் சரியான பவுன் மாற்றாக இல்லா விட்டால் ஒரு கம்பெனியிடம் போய்க் கேட்க முடியும். தனிப்பட்ட தொழிலாளரிடம் கேட்டும் பயனேற்படாது. இது மாதிரி ஏமாறும்போது எத்தனையோ பேர்கள் திருடனுக்குத் தேள் கொட்டியதைப் போல் யாரிடமும் சொல்லாமல் பேசாமலிருந்து விடுவதைப் பார்த்திருக்கிறேன்.

## ஓர் எச்சரிக்கை

ஸ்திரீகள் ஏமாறக் கூடிய இன்னொரு அம்சம் சீட்டுகள். அதுதான் மாதா மாதம் பணம் கட்டி வந்து பணம் தேவையானபோது ஏலம் எடுக்கிறார்களே அந்தச் சீட்டு. பல

சீட்டுகளை ஸ்திரீகள் மட்டுமே சேர்ந்து நடத்துகிறார்கள். பணம் கொடுக்கல் வாங்கல்களுக்கு ரசீதுகள் என்பதே கிடையாது. ஆயினும் காரியங்கள் அநேகமாக நல்ல யோக்கியமான முறையில் நடைபெறுகின்றன. ஒரோரு சமயம் சில ஆண்கள் மோசம் செய்யும் எண்ணத்துடன் தங்கள் மனைவிமாரை விட்டுச் சீட்டுக்கள் நடத்தச் சொல்லலாம். அவர்கள் கையில் ஓரளவு பணம் சேர்ந்த பிறகு அவர்களைக் கண்டுபிடிக்க முடியாது. இது போன்ற 'அசட்டுச் சமர்த்து'க் காரியங்களெல்லாம் பெரியவர்கள்தான் செய்து வருகிறார்கள்.

சீட்டு நடத்தும் சிட் பண்டு கம்பெனிகள் பல இருக்கின்றன. இவையெல்லாம் சர்க்காரிடம் பதிவு செய்யப்பட்டவை. பல சீட்டுக் கம்பெனிகள் மிகவும் ஒழுங்காக நடைபெற்று வந்து கொண்டிருக்கின்றன. ஆனால் ஜனங்களை ஏமாற்றுவதற்கென்றே புதிது, புதிதாகக் கம்பெனிகள் ஆரம்பிக்கப்பட்டு வருகின்றன. இவற்றை நடத்துபவர்கள் ஓர் ஊரில் அதை ஆரம்பித்துச் சில மாதங்கள்வரை ஒழுங்காகப் பணம் கொடுத்து வருவார்கள். கையில் கணிசமான தொகை சேர்ந்ததும் அந்த ஊரை விட்டுக் கம்பி நீட்டி விடுவார்கள். இது மாதிரி கோயமுத்தூரில் பலரை ஏமாற்றி விட்டுச் சென்னைக்கு வந்த ஒருவர் இங்கேயும் ஒரு கம்பெனி ஆரம்பித்தார். அவர் பணம் போட்டவர்களை மோசம் செய்வதற்குள் போலீஸார் அவரைப் பிடித்து விட்டார்கள். இத்தகைய மோச முயற்சிகளில் ஈடுபடுபவர்கள் சீட்டுக்கு ஆள் சேர்ப்பதற்காகப் பெண்களை வீடு வீடாக அனுப்புகிறார்களாம். தாங்கள் மட்டுமின்றித் தங்கள் வீட்டுப் புருஷர்களும் ஏமாறாதிருக்கும்படி ஸ்திரீகள் கவனித்துக் கொள்ள வேண்டும்.

## காதல் 'படிப்பு'

**ப**ல 'சர்வ 'கலாசாலைகளில் குடும்பக் கலைப் பேராசிரியர்கள் இருக்கிறார்கள். குடும்பக் கலை என்றால், தாளித்துக் கொட்டுவது, அப்பள மிடுவது, குழந்தையைக் குளிப்பாட்டுவது முதலியன மட்டுமே என்று அவர்கள் நினைக்கவில்லை. காதலிப்பது, கல்யாணம் செய்து கொள்வது, கணவனும் மனைவியுமாக வாழ்க்கை நடத்துவது முதலிய அம்சங்களையும்கூட முக்கியமானதென்று கருதுகிறார்கள். அவற்றைப் பற்றிப் பாடங்கள் சொல்லிக் கொடுக்கிறார்கள். அது மட்டுமல்ல. வாழ்க்கை நாடகத்தை வகுப்பிலேயே மாணவ மாணவிகளைக் கொண்டு நடித்துக் காட்டவும் செய்கிறார்கள். அத்தகைய முறையைப் பின்பற்றி ஆண்டிரி மாரோவா என்ற பிரெஞ்சு ஆசிரியர் கற்பனை நாடகக் காட்சிகள் எழுதியிருக்கிறார். அவற்றுள் ஒன்றைத் தழுவி நானும் ஒன்று எழுதுகிறேன்:

பேராசிரியர்: மாணவிகளே, மாணவர்களே! ஒரு சர்வ கலாசாலைப் பேராசிரியர் விவாகத்தைப் பற்றிச் சொல்லிக் கொடுக்க ஒரு வகுப்பு நடத்துவது உங்களுக்கு ஆச்சரியமாயிருக்கும். ஏனென்றால், இதைப் பற்றி எந்த உபாத்தியாயரையும் விட வாழ்க்கையிலிருந்தும், சொந்த அனுபவத்திலிருந்தும் அதிகம் தெரிந்துகொள்ள முடியும்.




ஆனால் மற்றவர்கள் அனுபவத்திலிருந்தும் ஓரளவு அறிந்து கொள்ளலாம். நான் பிரசங்கங்கள் செய்யப்போவதில்லை. சில நாடகக் காட்சிகள் மூலமே எடுத்துக் காட்டப் போகிறேன். முதலில் காதல் காட்சி.

நீலாவுக்கு வயது இருபத்திரண்டாகிறது. நல்ல வாலிபப் பருவம். பரதனுக்கு வயது இருபத்தாறு. எஞ்ஜினீயர் வேலையிலிருக்கிறான். அவர்கள் இருவருக்கும் ஏற்கனவே சிறிது பரிச்சயமிருக்கிறது. ஒரு நாள் மாலையில் அவர்கள் கடற்கரை மணலில் உட்கார்ந்து கொண்டிருக்கிறார்கள்.....

நீலா: நீங்கள் என்மீது ஆசை வைத்திருப்பது தெரிகிறது. ஆனால் வாயைவிட்டுச் சொல்வதில்லை.

பரதன்: என்ன சொல்ல வேண்டும்?

நீலா: (தலை குனிந்தவண்ணம்) 'நான் உன்னைக் காதலிக்கிறேன்' என்றுதான்.

பரதன்: ஓஹோ! அந்த வார்த்தையா? நீலா! நான் அப்படித்தான் சொல்ல விரும்புகிறேன். சொல்லவும் வாயெடுக்கிறேன். ஆனால் வார்த்தைகள் தொண்டையை விட்டுக் கிளம்ப மாட்டேன் என்கின்றனவே.

நீலா (புன்னகை புரிந்து): நீங்கள் பேசுகிறது வேடிக்கைதான். நீங்கள் ஒரு எஞ்ஜினீயர் அல்லவா? உடல் அமைப்பு நன்றாயிருக்கிறது என்று மோட்டார் வண்டியைப் பற்றிப் பேசுவது போல் பேசுகிறீர்கள். நான் ஓர் இயந்திரமல்ல. எனக்கு உணர்ச்சி இருக்கிறது. சிந்திக்கும் சக்தி இருக்கிறது. அதோ அடிவானத்தில் சந்திரன் கிளம்பிக் கொண்டிருக்கிறான். ஜிலுஜிலுவென்று காற்றடித்துக் கொண்டிருக்கிறது. இந்த நிலைமையில் நீங்கள் என்னைக் காதலிப்பதை நான் விரும்பவில்லை.

பரதன்: பின் எதற்காகக் காதலிக்க வேண்டுமென்கிருய்?

நீலா: உங்களுக்குப் பிடித்த சில விஷயங்கள் எனக்கும் பிடித்திருப்பதற்காக. நம் மிருவரும் பல விதங்களில் ஒரேவித உணர்ச்சி யுள்ளவர்களா யிருப்பதற்காக. அன்று அப்பா விடம் தாங்கள் பேசிக் கொண்டிருந்த போது நெய்வேலி பழுப்பு நிலக்கரியைப் பற்றிக் கூறினீர்கள். அதைக் கேட்கக் கேட்க எனக்குத் தேவாமிர்தம் சாப்பிடுவது போலி ருந்தது... ஆமாம்... அட்டாமிக் ரீஆக்டர். அதைப் பற்றி நீங்கள் உற்சாகத்துடன் பேசிய வார்த்தைகள் காதில் விழுந்தபோது எனக்கு மெய் சிலிர்த்தது.

பரதன் (அளப்பற்ற உற்சாகத்துடன்): அப்படியா? நான் 'ரீஆக்டரை'ப் பற்றிக் கூறியது உனக்குப் பிடித்திருந்ததா?

நீலா: சந்தேகமென்ன?

பரதன் (சற்று நீலாவின் பக்கம் நெருங்கி வந்து): எஞ்சினீயரிங்கைப்பற்றி மேலும் பல விஷயங்கள் தெரிந்து கொள்ள வேண்டும், நீலா! அதற்காக அமெரிக்காவுக்குப் போக ஆசைப்படுகிறேன்.

நீலா: அமெரிக்காவுக்கா? எனக்குக் கூட அந்தத் தேசத்தைப் பார்க்க ஆசை.



பரதன் (ஆவலுடன்): அப்படியானுல் என்னேடு வந்து விடேன்!

நீலா: (வெட்கம் தோன்ற): ஊஹூம், என் அப்பாவும் அம்மா வும் சம்மதிக்க மாட்டார்கள். கணவனேடு போகத்தான் அனுமதி கொடுப்பார்கள்.— ஆமாம், நீங்கள் வேறு ஊர்களுக்கும் போவீர்களா.....?

பரதன்: போகாமல்? ஜெர்மனி, பிரிட்டன், ரஷ்யா முதலிய தேசங்களுக்கும் போய்ப் படிக்க வேண்டுமென்று உத்தேசம்.

நீலா: (வியப்புடன்) நான் உங்களைப் பற்றி என் அப்பாவிடம் சொன்னது சரியாகப் போய் விட்டது.

பரதன்: என்ன சொன்னுய்?

நீலா: தாங்கள் சாதாரண வாலிபரல்ல. அது மாதிரி யாரையும் நான் பார்த்ததே இல்லை என்றேன்.

பரதன்: ஆமாம், உன் படிப்பு முடிந்துவிட்டதல்லவா? எதற்காக இன்னும் படிக்கிருய்?

நீலா: காலேஜ் படிப்பு முடிந்து விட்டது. இருந்தாலும் இன்னும் இரண்டு பாடங்களில் பட்டம் பெறலாமென்றுதான்.

பரதன் (கண்டிப்பான குரலில்): நீ இனி மேல் ஒரு பரீட்சையும் எழுதப் போவதில்லை.

நீலா: ஏன்?

பரதன்: ஏனென்றுல் உனக்குக் கல்யாணம் ஆகப் போகிறது.

நீலா: ஓஹோ! அதைப் பற்றி நான் எண்ணிப் பார்க்கவே இல்லை... ஆமாம், நான் யாரைக் கல்யாணம் செய்துகொள்ளப் போகிறேன்?

பரதன் (அதிகாரத்துடன்): என்னைத்தான்!

பேராசிரியர்: நீலா எவ்வளவு நாசுக்காக, எவ்வளவு சாமர்த்தியமாகப் பேசிப் பரதனைத் தன்னைக் கல்யாணம் செய்துகொள்ள ஒப்புக் கொள்ளச் செய்தாள், பார்த்தீர்களா? வாலிபனைப் புகழ வேண்டும், புகழ்ந்து கொண்டே யிருக்க வேண்டும். வாலிபனைக் 'காதல்' என்பதில் சிக்க வைக்கும் இரகசியம் இப்படிப் பேசுவதில்தான் இருக்கிறது.

அவர் இப்படிக் கூறி வகுப்பை முடித்ததும் மாணவிகளும், மாணவர்களும் பேசிக் கொண்டே ஹாலை விட்டு வெளியேறிச் செல்கின்றனர்.

கடைசியாகப் பேராசிரியரும் கிளம்புகிருர். அப்போது சாந்தினி என்ற ஒரு பெண் மட்டும் நின்று கொண்டிருப்பதைக் கவனிக்கிருர்.

சாந்தினி: தங்களைத் தொந்தரவு செய்வதற்கு மன்னிக்கணும்...தாங்கள் சொல்லிக் கொடுப்பதைக் கேட்டுக் கொண்டே இருக்க வேண்டும் போல் இருக்கிறது. தாங்கள் அவ்வளவு அழகாகப் புரியும்படி விஷயங்களை எடுத்துக் கூறுகிறீர்கள். தாங்கள் ஒரு பிறவி நாடகாசிரியர். தங்களைப் போல் இது வரையில் ஒரு மேதை பிறந்ததில்லை; இனியும் பிறக்கப் போவதில்லை.

பேராசிரியர்: என்னைப் பற்றி....

சாந்தினி: மாணவிகள் தங்களைப் பற்றி என்ன அபிப்பிராயம் கொண்டிருக்கிருர்கள் என்று உங்களுக்குத் தெரியாது. ஆ! உங்களுடைய இனிமையான குரல் எங்கள் காதுகளில் எப்போதும் ஒலித்துக் கொண்டே இருக்கிறது! ஒரு பெண் என்ன சொன்னுள் தெரியுமா? 'அவரைக் கல்யாணம் செய்து கொள்ளக் கொடுத்து வைக்க வேண்டும். ஆனுல் அவருக்கு ஏற்கனவே கல்யாணம் ஆகியிருக்குமோ?' என்றுள்.

பேராசிரியர்: இல்லை. நான் கல்யாணமாகாத ஒரு பிரம்மச்சாரிதான். என்னைப் பற்றி அப்படிச் சொன்ன அந்தப் பெண் யார்? கெட்டிக்காரப் பெண் போலிருக்கிறது.

சாந்தினி: ஏன்? நான்தான்!

பேராசிரியர்: அப்படியா? உன்னைப் பார்த்தபோது நீ அழகான பெண், கெட்டிக் காரப் பெண் என்றே என் மனத்தில் பட்டது. நீ சொல்வது உண்மை என்றுல் நான் கல்யாணம் செய்துகொள்ள...

இதைக் கேட்டபோது சாந்தினி வாய் விட்டுச் சிரித்து, "நான் சும்மா தமாஷாகப் பேசினேன். தாங்கள் இப்போது நடித்துக் காட்டிய காட்சியையே தங்களிடம் திருப்பி நடித்துக் காண்பித்தேன். தங்கள் போதனைப்படி தங்களைப் புகழ்ந்து கூறினேன். தாங்கள் ஏமாந்து போய் விட்டீர்கள்" என்று கூறிக்கொண்டே ஹாலை விட்டுச் சென்று விட்டாள்.

# பொன் விலங்கு



## நாற்பத்தேழாவது அத்தியாயம்

மாணவர்களையும் வகுப்பையும் அப்படி அப்படியே விட்டு விட்டுத் தன்னை உடனே வரச் சொல்லிக் கல்லூரி முதல்வர் திரும்பத் திரும்பக் கூப்பிட்டனுப்புவதைக் கண்டு சத்திய மூர்த்தியின் மனம் வெறுப்படைந்தது. அந்த வெறுப்பின் எல்லையிலே அவன் பிடிவாதக் காரனாக மாறினான். வகுப்பை அப்படியே பாதியில் விட்டு விட்டு ஆசிரியர் வெளியேறினால் அந்த வகுப்பில் அமைதி குறையும் என்பதும் அப்படி அமைதி குறைவது — பக்கத்தில் நடைபெற்றுக் கொண்டிருக்கிற மற்ற வகுப்புக்களுக்கு இடையூறாகும் என்பதும் கல்லூரி முதல்வருக்குத் தெரியாத செய்திகள் அல்லவே? தெரிந்திருந்தும் அவர் ஏதோ முரண்டு பிடிப்பது போல் விரட்டியதைக் கண்டு சத்திய மூர்த்தியால் மனம் குமுறாமல் இருக்க முடியவில்லை.

''வகுப்பை அரைகுறையாக விட்டு விட்டு வருவதற்கில்லை என்று போய்ச் சொல்! இல்லையானால் அவர் கைப்படவே வகுப்பைப் பாதியில் நிறுத்திவிட்டு வந்தாலும் பரவாயில்லை — உடனே நான் அவரைப் பார்க்க வந்தாக வேண்டுமென்று எழுதிக் கையெழுத்தும் போடச் சொல்லி வாங்கிக் கொண்டு வா'' என்று கண்டிப்பாகக் கூறி அந்த ஊழியனைத் திருப்பி அனுப்பினான் அவன். அதற்குப் பின் வகுப்பு முடிகிறவரை யாருமே அவனைத் தேடி வரவில்லை. வகுப்பை முடித்துக்



கொண்டு வெளியே வராந்தாவுக்கு வந்ததும் அதே பழைய ஊழியன் சத்தியமூர்த்தியை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்தான். உறையின் மேலே சத்தியமூர்த்தியின் பெயர் - பதவிப் பெயர் எல்லாம் தெளிவாக எழுதப்பெற்ற ஒரு கடிதம் அந்த ஊழியன் கையிலிருந்தது. உறையைச் சத்தியமூர்த்தியிடம் கொடுத்து விட்டு, அதை அவன் பெற்றுக் கொண்டதற்கு அடையாளமாகக் கையோடு கொண்டு வந்திருந்த கல்லூரி அலுவலக நோட்டுப் புத்தகத்தில் ஒரு கையெழுத்துப் போடும்படியும் வேண்டினான் அந்த ஊழியன். சத்தியமூர்த்தி சிறிதும் பதறாமல் 'கடித உறை ஒன்றைக் கல்லூரி அலுவலகத்திலிருந்து பெற்றுக் கொண்டதாக' அதில் கையெழுத்திட்டான். இவ்வளவும் நிகழ்ந்தபோது வகுப்பு முடிந்து வெளியேறிய மாணவர்கள் சத்தியமூர்த்தியைச் சூழ்ந்து கூட்டமாக நின்று பார்த்துக் கொண்டு தான் இருந்தார்கள். வாங்கிய கடித உறையைப் பிரித்துப் படிக்கவும் நேரமில்லாமல் அடுத்த பாட வேளையிலும் அவன் வகுப்பு எடுக்க வேண்டியிருந்தது. எனவே கல்லூரி முத்திரையோடு பிரின்ஸிபால் தனக்கு அனுப்பியிருந்த அந்தக் கடித உறையை அப்படியே வாங்கிக் கையிலிருந்த புத்தகத்தில் சொருகிக் கொண்டு அவசர அவசரமாக அவன் அடுத்த வகுப்பிற்குள் நுழைய வேண்டியதாயிற்று. அந்த வகுப்பையும் முடித்துக்கொண்டு வெளியேறிய பின்புதான் அவனுக்கு ஓய்வு இருந்தது. ஆசிரியர்கள் தங்கும் அறைக்குச் சென்று அமர்ந்து கொண்டு அதை உறையைப் பிரித்துப் படிக்கலானான் சத்தியமூர்த்தி. முதல் நாள் மாலையில் கல்லூரியின் புதிய நிர்வாகியைப் பாராட்டி நடைபெற்ற கூட்டத்தில் நடுவே எழுந்து போனதற்குக் காரணம் கேட்டும் வேறு சில பழைய புதிய குற்றங்களைச் சுமத்தியும் 'எக்ஸ்பிளநேஷன்' கோரியிருந்தார் கல்லூரி முதல்வர். காலையில் நேரில் கூப்பிட்டனுப்பியபோது வர மறுத்ததை— 'இன்ஸபார்டிநேஷன்' (கீழ்ப் பணியாமை) - என்றும் அந்தக் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார். கடிதத்தின் கீழே அது முடிகிற இடத்தின் ஒரு கோடியில் 'காப்பி - டு - தி கரஸ்பாண்டெண்டு' (நிர்வாகிக்கும் நகல் அனுப்பப்பட்டிருக்கிறது) என்று குறித்திருந்ததையும் அவன் நிதானமாகக் கவனித்துப் படித்துக்கொண்டான். ஒரு முறைக்கு இரு முறையாக அந்தக் கடிதத்தைப் படித்து முடித்த பின் மறுநாள் எழுத்து மூலம் அதற்கு எழுதிக் கொடுக்க வேண்டிய மறுமொழியைப் பற்றிக் கூட இப்போதே அவன் மனம் சிந்திக்கத் தொடங்கி விட்டது. அப்படிச் சிந்திக்கத் தொடங்கியபோதில் ஒரே ஒரு விஷயத்தைப் பற்றி மட்டும் அவன்

மணிவண்ணன்

திரும்பத் திரும்ப ஆச்சரியப்பட்டான். சிந்தனைச் சுதந்திரம், சொற் சுதந்திரம், செயல் சுதந்திரம் என்று மேடைகளில் முழங்கும்போதும், இதழ்களில் எழுதும்போதும் — எவ்வளவுதான் கூறினாலும் இன்னொருவன் தனக்குப் பணிந்து அடங்குகிறானா இல்லையா என்பதை அறிந்துகொள்ளும் ஆவல் ஒரு சிறிதும் இல்லாத கௌரவமான மனிதனே உலகில் கிடையாதோ என்று தோன்றியது சத்தியமூர்த்திக்கு. பிறரை ஏவுவதிலும் பிறருக்கு ஆணையிடுவதிலும் திருப்திப்படுகிற மனமுள்ளவர்களால் யாரையாவது எதற்காவது ஏவாமலும் ஆணையிடாமலும் சும்மா இருக்கவே முடியாது. பிறரை அடிமைப்படுத்தி மகிழ வேண்டுமென்ற ஆசை மகா மன்னர்களுக்கும், நவாபுகளுக்கும் சுல்தான்களுக்கும் இருந்ததைப் பழைய வரலாறு சொல்கிறது. ஆனால் நம் தலைமுறையில் நம்முடன் வாழும் ஒவ்வொரு மனிதனிடமுமே அவனவனுடைய புத்திக்கும் அகங்காரத்துக்கும் தகுந்தாற்போல்—இன்னொருவனை அடக்கி ஆள வேண்டுமென்ற அடிமை வேட்கை (வேட்டை) அந்தரங்கமாக இருக்கிறது. நான் சொல்கிறபடியே இன்னொருவன் சொல்ல வேண்டுமென்றும் — நான் செய்கிறபடியே இன்னொருவன் செய்ய வேண்டுமென்றும் எதிர்பார்க்கிறதற்கும் அதிகமாகத் தான் சிந்திக்கிறபடியே தான் இன்னொருவனும் சிந்திக்கவேண்டும் என்று கண்டிப்பாய் எதிர்பார்க்கிற சிந்தனை அடிமைத்தனம் - மிகப் பயங்கரமான தொத்து வியாதியாய் இந்தத் தேசம் முழுவதும் பரவிக் கொண்டு வருகிறதே என்றெண்ணி அஞ்சினான் சத்தியமூர்த்தி. மனிதர்களை மதிப்பதிலும் அவர்களுடைய தராதரங்களைக் கணிப்பதிலும் சொந்தமாகவோ அல்லது பிறர் நினைக்கிற நினைப்பிலிருந்து மாறுபட்டோ—சிந்திப்பதற்கு எனக்கு உரிமை இல்லை என்று கல்லூரி முதல்வர் எண்ணுகிறார் போலிருக்கிறது.'

வாழ்க்கையின் நடுவே தன்னுடைய நியாயத்தையும் நேர்மையையும் காப்பாற்றிக் கொள்வதற்கு இந்த உரிமை மிக மிக அவசியமென்று சத்தியமூர்த்தி கருதினான். மறுநாள் காலையில் பத்து மணிக்குக் கல்லூரிக்குள் நுழைந்ததும் தன்னுடைய மறுமொழிக் கடிதத்தைப் பிரின்ஸிபாலிடம் கொண்டு போய்ச் சேர்த்துவிட்டு வரும்படி அதே பழைய ஊழியனிடம் கொடுத்தனுப்பினான் சத்தியமூர்த்தி. அவன் பிரின்ஸிபாலுக்குக் கொடுத்திருந்த மறுமொழிக் கடிதம் விரிவாகவும் மனத்தில் அழுத்தி உறைக்கும்படியாகவும் எழுதப் பட்டிருந்தது. முன் தினம் மாலை ஆறு மணிக்குக் குமரப்பனும், தாவர இயல் விரிவுரையாளர் சுந்தரேசனும் ஏதோ திரைப் படத்துக்குப் போகலாமென்று சத்தியமூர்த்தியை அழைத்தபோது, தனக்கு வேலை இருப்பதாகச் சொல்லி அவர்களோடு திரைப் படத்துக்குப் போகாமல் அவர்களை மட்டும் அனுப்பி விட்டு அறையில் தங்கி அந்தக் கடிதத்தை எழுதியிருந்தான் சத்தியமூர்த்தி. முதல்வர் அவனை 'எக்ஸ்பிளநேஷன்' கேட்டிருக்கும் செய்தி ஆசிரியர்கள் எல்லாருக்கும் தெரிந்திருந்தது. என்ன காரணத்தினாலோ கல்லூரியின் புது நிர்வாகியான மஞ்சள் பட்டியார் சத்தியமூர்த்தியை அறவே வெறுக்கிறார் என்பதும் சில ஆசிரியர்களுக்குத் தெரிந்திருந்தது. அவனோடு நெருங்கி நின்று பேசினாலோ அவனை அணுகி நின்று சிரித்துக் கொண்டிருந்தாலோ கூடத் தாங்களும் கல்லூரி முதல்வரின் கடுஞ் சினத்துக்கு ஆளாக நேரிடுமோ என்ற பயத்தினால் வழக்கமாக அவனிடம் கலகலப்பாகப் பேசிப் பழகும் சில ஆசிரியர்கள் கூட இப்போது பேசவும் சிரிக்கவும் பயந்து மெல்ல விலகிச் சென்றார்கள். செய்தி மாணவர்கள் மத்தியிலும் பரவலாகத் தெரிந்திருந்தது. 'பிரின்ஸிபாலுக்கும் சத்தியமூர்த்திக்கும் ஏதோ தகராறு' என்று தெரிந்து கொண்டு அந்தத் தகராறில் நிச்சயமாக நியாயம் சத்தியமூர்த்தியின் பக்கம்தான் இருக்க முடியும் என்பதையும் அங்கீகரித்துக் கொண்டு அவன் மேல் நிறைந்த அனுதாபத்தோடு இருந்தார்கள் மாணவர்கள்.

''நான் கேள்விப்பட்டது மெய்தானா மிஸ்டர் சத்தியமூர்த்தி? நீங்கள் 'உதவி வார்டன்' என்ற பெயருக்கேற்ப எந்த உதவியையும் செய்வதில்லை என்றும் நீங்கள் நெருங்கிப் பழகியும், சிரித்துக் கலந்து பேசியும் ஹாஸ்டல் மாணவர்களையெல்லாம் வார்டனிடம் பயமோ மரியாதையோ இல்லாமல் செய்துவிட்டீர்கள் என்றும் இப்போது வார்டனாக இருக்கும் வைஸ் பிரின்ஸிபால் உங்களைப் பற்றிப் பிரின்ஸிபாலிடமும், புதிய நிர்வாகியிடமும் புகார் செய்திருக்கிறாராமே? அந்தப் புகாரைக் கேட்டுவிட்டு 'நீங்கள் உதவி வார்டனாக இருந்து சாதித்தது போதும்; முதலில் இராஜிநாமாச் செய்துவிட்டு மறு வேலை பாருங்கள்' என்று பிரின்ஸிபால் உங்களை இராஜிநாமாச் செய்யும்படி வற்புறுத்துகிறாராமே? உண்மைதானா?'' என்று முற்றிலும் புதியதும்

# கால்கேட்டின்மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஏனெனில், ஒரே தேய்ப்பில் கால்கேட் டெண்டல் கிரீம் துர் நாற்றத்தையும் சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சதவிகிதத்தை ஒழிக்கிறது.

கால்கேட் உடனடியாக வாய்த் துர்நாற்றத்தை 10ல் 7 சந்தர்ப்பங்களில் அகற்றுகிறது என்பதையும், உணவு சாப்பிட்டவுடன் கால்கேட்டினுல் பற்களைத் துலக்கும் முறையால், பற்பசை வரலாற்றிலேயே இதுவரை கண்டிராத பெருமளவில், ஏராளமானவர்களுக்குச் சொத்தை ஒழிக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான பரிட்சைகள் நிரூபித்துள்ளன! இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு!

சாப்பிட்டவுடன் வாயை கொப்பளித்தால் மட்டும் போதாது—சாப்பிட்டவுடன் வழக்கமாக கால்கேட் டெண்டல் கிரீமினுல் உங்கள் பற்களை நன்ருகத் துலக்குங்கள். இதன் வீரியமும், ஊடுருவும் தன்மையுமுள்ள நுரை பற்களின் இடைவெளிகளிலே புகுந்து, சொத்தைக்கும், துர் நாற்றத்துக்கும் காரணமாக இருக்கும் அழுகிய பதார்த்த அணுக்களை அகற்றுகிறது.

கால்கேட்டில் கிடைக்கும் அதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனுலேயே பல் துலக்க விரும்புகிருர்கள்.




வழக்கமாக கால்கேட் உபயோகித்தால், அது:

- ✔ துர் நாற்றத்தை அகற்றுகிறது
- ✔ சொத்தையைத் தடுக்கிறது
- ✔ பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது

நீங்கள் பற்பொடியை விரும்பினுல், இந்த பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.

**பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்ணிற பற்களைப் பெறவும் உலகத்திலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளையும் விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிருர்கள்.**

சத்தியமூர்த்திக்கே அதுவரை தெரியாததுமான ஒரு விஷயத்தை விசாரித்தார் வாயரட்டையில் கெட்டிக்காரரான பேராசிரியர் ஒருவர். நடந்ததாகத் தெரிந்தவை—இனி நடக்குமென்று தாங்களாகவே அநுமானித்துக் கொண்டவை — எல்லாவற்றையும் பற்றித் தாராளமாகப் பேசி வம்பளக்கத் தொடங்கியிருந்தார்கள். பிரின்ஸிபாலுக்காக எழுதி எடுத்துக் கொண்டு வந்திருந்த கடிதத்தை அவருக்குக் கொடுத்தனுப்பிவிட்டு ஆசிரியர்கள் தங்கும் அறையில் அமர்ந்திருந்தபோதுதான் இவ்வளவு வம்புகள் அங்கு நிரம்பிக் கிடப்பதைச் சத்தியமூர்த்தியே புரிந்துகொள்ள முடிந்தது. அன்றைக்கென்று நேர்ந்தாற்போல் முதல் இரண்டு பாட வேளைகளும் அவனுக்கு எந்த வகுப்பும் இல்லை. பதினொரு மணிக்கு அவனைப் பிரின்ஸிபால் கூப்பிடுவதாகக் கல்லூரி ஊழியன் வந்து தெரிவித்தான். சத்தியமூர்த்தி உடனே அவரைச் சந்திக்கச் சென்றான். ஏதோ

**பொன் விலங்கு**

**பிறரை ஏவுவதிலும் பிறருக்கு ஆணையிடுவதிலும் திருப்திப்படுகிற மனமுள்ளவர்களால் யாரையாவது ஏவாமலும் யாருக்காவது ஆணையிடாமலும் சும்மா இருக்கவே முடியாது.**

பெரிய கலகத்துக்காகக் காத்திருப்பது போலப் பிரின்ஸிபால் அறை—வீரர்கள் கைகலப்பதற்கு முந்திய போர்க்களமாய் அமைதி மண்டியிருந்தது. மின்சார விசிறி ஓசைப்படுவதற்கும் பயந்தாற் போல் மெல்ல ஓசைப்பட்டுச் சுற்றிக் கொண்டிருந்தது. சுவரில் நான்கு பக்கமும் பெரிய பெரிய நிலைக்கண்ணாடி அளவுக்குச் சட்டம் போட்டு மாட்டப் பட்டிருந்த காந்தியடிகள் படம், விவேகாநந்தர் படம், கவி ரவீந்திர நாத் தாகூர் படம், மகா கவி பாரதியார் படம் எல்லாம் அந்த அறையில் வந்து சிறைப்பட்டு விட்டதற்காக வருத்தப் பட்டுக் கொண்டிருப்பது போல் அமைதியாயிருந்தன. புதிதாகப் பூபதி அவர்களின் படமும் அறையின் முக்கியமானதொரு பகுதியில் மாட்டப்பட்டிருந்தது. சத்தியமூர்த்தி உள்ளே வந்து நின்று பத்து நிமிடங்கள் வரை அவன் வந்து நிற்பதையே கவனிக்காதவர் போல் குனிந்து எழுதிக்கொண்டிருந்தார் பிரின்ஸிபால். மேஜை மேல் டெலிபோன் — பின் குஷன் — மை ஒத்தும் தாள் பதித்த கட்டை—பைல் கட்டுக்கள் — சத்தியமூர்த்தியின் பிரிக்கப்பட்ட கடிதம் எல்லாம் இருந்தன. அவர் வேண்டுமென்றே தன்னை அலட்சியம் செய்ய முயல்வதாகத் தோன்றியது சத்தியமூர்த்திக்கு. ஒரு கனைப்புக் கனைத்துவிட்டு நாற்காலியை ஓசைப்படும்படியாக அழுத்தி இழுத்துப் போட்டுக் கொண்டு அவருடைய மேஜைக்கெதிரே உட்கார்ந்துகொண்டான் அவன். முன்பே அவன் வந்திருப்பது தெரிந்திருந்தும் அப்போதுதான் நிமிர்ந்து பார்ப்பவர் போல் பார்த்து, "ஓ! நீங்களா?" என்று கேட்டு விட்டு எழுதிக் கொண்டிருந்ததைத் தொடர்ந்து எழுதலானார். சத்தியமூர்த்தி சுவரில் படங்களாக இருந்த மேதைகளின் ஒளி நிறைந்த கண்களை நோக்கத் தொடங்கினான். 'இந்த நாட்டில் பிறரை அதிகார வெறியோடு அடக்கி யாள்வதில் மகிழ்ச்சியடையக் கூடிய எத்தனையோ அற்பர்களுடைய அறையில் இப்படித் தான் நீங்களெல்லாம் படங்களாகத் தொங்கிக் கொண்டிருக்கிறீர்கள். பாவம்!' என்று நினைக்கத் தோன்றியது அவனுக்கு. இப்போது மேஜையிலிருந்த டெலிபோன் மணி அடித்தது. பிரின்ஸிபால் எழுதிக் கொண்டிருப்பதிலிருந்து விடுபட்டு டெலிபோனை எடுத்தார். சத்தியமூர்த்தியை அப்போது அங்கே எதிரே வைத்துக் கொண்டு பேசுவதற்குச் சிரமப்பட்டார் அவர். மிக அருகில் இருந்ததனால் டெலிபோனில் எதிர்ப் புறமிருந்து ஒலித்த குரலை அவனும் ஓரளவு கேட்க முடிந்தது. மஞ்சள்பட்டியாரின் குரல்தான் அது! முன்னும் பின்னும் தொடர்பில்லாமல் காதில் விழுந்தாலும் — 'பயலைத் தொலைத்துக் கட்டிவிட்டு மறு காரியம் பாருங்க' என்று எதிர்ப் பக்கமிருந்து டெலிபோனைக் கீழே வைப்பதற்கு முன் இரைந்து ஒலித்த வாக்கியம் அவனுக்கு நன்றாகக் கேட்டது. டெலிபோனைக் கீழே ரெஸ்ட்டில் வைத்துவிட்டு, எழுதிக் கொண்டிருந்த காகிதங்களையும் அடுக்கி டிராயரில் போட்ட பின் மேஜை மேல் இருந்த 'பைல்' கட்டுக்களை இங்கும் அங்குமாக இரண்டு முறை நகர்த்தியும் முடிந்த பிறகு அவனை விசாரிப்பதற்குத் தயாராகிவிட்டவர் போல் ஒரு கனைப்புக் கனைத்துவிட்டுத் தலை நிமிர்ந்தார் பிரின்ஸிபால். உடனே மணியடித்து அந்த மணிக்கு விடையாக வந்து நின்ற ஊழியனிடம் ஹெட் கிளார்க்கை

வரச் சொல்லிக் கூறி அனுப்பினர். ஹெட் கிளார்க் வந்து நின்றுகொண்ட பின் சிறிது நேரம் சத்தியமூர்த்தி இருந்த பக்கமே கவனிக்காமல்-அவன் அங்கு இருப்பதையும் மறந்துவிட்டவர் போல் - ஹெட் கிளார்க்கிடம் வேறு ஏதேதோ பேசிக் கொண்டிருந்தார். அப்புறம் சத்தியமூர்த்தியின் பக்கமாகத் திரும்பித் திடீரென்று அவர் பேச்சை ஆரம்பித்தபோது ஹெட் கிளார்க் வெளியேறாமல், தானாக அங்கு ஆணி அடித்தாற் போல் நின்றுகொண்டது சத்தியமூர்த்திக்கு அநாகரிகமாகத் தோன்றியது. பிரின்ஸிபாலும் ஹெட்கிளார்க் அங்கு தன்னோடு உடனிருப்பதையே விரும்புவது போல் தெரிந்தது. பிரின்ஸிபால் பேசத் தொடங்கி விட்டார் :

''மிஸ்டர் சத்தியமூர்த்தி! உங்களுடைய 'எக்ஸ்பிளனேஷனை'ப் படித்தேன்! நான் கேட்டதற்குப் பதில் இல்லை.!.... வேறு என்னென்னவோ வளைத்து வளைத்து எழுதியிருக்கிறீர்கள்....''

''வளைத்து வளைத்து எதையும் எழுதவில்லை சார்! நீங்கள் ஏதேதோ குற்றங்களை யெல்லாம் என் மீது சுமத்தியிருந்தீர்கள். அந்தக் குற்றங்களை 'நான் செய்யவில்லை' என்று விளக்கம் எழுதியிருந்தேன்.''

''அப்படியில்லை! நேற்று நான் உங்களைக் கூப்பிட்டனுப்பியபோதே நீங்கள் என்னைப் பார்க்க வந்திருக்கலாம். நீங்கள் வர மறுத்தது உங்களுடைய 'அர்ரகென்ஸை' (திமிரை)த் தானே காண்பிக்கிறது? நீங்கள் உங்களைப் பற்றி ரொம்பவும் டூ...மச்... ஆக (அதிகமாக) நினைத்துக் கொண்டுவிட்டதுதான் இதற்கெல்லாம் காரணம்...''

''வகுப்பைப் பாதியில் விட்டுவிட்டு வருவதற்கு நான் தயாராக இல்லை சார்! 'வகுப்பைப் பாதியில் விட்டாலும் பரவாயில்லை! உங்களை உடனே பார்த்தாக வேண்டும்' என்று நீங்கள் எழுத்து மூலம் எழுதி அனுப்பியிருந்தால் வந்திருப்பேன்.''

''நான் எப்படி எதைச் செய்யவேண்டும் என்று வரையறுக்க நீங்கள் யார்?''

''நான் உங்களுக்குக் கீழே வேலை பார்க்கிற ஒரு சாதாரண விரிவுரையாளன்தான்! ஆனால் நான் மதிக்கவும்—வணங்கவும் தலைவராக ஏற்றுக் கொள்ளவும் உங்களிடம் சில குறைந்த பட்சத் தகுதிகளாவது இருக்க வேண்டும் என்று என் மனம் ஒவ்வொரு விநாடியும் உங்களிடம் தகுதிகளைத் தேடிக் கொண்டிருக்கிறதென்பதை நீங்கள் மறந்துவிடக் கூடாது!''

''நான்ஸென்ஸ்! நீங்கள் எல்லை மீறிப் பேசுகிறீர்கள்!''

''............''

''பல காரணங்களால் உங்களைப் போன்ற ஒருவர் 'டிபுடி வார்ட'னாக இருப்பதை நானும் — நிர்வாகியும்—வார்டனும் விரும்பவில்லை. நீங்கள் உடனே 'டிபுடி வார்டன்' பதவியை 'உங்களால் பார்க்க முடியவில்லை' என்று ரிஸைன் (இராஜிநாமா) செய்ய வேண்டும்...!''

''பிரின்ஸிபால் சார்! தயவுசெய்து இதற்கு ஒரு சிறு விளக்கம் உங்களிடமிருந்து எனக்கு உடனே தேவை!''



''என்னைச் சாமான்யமா எண்ணு கிறீர்கள் சார்! நான் பழ வியாபாரத் தில் பழுத்த பழமாக்கும்!''

''என்ன விளக்கம்?''

''ரிஸைன் செய்வது என்ருல் என்ன?''

''புரியாவிட்டால் பச்சைத் தமிழில் தெளிவாகவே சொல்லுகிறேன். நீங்கள் இராஜிநாமா செய்ய வேண்டும்...''

''...என்று நீங்கள் என்னை வற்புறுத்துகிறீர்கள்! இல்லையா?''

''விதண்டாவாதம் செய்யாதீர்கள்.''

''நீங்கள்தான் இதுவரை அதைச் செய்துகொண் டிருக்கிறீர்கள். 'இராஜிநாமா' என்ருல் யார் அதைச் செய்கிருனே அவனே விட்டுவிட விரும்பி அல்லவா செய்ய வேண்டும்? நீங்கள் கூப்பிட்டு மிரட்டுகிறீர்கள் என்பதற்காக அதை நான் எப்படிச் செய்ய முடியும்? 'வேண்டுமானுல் பிரின்ஸிபாலும் கல்லூரி நிர்வாகியும் என்னைக் கூப்பிட்டு மிரட்டுவதால் நான் என்னுடைய 'டிபுடி வார்டன்' பதவியை இராஜிநாமாச் செய்கிறேன்' என்று உண்மைக் காரணத்தையும் அதிலேயே எழுதிக் கையெழுத்துப் போடுகிறேன். அல்லது 'டிபுடி வார்டனுக' இருக்க எந்தெந்தக் காரணங்களால் நான் தகுந்தவன் அல்ல என்பதைக் கூறி என்னை அந்தப் பதவியிலிருந்து நீங்களே தைரியமாக நீக்கி விடுங்கள்.''

''நீங்கள் 'டிபுடி வார்ட'னுகை இருந்து ஹாஸ்டலில் எதுவுமே செய்யவில்லை.''

''இது முழுப் பொய்! ஹாஸ்டலில் உள்ள நூற்றுக் கணக்கான மாணவர்களைக் கூப்பிட்டு ஓர் இடத்தில் கூட்டம் கூட்டி என்னை முன் நிறுத்தி இந்தக் கேள்வியைக் கேளுங்கள்! 'நான் எதுவும் செய்யவில்லை' என்று ஒரு மாணவன் வாய் திறந்தாலும் நான் 'டிபுடி வார்டன்' வேலை, லெக்சரர் வேலை எல்லாவற்றையும் விட்டுவிடத் தயார். வார்டனுக இருப்பவர் ஹாஸ்டல் பக்கமே எட்டிப் பார்ப்பதில்லை. 'நமக்கென்ன டிபுடி வார்டன்தானே?' என்று சும்மா இராமல் நான் ஆர்வத்தோடு ஓடியாடிப் பாடுபட்டதற்கு உங்கள் வார்த்தை நல்ல பரிசாக இருக்கிறது சார்! உங்களுக்கு என் மேல் வெறுப்பு இருக்கலாம். அதற்காக என்னைப் பற்றிய உண்மைகளை நீங்கள் மறைப்பது பாவம்...''

''சுற்றி வளைத்துப் பேச விருப்பமில்லை மிஸ்டர் சத்தியமூர்த்தி! நீங்கள் டிபுடி வார்டனுக இருப்பது நம்முடைய புதிய நிர்வாகிக்குப் பிடிக்கவில்லை! இன்னும் வயது முதிர்ந்தவர் யாராவது 'டிபுடி வார்டனுக' இருக்க வேண்டு மென்று அவர் ஆசைப்படுகிருர்....''

''மிகவும் நல்லது! இதே காரணத்தைக் கல்லூரி நோட்டீஸ் போர்டில் எழுதித் தொங்க விட்டு விட்டு நீங்களோ, நிர்வாகியோ என்னை டிபுடி வார்டன் பதவியிலிருந்து வெளியேற்றினுல் போகிறது. அதற்காக என்னை இராஜிநாமாச் செய்யும்படி தூண்டுவானேன்? அதிகாரம் உங்களிடம் இருக்கிறது. வெறும் நியாயம்தானே என்னிடம் இருக்கிறது! உங்களால் முடிந்ததை நீங்கள் செய்யலாமே?'' என்று கூறிவிட்டுப் பிரின்ஸிபால் அறையிலிருந்து அவன் வெளியேறுவதற்காக எழுந்திருந்தபோது எதிரே சுவரில் இருந்த காந்தியடிகளின் படம் அவனுடைய பார்வையைச் சந்தித்தது.

''ஏ மகாத்மாவே! உன்னை மகாத்மாவாகப் புரிந்துகொண்டிருக்கிற இந்தத் தேசத்தில் சாதாரண ஆத்மாக்கள் ஒவ்வொன்றும் எப்படி இருக்கின்றன பார்த்தாயா?'' என்று அந்தப் படத்திற்கு முன்னுல் கோவென்று கதறி அழவேண்டும் போல் தோன்றியது அவனுக்கு. அவன் பிரின்ஸிபால் அறையிலிருந்து கோபமாக வெளியேறியதை இடைவேளைக்காக மைதானத்தில் கூட்டம் கூட்டமாக வெளியேறி நடந்து கொண்டிருந்த மாணவ மாணவிகளும் அப்போது பார்த்தார்கள். அரை மணி நேரத்துக்கெல்லாம் சத்தியமூர்த்தி ஏதோ ஒரு வகுப்பில் இருந்தபோது கல்லூரி ஊழியன் இரண்டாவது முறையாகக் கல்லூரி அலுவலக முத்திரையோடு கூடிய ஒரு தடித்த கடித உறையை அவனிடம் கொண்டு வந்து கொடுத்துவிட்டுக் கையெழுத்தும் வாங்கிக் கொண்டு சென்ருன். (தொடரும்)

நெடுங்கதை

# ஒஷப்பரீட்சை

குமிலன்



அந்தப் பெரிய பங்களாவின் கூர்க்கா காவற்காரனும், தோட்டக்காரனும் உட்புறம் சுவரின் ஓரமாக உட்கார்ந்து கொண்டு பதினெட்டாம் புள்ளி ஆட்டத்தில் மும்முரமாக ஈடு பட்டிருந்தனர். அதனால் அப்போது வாசலில் 'கேட்டு'க்கு வெளியே யிருந்து புத்தம் புதிய கிறிஸ்லர் மோட்டார் வண்டி சப்தமின்றி வந்து நின்றது அவர்களுக்குத் தெரியாது.

டிரைவர் ஊதுகுழலை அமுக்கக் கையைக் கொண்டு போன சமயம் ''வேண்டாம், அவர்களாகவே வரட்டும்!'' என்று வண்டியின் பின்பக்க ஆசனத்தில் அமர்ந்திருந்தவர் மெதுவாகச் சொன்னார். ஆனால் அந்தப் பேச்சுச் சப்தம் கேட்டுக் கூர்க்காவும் தோட்டக்காரனும் பாய்ந்தோடி வந்து இரும்புச் சட்டக் கதவுகளைத் திறந்து விட்டனர். பிறகு யஜமானர் என்ன சொல்வாரோ என்று அவ்விருவரும் வண்டிக்குள்ளிருந்தவரின் முகத்தைப் பார்த்துக் கொண்டு கைகளைப் பிசைந்து கொண்டு நின்றனர். ஆனால் அந்த யஜமானரோ, சுவர்களுக்கு வெளிப்புறத்தில் சலவைக் கற்களில் பொறிக்கப் பட்டிருந்த பெயர்களைக் கவனித்துக் கொண்டிருந்தார். ஒரு பக்கத்தில் 'ராஜி' என்றும் இன்னொரு பக்கத்தில் 'கைலாசம்' என்றும் பெயர்களிருந்தன. வலது பக்கத்தில் தமது மனைவியின் பெயரைப் போட்டு அவளுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்திருப்பது அவருக்கு ஞாபகம் வந்தது.

வண்டி வழவழவென்றிருந்த தோட்டப் பாதை மீது நழுவிச் செல்வது போல் ஓடிச் சென்று பங்களாவின் முகப்பு மண்டபத்தில் நின்றது. மறு கணம் அங்கே தயாராய் நின்றுகொண்டிருந்த சேவகப் பையன் வண்டிக் கதவைத் திறந்து விட்டு அதைப் பிடித்துக் கொண்டிருந்தான். கைலாசம் கீழே இறங்கினார். ''மாணிக்கம்! ஐந்து நிமிஷத்தில் வந்து விடுவேன்!'' என்று டிரைவரைப் பார்த்துக் கூறிவிட்டு வீட்டுப் படிகளின் மீது ஏறிச் சென்றார். தாம் திரும்பி வரும் சமயம் டிரைவர் பரிசாரகனுடனோ, மற்ற வேலைக்காரர்களுடனோ போய் வம்பளந்து கொண்டிருக்கக்கூடாது என்பதற்காக அப்படித் தெரிவித்துவிட்டுச் சென்றார்.

அவர் முதலிலிருந்த 'டிராயிங் ரூமை'க் கடந்து, அப்பாலிருந்த மாடிப் படிக்கட்டுப் பக்கம் சென்றார். அங்கே நின்று கொண்டிருந்த குமாஸ்தா குப்புசாமியைப் பார்த்து, ''அம்மா மேலே இருக்கிறாங்களா?'' என்று விசாரித்தார்.

''இல்லே!'' என்றான் குப்புசாமி.

"எங்கேயோ?" என்று கேட்டார்.

"ஷாப்புக்கோ, ஸினிமாவுக்கோ, சிநேகிதர்கள் வீட்டுக்கோ, அல்லது மௌண்ட் ரோட்டில் துணிக் கடைகளுக்கோ போயிருக்கலாம்!" என்று பதில் வந்தது.

கைலாசம் மாடிக்குச் செல்லப் படிகளில் ஏறினார். இரண்டு படிகள் ஏறியதும் நின்று திரும்பிப் பார்த்து, "நவமணி?" என்று குமாஸ்தாவைக் கேட்டார்.

"சின்ன அம்மா காலையிலே சாப்பிட்டு விட்டுப் போனாங்க. அப்புறம் வரவில்லே" என்று குப்புசாமி தெரிவித்தான்.

கைலாசம் படிகளில் ஏறிச் சென்றார். அவர் காலடி எடுத்து வைத்ததில் முதலிலிருந்த துடிப்பில்லை. படிகளை எண்ணிக் கொண்டு போவது போல் மிகவும் நிதானமாகக் காலைத் தூக்கி வைத்துச் சென்றார்.

அவர் அங்கே ஒரு இரும்புப் பீரோவைத் திறந்து ஒரு 'பைலை' வெளியிலெடுத்தார். 'கைலாசம் கம்பெனி, பங்கு தரகர்கள்' என்று அதன் மேலே அச்சிடப் பட்டிருந்தது. அதற்குள்ளிருந்த கடிதங்களைப் புரட்டிப் பார்த்து அதில் தமக்குத் தேவையாயிருந்ததை எடுத்துக் கொண்டார். பீரோக் கதவைப் பூட்டிவிட்டுத் திரும்பியபோது எதிரிலிருந்த நிலைக் கண்ணாடியை அவர் பார்க்க நேரிட்டது. தமக்கு வயது ஐம்பதுக்கு மேலாகியும் தாம் நல்ல வாலிபத்துடன் இருப்பதைக் கண்டார். தினமும் தான் அவர் தம்மைக் கண்ணாடியில் பார்த்துக் கொண்டு வந்திருந்தபோதிலும் அன்றென்னமோ அவருக்கு அப்படிப் புதிதாகத் தோன்றிற்று. அவர் மனத்தில் ஏற்பட்டிருந்த கிளர்ச்சியினால் போலும்.

அவர் மாடிப் படிகளில் இறங்கவிருந்த சமயம் பாட்டுச் சத்தம் கேட்டது. ஏதோ 'ராக் அண்டு ரோல்' படப் பாட்டுப் போலிருந்தது. எந்த அறையிலாவது ரேடியோ வைத்திருக்கிறார்களோ என்னமோ என்று எண்ணிக் கொண்டிருந்தபோது வராந்தாப் பக்கமிருந்து ஒரு வாலிபன் வந்தான். அவன் கைலாசத்தைப் பார்த்ததும் திடுக்கிட்டான். அவனது வலது கையில் கிரிக்கெட் மட்டை இருந்தது. மார்பில் 'டிரான்ஸிஸ்டர்' ரேடியோ தொங்கிக் கொண்டிருந்தது. இடது கை அவனை யறியாமலேயே அவன் வாய்ப் பக்கம் சென்று அது பிடித்துக் கொண்டிருந்த சிகரெட்டை 'டபக்'கென்று பிடுங்கி முதுகுப் பக்கமாகக் கொண்டு போயிற்று. அப்போது விரல் நெருப்பில் பட்டுச் சுட்டதைக் கூட அவன் உணரவில்லை.

"அப்பாவா? நீங்கள் ஒரு நாளும் ஏழு மணிக்கு முன்னால் வருவதில்லையே?" என்று அவன் சற்று ஆச்சரியத்துடன் கூறினான்.



''ஒரு கடிதம் எடுத்துக் கொண்டு போக வேண்டியிருந்தது. அதற்காக வந்தேன்'' என்று கூறிவிட்டு ''உனக்கு இன்றைக்குக் காலேஜ் இல்லையா?'' என்று கேட்டார்.

''உண்டே. போய்விட்டு வந்தேன். கடைசி இரண்டு பீரியட் பாடத்துக்கும் புரொபஸர் வரவில்லை. அதனால் முன்னாடியே வந்து விட்டேன்.''

கைலாசம் தமது பிள்ளையை ஏற இறங்கப் பார்த்தார்.

''இப்படி வா!'' என்று அழைத்துவிட்டு ஹாலில் ஸோபாவில் போய் உட்கார்ந்தார்.

துரை, தான் ஒளித்து வைத்திருந்த சிகரெட் துண்டை அணைத்து அப்பால் போட்டு விட்டுத் தந்தையின் எதிரில் வந்து உட்கார்ந்தான். தன்னை அதைப் பற்றித்தான் விசாரித்துக் கண்டிக்கப் போகிறார் என்று அவன் எதிர்பார்த்திருந்தான். ஆனால் அதற்காக அவன் பயப்பட்டுக் கொண்டிருந்ததாகத் தோன்றவில்லை. அவன் எதிர்த்து வாயாடத் தயாராயிருக்கிறான் என்று கைலாசத்தின் மனத்தில் பட்டது.

''கைவிரலில் ஆயின்ட்மெண்ட் ஏதாவது எடுத்துப் போடு!'' என்றார்.

பையன் பதில் அளிக்கவில்லை.

''சிகரெட் நெருப்புச் சுட்டிருக்கப் போகிறது.''

துரை தலையையாட்டினான். பிறகு ''நான் இன்றைக்குத்தான் முதன் முதலில் ஒன்று...'' என்று ஆரம்பித்தான்.

''நீ இப்போது பிடித்துக் கொண்டிருந்த தற்கு என்ன பெயர்?''

துரை பதில் அளிக்கவில்லை.

''சும்மா சொல்லு! நான் ஒரு காரியத்துக்காகக் கேட்கிறேன். ஏதாவது ஒரு புது வியாபாரம் செய்யலாமென்று உத்தேசம்.''

அவர் தன்னைப் பரிகாசம் செய்கிறாரா, அல்லதுஉண்மையிலேயே வியாபாரம் சம்பந்தமாகத்தான் கேட்கிறாரா என்று துரையால் கண்டுபிடிக்க முடியவில்லை. எதையாவது சொல்லிவிட்டுச் சீக்கிரம் அவரிடமிருந்து தப்பிச் செல்ல விரும்பினான்.

''பிலியர்ட்ஸ்'' என்று முணுமுணுப்பது போல் கூறினான்.

''அப்படியா? அதிலென்ன விசேஷம்?''

''அது வாசனையடித்துக்கொண்டிருக்கும்!''

''பில்டர் 'டிப்' என்பதாக விளம்பரம் செய்கிறார்களே, அப்படி என்றால் என்ன?''

''சிகரெட்டை வாய்க்குள் வைத்துக் கொள்கிற பக்கத்தில் தடியாகப் பஞ்சு வைத்திருக்கும். அதன் வழியாகப் புகையிலுள்ள நிகோட்டைன் சத்து வடிகட்டப் பட்டுக் குறைவாக வரும்...''

அவன் இவ்வளவு விவரமாகக் கூறியதைக் கவனமாகக் கேட்டுக்கொண்டு வந்த கைலாசம் சிறிது யோசனை செய்தவண்ணமிருந்துவிட்டு, பிறகு ''பஞ்சநதம் என்கிறது யார்?'' என்று கேட்டார்.

''கல்லூரியில் என் பக்கத்தில் உட்கார்ந்து கொள்ளும் பையன்'' என்று துரை கூறி விட்டு, ''ஏன்?'' என்றான்.

''ஒன்றுமில்லை. அவன் தந்தை ராமநாதன் என்பவர் இன்று டெலிபோன் செய்தார். அவர் பிள்ளைக்கு இன்று காலேஜில் அபராதம் போட்டார்களாம். அதற்குக் காரணம் நீதான் என்றார்!''

''என்ன நடந்தது என்பதை நானே சொல்லிவிடுகிறேன் அப்பா. ஷேக்ஸ்பியரின் 'மூன்றாவது ரிச்சர்ட்' என்ற நாடகம் பாடம் நடத்தினார்கள்.''

''இரண்டு சிறுவர்களைக் கொன்றானே அவன்தானே?'' என்று கைலாசம் கேட்டு வைத்தார்.

''ஆமாம்! அவன் தான் கொன்றுவிட்ட பட்டத்திளவரசன் மனைவி ஆன் சீமாட்டியுடன் பேசிக் கொண்டிருந்தபோது தனது காதலைத் தெரிவித்தான். அவள் கோபித்து, 'நரகத்தைத் தவிர வேறெந்த இடத்தில் இருக்கவும் யோக்கியதையற்றவன்' என்றாள். 'ஆனால் ஒரே ஒரு இடம் இருக்கிறது. அதைச் சொல்லட்டுமா?' என்றான். 'ஏதாவது பாதாளச் சிறைதானே?' என்றாள் ஆன். 'உன்னுடைய படுக்கையறை' என்று ரிச்சர்ட் தெரிவித்தான்.''

''அப்புறம்?'' என்றார் கைலாசம். விஷயம் ரஸக் குறைவான காதல் சம்பந்தப் பட்டதானதால் பையன் மறக்காமல் விவரமாகக் கூறுகிறான் என்று அவர் நினைத்தார்.

''வைஸ் பிரின்ஸிபால் கடைசி வாக்கியத்தைச் சற்றுச் சிரித்துக்கொண்டு விஷமத்தனமாகக் கூறினார். பையன்கள் எல்லாரும் மேஜையைக் கையால் தட்டிச் சீட்டி அடித்தார்கள்.....''

''ஊம்!''

''எனக்கு முன் வரிசையில் ஒரு பெண் உட்கார்ந்திருந்தாள். திடீரென்று அவள் முன் பக்கம் சாய்ந்து மேஜை மீது தலையை முட்டிக்கொண்டாள்.''

''உற்சாகம் பிறந்தால் அவள் அப்படிச் செய்கிறது வழக்கமாக்கும்!''

''அதென்னமோ! புரொபஸர் எங்கள் மீது தப்பாகச் சந்தேகப்பட்டார். நாங்கள் யாராவது ஒருவர்தான் நாற்காலியின் கீழ் காலைக் கொடுத்து அதைக் ஒளப்பியிருக்க வேண்டுமென்றார். எங்களுக்கு ஒன்றும் தெரியாது என்று சத்தியம் செய்து சொல்லியும் அவர் ஒப்புக்கொள்ளவில்லை. வகுப்பு முழுதுக்கும் தலைக்கு ஒரு ரூபாய் அபராதம் போட்டார். எனக்கும் பஞ்சநதத்துக்கும் மட்டும் பத்துப் பத்து ரூபாய்.''

''அபராதம் செலுத்தியாகிவிட்டதா?''

''உடனே ஒரு நூறு ரூபாய் நோட்டை எடுத்து புரொபஸர் மேஜைமீது போட்டேன். இரண்டு பேருக்கும் அபராதப் பணத்தை எடுத்துக்கொள்ளச் சொன்னேன்.''

''பணம் தயாராகக் கொண்டுபோயிருந்தாயாக்கும். உனக்கு ஏது பணம்?''

''நீங்கள்தான் என் கைச்செலவுக்காக மாதா மாதம் நூறு ரூபாய் கொடுக்கிறீர்களே....?''

''அது மறந்து போச்சு.''

''அந்தப் பஞ்சநதத்தின் அப்பா வேறு என்ன சொன்னார்?''

''அவர் பிள்ளைக்கு ஒன்றுமே தெரியாதாம். நீதான் அந்தப் பெண்ணின் நாற்காலியின் அடியில் காலை விட்டு அதைத் தூக்கிக் கவிழ்த்தாயாம்.''

''சுத்தப் பொய். இனிமேல் யாராவது சொல்வதை நம்பிக்கொண்டு என்னை இப்படி

யெல்லாம் விசாரணை செய்யாதீர்கள் அப்பா!'' என்று துரை கோபமாகக் கூறிக் கொண்டே எழுந்திருந்தான். மாடிப் படிகளில் வேகமாக இறங்கிச் சென்று விட்டான்.

கைலாசத்தின் மனத்தில் பலவிதமான எண்ணங்கள் குமிழியிட்டுக் கிளம்பிக் கொண்டிருந்தன. அவர் ஏதோ ஒரு தீர்மானத்துக்கு வந்தவர்போல் அவற்றையெல்லாம் மறந்துவிட்டு வெளியே கிளம்பினர்.

**சா**தாரணமாகக் கைலாசம் எப்போதும் முக மலர்ச்சியுடன் இருப்பது வழக்கம். ஆனல் அன்று வண்டியில் சென்று கொண்டிருந்த அவர் முகத்தில் கவலே தோய்ந்திருந்தது. எதிரே சற்றுத் தூரத்தில் தமது மனைவியின் மோட்டார் வண்டி வந்து கொண்டிருப்பதைக் கண்டு விட்டார். அது அவர் சமீபத்தில் அவளுக்கென்று வாங்கிக் கொடுத்திருந்த ஜப்பானிய காண்ட்டெஸா வண்டி. அவருக்கு அவசர வேலே யிருந்ததாலும், துரை சம்பந்தமாக மன நிலேமை சரியில்லாததாலும் வண்டியை நடுவில் நிறுத்தி அவளோடு பேசி விட்டுப் போயாக வேண்டிய அவசியத்தைத் தவிர்க்க விரும்பினர்.

அவர் இருந்த கிறிஸ்லர் வண்டியும் அவர் மனைவி சென்று கொண்டிருந்த கௌண்ட்டெஸா வண்டியும் வெளிநாட்டு வண்டிகள். இப்போது இறக்குமதி செய்யப்படாதவை. அவை இரண்டையும் அவர் டில்லியில் ஏலத்தில் எடுத்தார். அவற்றை வாங்கக் கூடிய நிலேமை தமக்கு ஏற்பட்டதை நினேத்துப் பார்த்த போது அவருக்குத் தம்மைப் பற்றிய பழைய ஞாபகங்கள் வந்தன.

அவர் பத்து வருடங்களுக்கு முன்னர் ஒரு பங்குதாரர் காரியாலயத்தில் சாதாரணக் குமாஸ்தாவாகத்தான் இருந்தார். அப்போது மௌண்ட் ரோடிலிருந்து, மயிலாப்பூரில் உள்ள தமது வீட்டுக்குச் செல்வதற்குச் சில சமயம் பஸ் டிக்கெட் வாங்கக் கூடச் சில்லறை இல்லாமல் பல தினங்கள் நடந்தே செல்வார். கச்சாலீசுவரர் தேவஸ்தானத்துக்குச் சொந்தமான ஒரு பழைய கால வீட்டில் பத்துக் குடித்தனங்களோடு பதினேராவது குடித்தனமாக வசித்து வந்தார். அவர் மனைவி ராஜிக்குப் பவுன் நகை என்ருல் என்ன என்று தெரியாது. பெண் நவமணியை எப்படியோ சிரமப்பட்டு எஸ். எஸ். எல். ஸி. வரையில் படிக்க வைத்தார். பிறகு தன் சகோதரியைக் கெஞ்சிக் கூத்தாடி அவள் பிள்ளைக்குத் தன் பெண்ணைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளும் படி செய்தார்.

பிறகு அவரது வாழ்க்கையில் ஒரு திருப்பம் ஏற்பட்டது. அவர் வேலே பார்த்து வந்த கம்பெனியின் முதலாளிக்கு விரோதியான ஒரு செல்வந்தர், அவருக்கு நிறைய பண உதவி செய்து சொந்தத்தில் ஒரு பங்குதாரர் கம்பெனியை ஆரம்பிக்கச் செய்தார். கைலாசம் பங்கு சம்பந்தமான பேரங்கள் செய்வதில் நிபுணர். அத்துடன் யோக்கியமானவர்கூட. அவர் சொந்தத்தில் வியாபாரம் ஆரம்பித்த போது பழைய கம்பெனியின் வாடிக்கைக்காரர்கள் பலர் அவரைத் தேடி வந்தனர். தொழில் சிறிது சிறிதாகப் பெருகி ஏழெட்டு வருட காலத்தில் முதல்தர அந்தஸ்தையடைந்து விட்டது.

கைலாசம் தமது மனேவி மக்களேச் சுக போகத்தில் ஆழ்த்த விரும்பினர். மனைவி என்ன செலவு செய்தாலும் வாயைத் திறந்து ஒரு வார்த்தை சொல்வதில்லே. ஒரு ஜமீந்தாரின் பங்களாவை விலேக்கு வாங்கினர். குடும்பத்தினர் உபயோகத்துக்காக மூன்று மோட்டார் வண்டிகள் வைத்திருந்தார். அவர் தமது வியாபாரத்தை உத்தேசித்தும் இப்படிச் செய்தார். 'அவர் நல்ல பண வசதி

## வருங்கால வாகனம்

1963ம் வருஷத்தில் வாழும் நாம் இருபத்தியோராம் நூற்ருண்டில் உலகம் எப்படி யிருக்கும் என்பதைக் கற்பனே செய்து பார்ப்பது கூடக் கடினம்தான். ஆனல் வருடம் இரண்டாயிரமாகும்போது கார்கள் எப்படி இருக்கும் என்பதை 'கிறிஸ்லர் கார்ப்பொரேஷன்' என்னும் அமெரிக்கக் கார் உற்பத்தி ஸ்தாபனத்தினர் இப்போதே காண்பிக்க முன்வந்துள்ளனர். இன்றைக்குக் குறிப்பிட்ட ஒரு சிலருக்கு மட்டுமே 'ஆர்டரின்' பேரில் செய்து தரப்படும் இந்தக் காரில் பிரயாணிகள் சௌகரியமாகச் செல்ல உள்ள பலப் பல வசதிகளேத் தவிர இஞ்சின் அமைப்பிலேயே புரட்சிகரமான மாறுதல் உள்ளது. இதுகாறும் நாம் கார்களில் பிஸ்டன் எஞ்சின்கள் பொருத்தப்பட்டிருப்பதையே கண்டு வந்திருக்கிருேம். ஆனல் படத்தில் நீங்கள் பார்ப்பது டர்பைன் எஞ்சின்.

டர்பைன் இஞ்சினில் பெட்ரோல் மட்டுமல்லாது வேறு பல எரிபொருள்களேயும் பயன்படுத்தலாம். இதைத் தவிர வேறு பல நன்மைகளேயும் கொண்ட இந்த இஞ்ஜின் இன்னும் நாற்பது ஐம்பது வருஷங்களில் மிகப் பிரபலமடைந்துவிடும் என்று தயாரிப்பாளர்கள் எதிர்பார்க்கின்றனர். அதற்கு இப்போது முதலே முயற்சிகளேயும் தொடங்கி விட்டனர். ஸ்பெஷல் விமானத்தில் இந்த மோட்டார் உலகச் சுற்றுப் பயணம் செய்து இருபது நாடுகளில் காட்சிப் பொருளாக விளங்கி யிருக்கிறது! இப்படிப்பட்ட இந்த அதிசயக் காரின் விலே என்ன என்று கேட்கிறீர்களா? வாங்கப் போகிறவர்களுக்கல்லவா அந்தக் கவலே, நமக்கு ஏன் வம்பு?



யுள்ளவர். அவர் பணம் கொடுக்க வேண்டி நேரிட்டால் சுலபமாக வசூல் செய்து விட லாம்' என்று அவரிடம் வியாபாரத் தொடர்பு உள்ளவர்களுக்கு நம்பிக்கை ஏற்படுமல்லவா?

ஆனல், பணம் தம்முடைய மனைவி மக்களின் குணத்தையும், வாழ்க்கைப் போக்கையும் அடியோடு மாற்றி விடும் என்று அவர் கனவிலும் நினைத்திருக்கவில்லை. ஏழை உறவினர்களை உறவினர்கள் என்றே சொல்லிக் கொள்ள வெட்கப்பட்டார்கள். பணமில்லாத பழைய கால நண்பர்களைப் பார்த்தால் முன்னே பின்னே பழக்கமில்லாதவர்களோடு பேசுவது போல் பேசுவார்கள். அவரது சொந்த சகோதரியையே லட்சியம் செய்வதில்லை. அந்தப் பெரிய அம்மாள் ஒரு சமயம் ஆத்திரம் தாங்க மாட்டாமல், ''என்னமோ நூறு ரூபாய் கரன்ஸி நோட்டு மேலே நடக்கிறாற்போல் நடக்கிறயே!'' என்று ராஜியைக் கேட்டு விட்டாள்.

நவமணியின் கணவர் தம் மாமனர் வீட்டிலேயே இருந்து வந்தார். அவரை அந்த ஸ்திரீகள் ஒரு மனிதராகவே மதிப்பதில்லை. நவமணி எப்போது வெளியே போகிறள், எங்கே போகிறள், எப்போது திரும்பி வருவாள் என்றெல்லாம் அவள் கணவருக்கு ஒன்றும் தெரியாது. அவள் எது செய்வதற்கும் அவருடைய சம்மதத்தைக் கேட்டுக் கொண்டிருப்பதில்லை.

பையன் துரைசாமியோ, ஸெப்டம்பர் மாதப் பரீட்சை யென்பது தனக்கென்றே ஏற்பட்டது என்று நினைத்துக் கொண்டிருந்தான். எஸ். எஸ். எல். ஸி., பி. யூ. ஸி. முதலிய எந்தப் பரீட்சையையும் செப்டம்பர் மாதம் ஒரு முறை எழுதத் தவறுவதில்லை. அவன் இப்போது தனது இருபதாவது வயதில் பி. ஏ. வகுப்பில் முதல் வருஷம் படித்துக் கொண்டிருந்தான்.

பிள்ளை, பெண் விஷயத்தில் தந்தை எப்போதாவது தலையிட்டுக் கண்டித்தால் ராஜிக்குப் பிரமாத கோபம் வந்து விடும். ''குழந்தைகள் பிறந்ததிலிருந்து எத்தனையோ கஷ்டப் பட்டாகி விட்டது. இப்போது இஷ்டப்படி இருக்கட்டுமே?'' என்பாள். பரீட்சையில் தவறும் போதெல்லாம், ''படித்தவன் எல்லாம் என்ன வாரிக்கொட்டி விடுகிறன்? நீங்கள் என்ன பெரிசாகப் படித்து விட்டீர்கள்? அவன் படித்து வேலை பார்த்துத்தான் சம்பாதிக்க வேண்டும் என்பதில்லை'' என்பாள்.

கைலாசத்துக்குக் காரியாலய வேலை அதிகம். அவர் மன நிம்மதியை இழக்க விரும்பாதவராய்க் குடும்ப விஷயத்தில் அதிகம் தலையிடுவதில்லை. எப்படியாவது இருந்து விட்டுப் போகிறர்கள் என்றுதான் இருந்தார். ஆனல் நாளாக, ஆக வீட்டில் உள்ளவர்களின் காரியங்கள் விரும்பத் தகாத வழிகளில் செல்லக் கூடுமென்று அவருக்குத் தோன்றிற்று. துரை, கல்லூரியில்தான் அபராதங்கள் கட்டுவதற்காக ஒரு நூறு ரூபாய் நோட்டை புரொபஸர் மேஜை மீது வீசி எறிவதாகச் சொன்னதைக் கேட்டதிலிருந்து அவர் மனம் பெரிதும் கலங்கிப் போயிருந்தார். ''பணத் திமிர் அல்லவா அவனை அப்படிச் செய்ய வைத்துவிட்டது?'' என்று அவர் தம் வாயை விட்டே கூடச் சொன்னர்.

அப்போது வண்டி 'கைலாசம் கம்பெனி' காரியாலயத்தின் முன் வந்து நின்றது. அவர் தம் மனத்திலிருந்ததை யெல்லாம் உதிர்த்துக் கீழே தள்ளி விடுபவர் போலத் தம் தலையைப் பலமாக ஆட்டிக் கொண்டு விட்டு வண்டியிலிருந்தும் இறங்கினர்.

தமது அறைக்குச் சென்றதும், மானேஜரைக் கூப்பிட்டு அனுப்பினர்.

''பாலகுரு! இந்தா அந்தக் கடிதம்'' என்று கூறித் தாம் எடுத்து வந்த கடிதத்தை அவரிடம் கொடுத்தார்.

''ஏன் மாமா, என்னமோ போல் இருக்கிறீர்கள்? உடம்பு சரியாய் இல்லையா?'' என்று பாலகுரு கேட்டார். மானேஜரான அவர் கைலாசத்தின் சகோதரியின் புத்திரன்; மாப்பிள்ளையும் கூட. நவமணியின் கணவர்தான்.

''எதற்காகப் பணம் சம்பாதித்தோம், சம்பாதிக்கிறேம் என்றிருக்கிறது'' என்று அலுத்துக் கொண்டே கூறினர்.

''ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்?''

''ஏன?'' என்று கைலாசம் கேட்டுத் துரை கல்லூரியில் நடந்து கொண்டதைப் பற்றிக் கூறினர்.

''இதுதான? என்னமோ என்று பார்த்தேன். எல்லாம் நாளடைவில் சரியாய்ப் போய் விடும்'' என்று பாலகுரு அவருக்குச் சமாதானம் கூறினர்.

''நீ உன் மாமி செய்கிற அட்டகாசத்துக்கும் அப்படியே சமாதானம் சொல்கிறய். நவமணி அடிக்கிற கூத்துக்கும் அப்படித்தான் சொல்கிறய். விட்டுப் பிடிக்க வேண்டும் என்கிறய். ஆனல் இவர்களை விட்டால் பிறகு பிடிக்க முடியாது. நாளுக்கு நாள் பழக்க வழக்கங்கள் பேச்சுக்களெல்லாம் புதுசு, புதுசா மாறிக் கொண்டு போகிறது.

''நாலு நாளைக்கு முன்னல் ராஜி என்ன சொன்னள் தெரியுமா? அன்று ஒரு பரதநாட்டியக் கச்சேரிக்குப் போயிருந்தாளாம். பி. எஸ்ஸி. படித்த ஒரு பெண் நடனமாடினளாம். அதைப் பார்த்தபோது,'என்ன அருமையான கலை? இதை நாம் கற்றுக் கொள்ளாமல் விட்டு விட்டோமே' என்று மனசு கஷ்டப்பட்டதாம். அன்று நட்டுவாங்கம் செய்த அம்மாள், 'உங்களுக்கு எல்லா அம்சங்களும் பொருந்தி யிருக்கின்றன. உடம்பை நடனமாடுவதற்கென்றே பகவான் சிருஷ்டித்திருக்கிறன்' என்று இவளைப் புகழ்ந்தாளாம். நடனம் கற்றுக் கொள்ள வேண்டுமென்று இப்போதே ஒற்றைக் காலில் நின்று கொண்டிருக்கிறள்.....''

''நிஜமாகவா? மாமியா?'' என்ற வார்த்தைகள் மட்டுமே பாலகுருவின் வாயிலின்றும் கிளம்பின.

''ஏன், நவமணியும் சேர்ந்து ஆட ஆரம்பித்து விடுவாள் என்று நினைக்கிறயா? உனக்கு அந்தப் பயம் வேண்டியதில்லை. அவள்தான் தன் சிநேகிதியுடன் சேர்ந்து டென்னிஸ் கற்றுக்கொண்டு வருகிறளே. அந்தப் பெண்ணின் புருஷனே சொல்லிக் கொடுக்கிறனும். அதனல் பாதகமில்லையாம். இரண்டு டஜன் பைஜாமாவுக்கு ஆர்டர் கொடுத்திருக்கிறள்.''

''மாமா! என்னை என்ன செய்யச் சொல்கிறீர்கள்!''

''குரு! என் மனத்திலிருக்கிறதை யாரிடமாவது சொல்லாவிட்டால் பைத்தியம்

பிடித்துவிடும்போலிருந்தது. அதனால் சொன்னேன். இல்லாவிட்டால் எந்த அப்பாவாவது தன் பெண்ணைப் பற்றியே மாப்பிள்ளையினிடம் குறை சொல்வானா? உன்னை என் பிள்ளைபோல் பாவிப்பதால் சொல்லுகிறேன். ஏதோ, நாகரிகம், முன்னேற்றம் என்று சில பழக்க வழக்கங்களை ஏற்படுத்திக் கொள்கிறார்கள். பணமும் நிறைய வருகிறது. அதைப் பற்றி நான் அதிகம் கவலைப் படவில்லை. ஆனால் இதெல்லாம் பிறகு எப்படி எப்படிப் போகுமோ, எதெதில் கொண்டு போய்விடுமோ என்று நினைத்தால்தான் பயமாக இருக்கிறது. இந்த விஷயங்களில் கொஞ்சம் எல்லை மீறி விட்டால் அப்புறம் என்னதான் நடக்குமென்று சொல்ல முடியாது. நாம் என்னடாவென்றால் தினமும் ஆபீசுக்குப் போகிறோம். இந்தப் பங்கில் இத்தனை ஆயிரம் ரூபாய் லாபம், அந்தப் பங்கில் இத்தனை ரூபாய் லாபம் என்று கணக்குப் போட்டுத் திருப்தியடைந்து கொண்டு வருகிறோம்.''

''மாமா! இன்னும் கொஞ்ச நாளைக்கு இதைப்பற்றி மறந்திருங்கள். பிறகு என்ன செய்யலாம் என்பதைப்பற்றி யோசனை செய்து கொள்ளலாம்'' என்று பாலகுரு கூறி, அவரை அழைத்துக் கொண்டு காரியாலயத்தை விட்டுக் கிளம்பினார்.

பாலகுரு விரும்பியதுபோல் கைலாசம் தம் வீட்டினரைப் பற்றிக் கொஞ்ச காலம் மறந்திருக்கும்படியாக அவர்கள் நடந்து கொள்ளவில்லை.

அன்று இரவு கைலாசமும், பாலகுருவும் சாப்பிட்டுவிட்டு ஹாலில் ஸோபாவில் உட்கார்ந்திருந்தார்கள். ராஜியும் இருந்தாள். அப்போது வெளியே சென்றிருந்த நவமணி உள்ளே நுழைந்தாள். அவள் தலையில் ஒரு பட்டு 'மப்ளர்' கட்டிக் கொண்டு வந்தாள்.

''ஏன், பனியாயிருக்கிறதா?'' என்று கைலாசம் கேட்டு வைத்தார்.

''இல்லை. நான் ஜோராக ஒன்று செய்து கொண்டிருக்கிறேன். என்ன என்று சொல்ல மாட்டேன். நீங்கள் கண்டுபிடியுங்கள், பார்க்கலாம்!'' என்று நவமணி கொஞ்சிக் கொஞ்சிக் கூறிக் கொண்டே, இப்படியும் அப்படியும் நடந்து சென்றாள். அவள் தன் முதுகுப் புறத்தை அவர்கள் பார்க்கும்படி காட்டவில்லை.

அவள் ஏதோ தமாஷ் செய்கிறாள் என்று அவர்கள் நினைத்தார்கள். அவர்களால் ஒன்றும் ஊகிக்க முடியவில்லை. நவமணி தன் தலையிலிருந்த கட்டை அவிழ்த்துத் தலையின் பின்புறத்தைக் காட்டினாள்.

தலைமயிர் 'பாப்' செய்யப்பட்டிருந்தது. ''எப்படி இருக்கிறது?'' என்று நவமணி கேட்டாள்.

கைலாசம் பெண்ணைக் கோபத்தோடு பார்த்து ஏதோ சொல்ல வாயெடுத்தார்.

''நான்தான் பண்ணிக்கொள்ளச் சொன்னேன். அவளுக்கு நாலு இடங்களுக்குப் போக வேண்டியிருக்கிறது. ஸ்நானம் செய்தால் தலைமயிர் இலேசில் காயமாட்டேன் என்கிறது...'' என்று ராஜி அவளுக்குப் பரிந்துகொண்டு பேசினாள்.

''தவிர டென்னிஸ் ஆடும்போது தொந்தரவு கொடுக்கிறது!'' என்றாள் நவமணி.

''எனக்குத் தூக்கம் வருகிறது'' என்று கூறிக் கைலாசம் எழுந்து மாடிக்குச் சென்று விட்டார். மேலும் ஒரு வினாடி அங்கே தங்கியிருந்தால் தம்மால் பெரிய ரகளை செய்யாமல் இருக்க முடியாது என்று அவருக்குத் தோன்றியது.

அன்று இரவு முழுதும் அவருக்குத் தூக்கமே பிடிக்கவில்லை. என்ன செய்வது, என்ன செய்வது என்று தம்மைத் தாமே கேட்டுப் புலம்பிக் கொண்டிருந்தார். அவர் நீண்ட நேரம் கண் விழித்திருந்ததால் விடியற் காலை அயர்ந்து தூங்கி விட்டார்.

வழக்கமாக அதிகாலையிலேயே எழுந்திருக்கும் கைலாசம் அன்று எழுந்திருந்தபோது மணி எட்டிருக்கும். பல் தேய்த்துக் காபி சாப்பிட்டுவிட்டுத் தினசரிப் பத்திரிகையை எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்த போது தோட்டப் பக்கத்திலிருந்து 'டக்' டக்' என்ற சத்தம் வந்தது. தோட்டத்துக்குச் சென்றார். 'ஔட் ஹௌஸ்' பக்கம் போனார்.

கட்டிடத்தின் மாடிப் படிகளின் மீதேறினார். அப்போது 'தை...யா...தை...யீ' என்ற சொற்களின் சப்தமும், அதற்கேற்ற கோல் தட்டுச் சத்தமும் கேட்டன.

ராஜி, ''தை ... யா .... தை .... யீ'' என்று சொல்லிக் கொண்டு கால்களை நன்றாகத் தூக்கி வளைத்துப் பின்னர் நிலமதிரத் தரையை உதைத்துக் கொண்டிருந்தாள்.

தன் கணவனைப் பார்த்ததும் புன்னகை புரிந்து தலையையாட்டி வரவேற்றாள். அவளுக்கு அப்போது தான் அபிநயம் செய்வதாக வேறு எண்ணம். நட்டுவாங்கம் செய்து கொண்டிருந்த ஸ்திரீ கைலாசத்துக்கு ஒரு பெரிய கும்பிடு போட்டாள்.

''நீங்கள் நேற்றுப் படுத்துக்கொள்ளச் சென்ற பிறகுதான் தனகோடி டெலிபோன் செய்தாள். இன்றைக்குத்தான் பரத நாட்டியம் கற்றுக் கொள்ள மிகவும் நல்ல நாள் என்று சொன்னாள். காலையில் உங்களிடம் சொல்லலாமென்று வந்தேன். நீங்கள் தூங்கிக்கொண்டிருந்தீர்கள்...'' என்று ராஜி விவரம் தெரிவித்தாள்.

''அதற்கென்ன, முன்னாடியேதான் என்னிடம் சொல்லி யிருக்கிறாயே!'' என்றார் கைலாசம். தமக்கு உள்ளூறப் பொங்கி எழுந்து கொண்டிருந்த கோபத்தை அடக்கிக் கொண்டு எவ்வாறு அவ்வளவு நிதானமாகப் பதில் சொல்கிறோம் என்பது அவருக்கே ஆச்சரியமாக இருந்தது.

''அம்மாவுக்கு ரொம்ப நல்லா வரது. மூன்றே மாசத்திலே அரங்கேற்றம் செய்து விடலாம்!'' என்றாள் தனகோடி.

''அப்படியா! ரொம்ப சந்தோஷம்!''

''சபாக்காரர்களைப் போய்க் கெஞ்சிக் கொண்டிருக்க வேண்டியதில்லை. நம்ம தோட்டத்திலேயே கொட்டகை, மேடை போட்டு நடத்திவிடலாம்!'' என்று ராஜி உற்சாகத்துடன் கூறினாள்.

''ஒரு கவலை விட்டது'' என்ற கைலாசம், பிறகு ''எனக்கு வேலை இருக்கிறது!'' என்று

ராஜியிடம் கூறிவிட்டு அந்த இடத்தை விட்டுக் கிளம்பிச் சென்றார்.

அன்று பிற்பகல் அவர் காரியாலயத்தி லிருந்தபோது துரை படிக்கும் கல்லூரியின் பிரின்ஸிபால் டெலிபோனில் அவரைக் கூப்பிட்டார்.

''தங்களிடம் ஓர் அவசரமான விஷயத் தைப் பற்றிப் பேச வேண்டியிருக்கிறது. உடனே வருவீர்களா?'' என்று கேட்டார்.

''கிளம்பிக் கொண்டிருக்கிறேன்'' என்று கூறிவிட்டுக் கைலாசம் கல்லூரிக்குப் புறப் பட்டுச் சென்றார். தம் பிள்ளை புதிதாக ஏதாவது திருவிளையாடல் புரிந்திருப்பான், அதைப் பற்றித்தான் இருக்கும் என்பதில் அவருக்குச் சந்தேகமே இல்லை.

அவர் பிரின்ஸிபால் வேதாந்தத்தின் அறைக்குள் சென்றபோது அவர் அங்கு மிங்கும் வேகமாக நடந்து கொண்டிருந்தார்.

''கே. துரைசாமியின் தகப்பனாரா தாங்கள்?'' என்று கேட்டார்.

''ஆமாம்!'' என்றார் கைலாசம்.

''அவன் தங்கள் பிள்ளைதானே?''

''ஆமாம்! ஆமாம்!''

''உங்கள் பிள்ளை மிகவும் அயோக்கியன். இன்று மத்தியானம் ஒரு மாணவி மரத்தடி யில் தனியே உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தாள். உங்கள் பிள்ளை அவ ளிடம் சென்று அவளைத் தொந்தரவு செய்ய முயன்றான். அப்போது நானே தற்செய லாக அந்தப் பக்கம் போனேன். அவன் ஓடிப்போய் விட்டான்.''

கைலாசத்தின் கண்களின் ஓரத்தில் இரண்டு கண்ணீர்த் துளிகள் அரும்பின. அவர் உடல் குன்றிப் போயிருந்தார்.

''நான் அவனை டிஸ்மிஸ் செய்வதற்கு முன்னால் தங்களிடம் ஒரு வார்த்தை சொல்லிவிட வேண்டுமென்பது. தங்களைப் பரிச்சயமில்லை. ஆனால் தாங்கள் ஒரு கன வான் என்று சொல்லிக் கேள்விப்பட்டிருக் கிறேன். தங்களுக்கு அதிக மனக் கஷ்டம் கொடுக்கத் தயங்குகிறேன். தாங்கள் அவ னைக் கல்லூரிக்கு அனுப்பாமல் படிப்பை நிறுத்திவிட்டால் அது இரண்டு பேருக்கும் சௌகரியமா யிருக்கும்'' என்றார்.

கைலாசம் தலையையாட்டினார். வேதாந் தம் ஒரு காகிதத்தை அவரிடம் நீட்டி ''இதில் அவன் படிப்பை நிறுத்திவிட்டதாக எழுதிக் கொடுங்கள்'' என்றார்.

கைலாசம் அப்படியே செய்துவிட்டு, ''தாங்கள் என் விஷயத்தில் இவ்வளவு சிரத்தை எடுத்துக் கொண்டதற்கு வந்தனம்'' என்று கூறிவிட்டு எழுந்தார்.

வேதாந்தமும் எழுந்து நின்றார். ''மிஸ் டர் கைலாசம், நான் ஒரு விஷயத்தைப் பச்சையாக எடுத்துச் சொல்ல வேண்டி யிருக்கிறது. சென்ற நாலைந்து வருஷ கால மாக இந்தத் திட்டங்களின் பயனைப் பலர் திடீரென்று செல்வந்தர்களாகிவிடுகிறார்கள். அவர்களுக்குத் தலைகால் புரிவதில்லை. மேலும், மேலும் பணம் சேர்ப்பதில் மும் முரமா யிருக்கிறார்களே யன்றிப் பிள்ளை, பெண்களைக் கவனிப்பதில்லை. அவர்கள் இஷ் டப்படி பணம் செலவழிக்க விட்டு விடு கிறார்கள். கட்டுப்பாடு என்பதே போய் விட்டது. பணத்தில் புரள்வதால் பையன் கள் ஆசிரியர்களை மதிப்பதே யில்லை. எடுத்த தற்கெல்லாம் வேலை நிறுத்தம் செய்கிறார்கள். இப்படி வாலிபர்களை விட்டு விட்டால் நாளடைவில் சமூகமே கெட்டு விடும்.''

''தாங்கள் சொல்வது முற்றிலும் உண்மைதான்!'' என்று பதிலளித்துவிட்டு விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டார் கைலாசம்.

கைலாசம் திரும்பி வருவதைப் பாலகுரு ஆவலுடனும், கவலையுடனும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.

''டில்லியிலிருந்து டிரங்கால் வந்திருந்தது. பூச்தான்வாலா கூப்பிட்டார். அவசர காரிய மாம்'' என்று தெரிவித்தார்.

கைலாசம் உடனே அவருக்கு டிரங்கால் 'புக்' செய்தார். பூச்தான்வாலா டில்லியில் பங்குதாரர். அவருடன் கைலாசம் மூன்று நிமிஷ நேரம் பேசினார். பிறகு, ''சீன சைன்யம் நமது எல்லைக்குள் படை யெடுத்து வந்து கொண்டிருக்கிறதாம்!'' என்று மெதுவான குரலில் கூறினார்.

இதைக் கேட்டுப் பாலகுரு திகைத்துப் போய் உட்கார்ந்திருந்தார். ''பங்குகள் எல்லாம் ஒரேயடியாய்ச் சரிந்து விடும். மார்க் கெட் படுத்துவிடும்'' என்றார் கைலாசம்.

''அதைப் பற்றி நாம் பயப்பட வேண் டியதில்லை. போன வாரம்தானே ஒரு புதுக் கம்பெனியில் இரண்டு லட்சம் ரூபாய் பங்குகள் சொந்தத்துக்கு வாங்கினோம்.''

''அது நஷ்டமானாலும்கூட நாம் நடுத் தெருவில் நிற்கப் போவதில்லை. நீ யுத்தத் தில் என்னென்ன பங்குகள் எப்படி எப்படிப் பாதிக்கப்படும் என்பதைப் பற்றி ஒரு விவர மான ஜாபிதா தயார் செய்'' என்றார். கைலாசம்.

இரவு பத்து மணி யிருக்கும். ''உன் பிள்ளை எங்கே? சாப்பிடக் கூட வரவில்லை போலிருக்கிறதே!'' என்று கேட்டார் கைலாசம் தமது மனைவியிடம்.

''ஏன், 'என் பிள்ளை, என் பிள்ளை' என்று சொல்லிக் காட்டி அவனைக் கரிக்கிறீர்கள்? அவன் ஊரிலிருந்தால்தானே வருவான்?'' என்றாள்.

''எந்த ஊருக்குப் போயிருக்கிறான்? எனக்குத் தெரியாதே?'' என்று ஆச்சரியத் துடன் கேட்டார்.

''மத்தியானம் கல்லூரியிலிருந்து வந்தான். சிலோனுக்கு உல்லாசப் பயணம் போகிற தற்காக ஒவ்வொரு காலேஜிலும் ஒவ்வொருத் தரைப் பொறுக்கி எடுத்திருக்கிறார்களாம். அதிலே இவனும் ஒருத்தனும். திடீரென்று இன்றைக்கே கிளம்ப ஏற்பாடு செய்திருக் கிறார்களாம். விமானத்தில் போகிறார்களாம். ஏகப்பட்ட செலவாகுமாம்.''

''ஊம்!''

''என்னைப் பணம் கேட்டான். கையி லிருந்ததை யெல்லாம் சுரண்டி எடுத்துக் கொடுத்தேன்.''

''எத்தனை?''

''மூவாயிரத்தைந்நூறோ என்னமோ இருந் தது. அதைத்தான் கொடுத்தேன். பாங்கில்

சிறு வயதிலேயே புகட்டுங்கள்...
சிறந்த முறையில் புகட்டுங்கள்...
காலையில் முதல் வேலையாக ஒரு முறை
இறுதியாக இரவில் ஒரு முறை
வாய்கொப்பளிக்க

# லிஸ்டரின்!

—வாழ்நாள் முழுதும்
அவர்களுக்குப் பாதுகாப்பு!

பழக்கம் படிவதற்கு வாகானது இளமைப் பருவம்! லிஸ்டரின் உபயோகிக்கும் ஆரோக்கிய நற் பழக்கத்தைப் புகட்டுவதற்கு இதைவிட வாய்ப்பான சமயமும் உண்டோ! அன்றாடம் அதிகாலை ஒரு தடவை, இரவு ஒரு தடவை லிஸ்டரின் கொண்டு வாய் கொப்பளித்தால் கிருமிகளினின்று நாள் முழுதும் காத்துக்கொள்ளலாம். பட்ட மாத்திரத்திலே கிருமிகளைக் கொன்று மூச்சிலே இனிமை தவழச் செய்வது லிஸ்டரின் ஆன்டிஸெப்டிக் (நச்சமுறி மருந்து).

திடமுடன் முன்யோசனையைக் கைக்கொள்ளுங்கள்! தினம் இருமுறை லிஸ்டரின் உபயோகிகரும் ஆரோக்கிய நற் பழக்கத்தை இப்போதே துவக்குங்கள்!

**வாய்நிறைந்த சுகாதாரத் தூய்மைக்கு வழி: லிஸ்டரின்; இன்றும் என்றும் உங்கள் துணை!**




வார்னர்-லாம்பர்ட் பார்மஸூட்டிகல் கம்பெனி
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யூ.எஸ்.ஏ.வில் இணைக்கப்பெற்றது).

WL-1702 § TM

வாங்கிக்கொண்டு வரப் பொழுதில்லே'' என்று வருத்தத்துடன் கூறினுள் ராஜி.

மகனுடைய இந்தப் புதிய திருவிளையாடலைப் பற்றிக் கேள்விப்பட்டபோது கைலாசம் கல்லூரி சம்பவத்தைப் பற்றி மனைவியிடம் தெரிவிக்க விரும்பவில்லே. பையன் தாயார் கொடுத்த ரூபாய்கள் செலவாகும்வரை வெளியூர்களில் திரிந்து விட்டுப் பிறகு வந்து நிற்பான், அல்லது தாயாருக்குத் திருட்டுத்தனமாகக் கடிதம் எழுதிப் பணம் அனுப்பச் சொல்வான் என்று நினைத்தார்.

''என்ன யோசனை செய்து கொண்டிருக்கிறீர்கள்?'' என்று ராஜி கேட்டாள்.

''ஒன்றுமில்லே. வியாபாரம் வர வர மோசமாகிக் கொண்டு வருகிறது. ஐந்தாறு மாதமாக அவ்வளவு நன்ருக நடக்கவில்லே. இப்போது சீனக்காரன் படையெடுத்து வருகிருனும்!''

''வந்தால் நம்ம சைன்யங்கள் சண்டை போடுகின்றன.''

''அது சரிதான். ஆனல், முதலில் பங்குகள் விலே தாறுமாருய் இறங்கிவிடும். தவிர போன வாரம்தான் சொந்தத்தில் இரண்டு லட்ச ரூபாய்களுக்குப் பங்குகள் வாங்கினேன். அது இனிமேல் பங்கு சர்டிபிகேட் காகிதத்தின் விலே கூடப் பெருது.''

''அப்புறம்?''

''பார்க்கலாம். நாளேக்கு காலேயில் நானும் பாலகுருவும் திருப்பதிக்குப் போய்விட்டு வரப் போகிறேம்'' என்ருர் கைலாசம்.

''ஆபீஸ் சம்பந்தமாகவா?''

''அநேகமா அப்படித்தான். ஆனல் நேரடியாக இல்லே. திடீரென்று இந்த எதிர்பாராத இடி விழுந்து விட்டதிலிருந்து காப்பாற்றும்படி திருவேங்கடவனே வேண்டிக் கொண்டு வரப் போகிறேம்'' என்று தெரிவித்தார் கைலாசம்.

**ம**று நாள் இரவு எட்டு மணி இருக்கும். நவமணி தன் வீட்டு ஹாலில் கையில் டென்னிஸ் மட்டையுடன் உட்கார்ந்திருந்தாள். அவள் அப்போதுதான் வெளியிலிருந்து வந்திருந்தாள். பஞ்சாபி ஸ்திரீ மாதிரி உடை அணிந்திருந்தாள்.

தாய் மகளின் டென்னிஸ் ஆட்ட அபிவிருத்தியைப் பற்றி விசாரித்தாள். பெண் தன்னேப் பெற்றெடுத்த அம்மாவின் நாட்டியக் கலே முன்னேற்றத்தைப் பற்றிக் கேட்டுக் கொண்டிருந்தாள்.

''அம்மா! உன் மாதிரி உடம்பு எனக்கிருந்தால் நான் முன்னுடியே டான்ஸ் கற்றுக் கொண்டிருப்பேன். உன்னேப் பார்க்கும் போது பொருமையாகக் கூட இருக்கிறது'' என்று நவமணி தன் தாயைப் புகழ்ந்தாள்.

''உனக்குத் தெரிகிறது, அந்தப் புருஷர்களுக்குத் தெரியவில்லேயே!'' என்று ராஜி குறைப்பட்டாள்.

அப்போது வெளியே வண்டி வந்து நிற்கும் சத்தம் கேட்டது. யாரோ இரண்டு பேர் இடுப்பில் வேட்டியைக் கச்சமாகக் கட்டியவர்கள், தலே மீதும், உடம்பு மீதும் வேட்டியைப் போர்த்திக் கொண்டு வந்தார்கள்.

உள்ளே வந்த பிறகுதான் அவர்கள் கைலாசமும், பாலகுருவும் என்று தெரிய வந்தது.

''ஏன் தலேயைப் போர்த்துக் கொண்டிருக்கிறீர்கள், பனி கொட்டுகிறதா?'' என்று ராஜி கேட்டாள்.

''இப்போது ஏது பனி?'' என்று கூறிக் கொண்டே பாலகுருவும் கைலாசமும் வேட்டியை எடுத்து மேலே போட்டுக் கொண்டார்கள்.

தாயும் மகளும் தன் தன் கணவனேப் பார்த்துத் திகைத்துப் போயிருந்தனர்.

''இதென்ன கூத்து?'' என்ருள் ராஜி.

''கூத்தாவது! தெய்வ காரியத்தைப் பற்றி அப்படிச் சொல்லாதே. மலேயிலே பாலகுரு மேலே திடீரென்று சாமி வந்து விட்டது. என்னே முதுகில் நாலு அறை அறைந்து 'கொடு, கொடு!' என்று கத்தினுன். ஆனல் பணம் வேண்டாம் என்று சொன்னுன். அந்த க்ஷேத்திரத்தில் பணத்தைத் தவிர கொடுப்பது தலேயிலிருப்பதுதானே? அதைக் கொடுத்து விட்டு வந்தோம்.''

அந்த இரண்டு ஆண்களின் தலேயும் வழவழவென்றிருந்தது.

''கண்ணருவி! சகிக்கவில்லே'' என்ருள் நவமணி.

''ஏன் அப்படிச் சொல்கிருய் மணி? நானும் உன்னேடு டென்னிஸ் ஆடக் கற்றுக் கொள்ளலாமென்றிருக்கிறேன். அதற்கு இப்படி இருக்கிறது ரொம்ப ரொம்பச் சௌகரியமாக இருக்கும், இல்லேயா?'' என்று பாலகுரு தம் மனைவியின் பிடரிப் பக்கம் உற்றுப் பார்த்துக் கொண்டே கூறினுர்.

''ராஜி! வியாபாரத்தில் அதிக நஷ்டம் ஏற்படாமல் கடவுள் கட்டாயம் காப்பாற்றுவார். காப்பாற்றியாக வேண்டும்!'' என்று கைலாசம் அழுத்தம் திருத்தமாகக் கூறினுர்.

பாலகுரு எல்லோருக்கும் பிரசாதம் எடுத்துக் கொடுத்தார். தங்களுக்கு அன்று 'ஒரு பொழுது' ஆகையினுல் சாப்பிடப் போவதில்லே என்று கைலாசம் கூறிவிட்டுப் படுக்கப் போனுர்.

அன்றிரவு ராஜி தன் கணவனேத் தூங்க விடவில்லே. வியாபாரத்தில் என்ன நஷ்டமேற்படும்? எப்படி வந்து முடியும்? என்று கேட்டுத் தொந்தரவு செய்து கொண்டிருந்தாள். நவமணியும் தன்னறையில் இதே கைங்கரியத்தில் ஈடுபட்டிருந்தாள். பணம் நஷ்டமாகிவிடுமே என்ற கவலேயை விடத் தாங்கள் இப்போது போலவே படாடோபமாக வாழ்க்கை நடத்த முடியாமல் போய் விடுமே என்ற கவலே அவர்களேப் பிடுங்கித் தின்றுகொண்டிருந்தது. எல்லாம் யுத்த நிலேமையைப் பொறுத்தது என்று புருஷர்கள் ஒரே வார்த்தையில் பதில் சொல்லிக்கொண்டிருந்தார்கள்.

மறுநாள் காலேப்பத்திரிகையில் சீனப்படையெடுப்பைப் பற்றிய விவரங்கள் வெளிவந்திருந்தன. சீனர்கள் மேலும் மேலும் முன்னேறிக்கொண்டிருக்கிருர்கள் என்று செய்தி வந்தது.

அதற்கடுத்த நாள் காலே ராஜி பங்களாவில் முப்பது மோட்டார் வண்டிகள் நின்று கொண்டிருக்கக் கண்டாள். வெளி வராந்தாவில் நாற்காலிகளில் பலர் உட்கார்ந்திருந்தார்கள்.

ராஜி ஒன்றும் புரியாமல் விழித்தாள். அவளுக்குத் தெரிந்த ஒருவர் ஒரு பெரிய கும்பிடு போட்டுவிட்டு அவளருகில் வந்தார்.

''என்ன விலை சொன்னாலும் நான் வாங்கிக்கொள்கிறேன். வேறு யாருக்கும் விற்று விடக் கூடாது'' என்று இரகசியமாகக் கூறினார்.

''எதை?'' என்று கேட்டாள் ராஜி.

''இந்தப் பங்களாவைத்தான்!''

''என்னது?''

அந்த மனிதர் தம் கையில் வைத்திருந்த பத்திரிகையில் அந்தப் பங்களா விற்பனையைப் பற்றி வந்திருந்த விளம்பரத்தைக் காண்பித்தார்.

அப்போது கைலாசமே இறங்கி வந்து விட்டார். அவர் வந்திருந்தவர்களுடன் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தார். பிறகு ''எல்லோரும் இன்னும் இரண்டு வாரங்கள் கழித்து வாருங்கள். அப்போதுதான் நிர்ணயமான விலை சொல்ல முடியும்'' என்று அவர்களை அனுப்பிவிட்டு மனைவியை நோக்கி, ''நேற்று திடீரென்று மூன்று லட்சம் ரூபாய் தேவையாயிருந்தது. நாலைந்து நண்பர்களைக் கேட்டுப் பார்த்தேன். எல்லாரும் கையை விரித்து விட்டார்கள். எனக்குக் கோபமாக வந்தது. ஒரு பயலை இனிப் பணம் கேட்பதில்லை என்று தீர்மானித்துத்தான் உடனேயே பத்திரிகை ஆபீசுக்கு டெலிபோன் செய்து இந்தப் பங்களா விற்பதைப் பற்றி விளம்பரம் போடச் செய்தேன். ஆனால் இராத்திரி நான் ஆபீசிலிருந்து கிளம்புகிற சமயம் ஒரு சிநேகிதர் கடன் கொடுத்து உதவுவதாகச் சொன்னார். அதன் மீதுதான் இவர்களையெல்லாம் அப்புறம் வரச்சொல்லி அனுப்பிவிட்டேன்'' என்றார்.

''விஷயம் இவ்வளவு மோசமாகப் போய் வருகிறதைப்பற்றி எனக்குச் சொல்லவேயில்லையே!'' என்று ராஜி குறைப்பட்டாள்.

''எல்லாம் இந்த இரண்டு நாளில் எதிர்பாராமல் ஏற்பட்டதுதானே!'' என்றார் கைலாசம். பிறகு ''ஒன்று சொல்ல வேண்டுமென்றிருந்து மறந்து விட்டேன். நீ கொஞ்ச நாளைக்கு வெளியே போய் வருகிறதற்கு டாக்ஸி வைத்துக் கொண்டு போ!'' என்று மிகவும் நிதானமாகக் கூறினார்.

''ஏன்?''

''எனக்குப் பணம் கொடுத்தாரே அவரிடம் நம் வண்டிகளையெல்லாம் ஜாமீனாகக் கொடுத்து வைத்திருக்கிறேன்.''

இதைக் கேட்ட ராஜிக்குத் துக்கம் தொண்டையை அடைத்துக் கொண்டது. வாய் விட்டு அழவேண்டும் போலிருந்தது. கண்களைத் துடைத்துக் கொண்டு அப்பால் போய்விட்டாள்.

நவமணி நேரம் கழித்தே எழுந்திருந்தாள். வீடு வாங்குவதற்காகப் பலர் கூடியிருந்தது அவளுக்குத் தெரியாது. அவள் வழக்கம் போல் மாடியில் ஸ்நான அறையில் குளித்து விட்டு, பைஜாமாவும் ஷர்ட்டும் தரித்துக் கொண்டு டென்னிஸ் மட்டையுடன், இறங்கி வந்தாள்.

வராந்தாவில் நின்றுகொண்டு ''டிரைவர்! டிரைவர்!'' என்று இரைந்து கூப்பிட்டாள்.

---

**விஞ்ஞான விநோதம்**

## போயிங்கின் சத்தம் போகப்போகிறது!

திருவாளர் சிவப்புநாடாவின் சில்விஷமம் காரணமாகச் சென்னைக்குப் போயிங் வராமலே போய்விடுமோ என்றிருந்த நாட்களும் உண்டு. அப்போது மீனம்பாக்கம் விமான நிலையத்துக்கு அருகில் இருக்கும் ஓர் அதிகாரி போயிங் போடும் சத்தத்தைத் தம்மால் சகிக்க முடியாது என்பதால் சென்னைக்கு அதன் வருகையைத் தாமதப்படுத்தத் தம்மால் இயன்றதையெல்லாம் செய்கிறார் என்றுகூட ஒரு வதந்தி உலவியது. ஆதாரமேதுமற்ற செய்தி இது என்றாலும் அப்படி ஒருவர் உண்மையிலேயே நினைத்திருந்தாலும் அதில் ஆச்சரியப்படுவதற்கில்லை. போயிங் போடும் சத்தம் அத்தகையதுதான்!



காதைச் செவிடாக்கும் இந்தச் சத்தத்தைக் குறைக்க ஹாம்பர்க்கில் ஓர் இயந்திரம் தயாரித்து வருகிறார்கள். இது சம்பந்தமான ஆராய்ச்சிகளுக்கும் பரிசோதனைகளுக்கும், இது வரை பதினேழு லட்சம் ஜெர்மன் மார்க்குகள் செலவாகியுள்ளன! இவ்வாறு பல லட்சக் கணக்கில் செலவழித்து இரவு பகலாக விஞ்ஞானிகள் உழைத்து ஓர் இயந்திரத்தைக் கண்டுபிடித்த பின்னர் அதனை நம் நாட்டுக்கும் தருவித்துப் போயிங்கில் பொருத்த யோசித்தால் அதற்கும் மேற்குறிப்பிட்ட அந்த அதிகாரி இடைஞ்சல் செய்வார் என்பதில் சந்தேகமில்லை. ஏனெனில் அவருக்கு அதற்குள்ளாகப் போயிங்கின் சத்தம் பழக்கமாகி விட்டிருக்கும். வாரத்துக்கு நாலு தடவை யாவது அதன் வீறிட்டலறும் கூச்சலைக் கேட்காமல் அவருக்குத் தூக்கம் பிடிக்குமா என்ன?

அப்போது 'பட்பட்', 'பட்பட்' என்று சப்தமிட்டுக் கொண்டே 'குப் குப்' என்று பின்பக்கமாகப் புகை விட்டுக்கொண்டே பழைய கால 'உல்ஸ்லி' வண்டி வந்து நின்றது. அது பார்ப்பதற்கு 'பீட்டன்' வண்டி மாதிரி இருந்தது.

நவமணி அதை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தபோது டிரைவர் ஆசனத்தி லிருந்த பாலகுரு, "வண்டியில் ஏறிக் கொள். நான் கொண்டு போய் விடுகிறேன். எங்கே போக வேண்டும்?" என்று கேட்டார்.

அவர்தான் அந்த வண்டியை ஓட்டிக் கொண்டு வந்திருந்தது.

"இதென்ன கன்றாவி வண்டி? குப்பை வண்டி மாதிரி இருக்கிறதே!" என்றாள் நவமணி.

அப்போது அங்கே வந்த ராஜி, தன் பெண்ணின் கையைப் பிடித்துக் கரகரவென்று உள்ளே இழுத்துக்கொண்டு போய், நடந்த விஷயங்களைப் பற்றி விவரமாகக் கூறினாள்.

அன்று மாலை ராஜி தனக்குச் சமீபத்தில் பழக்கமான ஒரு தனவந்தரின் மனைவிக்கு டெலிபோன் செய்தாள். "அம்மா இப்போதுதான் வெளியே போயிருக்காங்க!" என்று பதில் வந்தது. சற்றுக் குரலை மாற்றிக்கொண்டு பேசியது அந்த அம்மாளே தான் என்பதை ராஜி கண்டுகொள்ளாமலில்லை. நவமணி டென்னிஸ் ஆடப்போவதை நிறுத்தி விட்டாள். உடம்பு சரியாயில்லை என்று கூறித் தனகோடியையும் ராஜி வரச் சொல்லவில்லை.

சீனப் படையெடுப்பு நடந்து சில வாரங்களாகிவிட்டன. நெருக்கடியான நிலைமை தீர்ந்து அமைதி ஏற்படத் தொடங்கியிருந்தது.

தாயும் பெண்ணும் இப்போது வீட்டிற்குள்ளேயே எப்போதுமிருந்து கொண்டிருந்தனர். கைலாசமும் பாலகுருவும் அவர்களிடம் ஏற்பட்டு வந்த மாறுதலைக் கண்டு மகிழ்ச்சியுற்று வந்தனர். உண்மையில் பங்கு கம்பெனி விஷயம் அவர்கள் பயந்தபடி மோசமாகிப் போய்விடவில்லை.

"ஏன் மாமா! சீன யுத்தம் வந்ததும் சமயோசிதமாய் இப்படி நடந்துகொள்ள வேண்டுமென்ற யோசனை உங்களுக்கு எப்படித் தோன்றியது?" என்று பாலகுரு தம் மாமனை விசாரித்தார்.

"முதலில் திருப்பதி மொட்டை, அப்புறம் வீடு விற்பனை விளம்பரம், பிறகு பழைய மாடல் மோட்டார் கார்! அபாரம்! அபாரம்! போங்கள்!" என்று மேலும் புகழ்ந்தார்.

"ஆனால் நாம் செய்ததெல்லாம் ஒரு விஷப் பரீட்சை" என்றார் கைலாசம்.

"ஏன்?"

"நமக்கு நஷ்டமேற்பட்டது, பங்களா, வண்டி எல்லாம் விற்றுவிட்டதென்றால் பண மார்க்கெட்டில் நமக்கு மதிப்பு இராதல்லவா? ஆனால் நல்ல வேளை அப்படி ஒன்றும் ஏற்படவில்லை. நமது ஸ்திரீகள் தங்கமானவர்கள். நாம்தான் அவர்களைக் குட்டிச்சுவராக்கினோம். நவமணி டென்னிஸ் ஆடுவதனாலோ, ராஜி நடனமாடுவதனாலோ ஒன்றும் தலை முழுகிப் போய்விடாது. ஆனால் இதெல்லாம் நாளடைவில் விரும்பத் தகாத காரியங்களில் தானாகவே கொண்டு போய் விட்டுவிடும். அப்போது குடும்பத்துக்குக் கெட்ட பெயர் ஏற்படுகிறதைவிட எனக்குப் பணமெல்லாம் போய் விட்டது; இன்ஸால்வெண்ட், என்ற பேர் ஏற்படுகிறதே மேல்" என்று கைலாசம் தாம் செய்ததைப் பற்றி விவரமாகக் கூறினார். "ஆனால் நாம் இப்படிச் சூழ்ச்சி செய்ததைப் பற்றிச் சொப்பனத்தில்கூட உளறிவிடாதே" என்று எச்சரித்தார்.

அன்று மாலை மாமனும் மாப்பிள்ளையும் சீக்கிரமே திரும்பி விட்டனர்.

நவமணி பாலகுருவினிடம் வந்து அவன் போட்டிருந்த மேல் கோட்டைக் கழற்றினாள். "வீட்டுக்கு வருகிறது ஆபத்து. இனி மேல் என்னை நீ சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருப்பாயே!" என்றார் பாலகுரு.

"என்னது? இன்னொரு தரம் சொல்லுங்கள்!" என்று பயமுறுத்தினாள் நவமணி.

"ராஜி எங்கே?" என்று கைலாசம் விசாரித்தார்.

"அம்மா மாடியிலிருக்கிறாள்" என்றாள் நவமணி.

கைலாசம் மேலே சென்றார். ராஜி ஒரு நாற்காலியில் கவலையே உருவெடுத்து வந்தவள்போல் உட்கார்ந்திருந்தாள்.

"ஏன்! அந்தப் பயலைப் பற்றிக் கவலைப் பட்டுக் கொண்டிருக்கிறாயா?" என்று பரிவுடன் கேட்டார் கைலாசம்.

"இல்லை. உங்களைப் பற்றித்தான். உங்களுக்கு இப்படிப் பணக் கஷ்டம் வந்ததே; இந்தாருங்கள்!" என்று கூறி ராஜி தன் வைர ஆபரணங்களைக் கழற்றத் தொடங்கினாள்.

"இந்தா! அதெல்லாம் ஒன்றும் வேண்டாம். நான் சும்மா சொன்னேன். பணக் கஷ்டமெல்லாம் தீர்ந்து விட்டது."

"மாமா!" என்று கூப்பிட்டுக்கொண்டே பாலகுரு வந்தார். "துரையினிடமிருந்து கடிதம் வந்திருக்கிறது."

ராஜி கவரைத் தானே வாங்கி அதை உடைத்தாள். கடிதத்தைப் படிக்க ஆரம்பித்தபோது அவள் கைகள் நடுங்கின. ஆனால் அவள் முகத்தில் திருப்திக் குறி தோன்றிற்று. கடிதத்தைத் தன் கணவனிடம் கொடுத்தாள். அதை அவர் வாங்கி உரக்கப் படித்தார்:

அப்பாவுக்கு!

துரை—எழுதிக் கொண்டது. நான் டில்லிக்கு வந்தேன். ஒரு ஹோட்டலில் தங்கியிருந்தபோது பணப் பை இருட்டுப் போய்விட்டது. நல்ல வேளை. என் நண்பன் ஒருவனைச் சந்தித்தேன். அவன் என்னைத் தன் வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போய் உதவி செய்தான். அவன் இராணுவத்தில் ஒரு பெரிய உத்தியோகஸ்தன். நானும் ராணுவத்தில் சேர்ந்துவிட்டேன். நான் இப்போது பழைய துரை இல்லை. அம்மாவுக்கும் அக்காவுக்கும் அத்தானுக்கும் என் வணக்கங்கள். நமது இராணுவம் வெற்றி பெற ஆண்டவனை வேண்டிக்கொண்டிருங்கள். நான் இதை நேபா பகுதியிலிருந்து எழுதுகிறேன்......

கைலாசத்தின் கண்களிலிருந்து ஆனந்த பாஷ்பம் பொழிந்து கொண்டிருந்தது.

## ஜலதோஷம், ஜுரம் போன்ற உணர்ச்சி இவைகளிலிருந்து

ஜலதோஷம் ஜுரம் ஆகியவைகளின் முதல் அறிகுறி தென்பட்டவுடனேயே 'ஆஸ்ப்ரோ'வை உட்கொள்ளுங்கள். தலைவலி, பல்வலி, முதுகுவலி, மாதவிடாய் நோவுகள், தொண்டைப்புண், நரம்புவலி, மற்றும் இதர வலிகளும் நோவுகளுங்கூட ஆஸ்ப்ரோவின் அபாயமற்ற செயல்திறனால் குணமாகின்றன.

'ஆஸ்ப்ரோ'விலுள்ள தீவிர சத்துப்பொருள் மற்றெதையும்விட அபாயமில்லாமல் வலியைப் போக்கக்கூடியது என மருத்துவக்கலை நிரூபித்துள்ளது.

ஒரு தூய மருந்து என்பதால் உலகெங்குமுள்ள லக்ஷக்கணக்கான நோயாளிகளுக்கு துரித நிவாரணமளிக்க வைத்தியர்களால் தினந்தோறும் உபயோகிக்கப்படுகிறது. 'ஆஸ்ப்ரோ' எந்தவித அபாயகரமான மருந்துகளும் கலவாதது. ஆகவே நீண்டகாலம் அபாயமின்றி உபயோகிக்கக்கூடியது. 'ஆஸ்ப்ரோ' லக்ஷக்கணக்கானவர்கள் உபயோகிக்கும் குடும்ப மருந்து—உலகிலேயே அதிகம் விற்பனையாகும் வலிநிவாரணி. வை எப்பொழுதும் கைவசம் வைத்திருங்கள்.

## துரிதமாகவும் பூர்ணமாகவும் நிவாரணம் பெற

# 'ஆஸ்ப்ரோ'




### 'ஆஸ்ப்ரோ' வேலைசெய்யும் மூன்று விதங்கள்







## 'ஆஸ்ப்ரோ'

## எவ்வகையிலும்

## அபாயமற்றது — சிறந்தது

ஒரு நிக்கோலஸ் N தயாரிப்பு

ஆ.ஓ. 152.TAM

# பத்தினிக் கோட்டம்

ஜெகசிற்பியன்

அத்தியாயம் இருபத்தொன்பது

## நீரில் கோலம்

'காஞ்சியிலிருந்து பெருவளநல்லூருக்குப் போய், அங்கிருந்து திருப்பருத்திக் குன்றத்துக்கு வந்த பல்லவ மன்னர், இறுதியில் என்னைப் பார்க்காமலே புறப்பட்டுப் போய் விட்டாரே, ஏன்?'

அறுத்துப் போட்ட பசலைக் கொடி போல் கட்டிலில் துவண்டு சாய்ந்து கிடந்த உத்தமசீலியின் வெதும்பிய மனத்தில் இந்த ஒரே கேள்வியே திரும்பத் திரும்பப் புகைந்துகொண்டிருந்தது.

'என்னைப் பார்க்கத்தானே அவர் இங்கு வந்தார்? அப்படி வந்தவர் சமண சங்கத் தலைவரைமட்டும் பார்த்து விட்டுப் போய் விட்டதன் காரணம் என்ன? ஒருகால் நான் இவ்வூருக்கு வந்திருக்கும் சேதி அவருக்குத் தெரியாதோ? நிச்சயமாக அவ்வாறு நினைக்க முடியாது. ஏனென்றால், சேதியக் கலைஞரின் தாற்காலிகமான இந்த இல்லத்தில் நானும் சோழ இளவரசியும் வந்து தங்கியிருக்கிறோம் என்ற விவரத்தைச் சமந்தபத்திரர் அவரிடம் சொல்லியேயிருப்பார். அவர் சொல்ல மறந்திருந்தாலும், என்னுடைய பணியாளனான நாகோதரனைப் பார்த்து நலம் விசாரித்த போதாவது தான் இங்குதான் இருக்கிறேன் என்பதை அவரால் உடனே ஊகித்துக் கொண்டிருக்க முடியுமே!'

அவள் சட்டென்று எழுந்து உட்கார்ந்து பரபரப்புடன் தன்னையே ஏற இறங்கப் பார்த்துக் கொண்டாள்.

'பல்லவ மன்னர் என்னை மறந்து விட்டிருப்பாரோ? அல்லது என்னைப் பார்க்க வேண்டும் என்பது அத்தனை அவசியமாக இப்போது அவருக்குப் படவில்லையோ? அதனால்தான் இந்தப் பக்கமே திரும்பாமல் அவர் போய் விட்டாரோ?'

உத்தமசீலியின் பூவுடல் அதிர்ந்து நடுங்கியது. பொங்கி வந்த துயரத்தை அடக்க மாட்டாமல் முகத்தைப் பொத்திக்கொண்டு விம்மிப் பொருமிய அவள், அடுத்த அறைக் கதவு திறக்கப்படும் சத்தம் கேட்டு அவசரமாகத் தன் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

'என்ன பைத்தியக்கார எண்ணம் இது? என் இதய மன்னராவது, என்னை மறப்பதாவது! அவர் மறப்பார் என்று நான் மறந்தும் நினைக்கலாமோ? முன்னைப்போல் அவர் நினைத்த இடத்தில் நினைத்த நேரத்தில் வந்து என்னைச் சந்தித்துவிட முடியுமா? சகல அதிகாரங்களும் பெற்ற ஒரு மாபெரும் தேசத்து மன்னர்தான் என்றாலும்அவருக்கும் எத்தனையோ கட்டுத் திட்டங்களும் சம்பிரதாயங்களும் இருக்கும் அல்லவா? அரச பதவி என்பதே பிறர் உரிமைகளைப் பாதுகாப்பதற்காகத் தனியொரு மனிதன் தன்னுடைய உரிமைகளைப் பறிகொடுப்பது என்பதுதானே? ஒரு சாதாரண குடிமகனுக்கு மன்னன் விதிக்கும் சட்டதிட்டங்களை அநுசரித்து நடக்க வேண்டிய கட்டாயம் இருந்தாலும் அவற்றை அவன் மீறிப் போகவும் அதனால் ஏற்க வேண்டிய தண்டனைகளை ஏற்றுக் கொள்ளவும் சுதந்திரம் இருக்கிறது; ஆனால் நாட்டை ஆளும் ஒரு மன்னனுக்கு அம்மாதிரியான சுதந்திரம் கூட இருப்பதில்லை. தண்டனை பெற வாய்ப்பில்லாத அவன் தனக்குரிய கட்டுத்திட்டங்களை மீறவும் வாய்ப்பற்றவனாகி விடுகிறான். இந்த நியதிக்குப் பல்லவ மன்னர் மட்டும் விதிவிலக்காகி விட முடியுமா? மேலும், தம்முடைய நாட்டைத் தம் புஜபலத்தாலும் தமக்குரிய காதலியைத் தமது மனப் பலத்தாலும் வென்று தேடிக் கொண்ட அவர் ஊர் அறிய உலகம் அறிய வீராபிஷேக முடிசூட்டுவிழாவும் அதைத் தொடர்ந்து திருமண விழாவும் எடுப்பித்து நடத்தும் பொருட்டு எத்தனை எத்தனையோ ஏற்பாடுகளைச் செய்ய வேண்டியவராய் இருப்பார். அத்துடன் ஒரு மிகப் பெரிய சாம்ராஜ்யத்தின் ஆட்சிப் பொறுப்பைப் புதிதாக ஏற்றிருப்பதால் அது சம்பந்தமான அவசர அவசியக் கடமைகளையும் பிரச்னைகளையும் கவனித்து ஆற்ற வேண்டியும் இருக்கும். இவ்வளவுக்கும் மிடையே என்னைப் பற்றியும் நினைத்து என்னுடைய நலன்களை அறிவதற்காக இவ்வளவு தூரம் வந்து போய் இருக்கிறாரே, இது ஒன்றே அவர் என் மீது வைத்திருக்கும் பேரன்புக்கு உறுதியான சான்று அல்லவா? என்னை அவரோ, அவரை நானோ இனி நேரில் சந்தித்துக் கொள்ள வேண்டிய அவசியம் என்ன? எங்களுக்குள் என்னத்

தனை இடைவெளியாவது இருந்தால் தானே அம்மாதிரி சந்திப்புச் சம்பிரதாயத்தை யெல்லாம் நாங்கள் எதிர்பார்க்கலாம்? என்னில் அவரும், அவரில் நானும் ஐக்கியப்பட்டு, நானே அவராகவும், அவரே நானாகவும் ஒருமித்து, ஒரு கோடி யுகமானாலும் பிரிக்க முடியாத உறவு பூண்டுவிட்ட பின், அவரை நானோ அல்லது என்னை அவரோ சந்தித்துக் கொண்டால் என்ன, சந்திக்காமல் போனால்தான் என்ன?'

அவள் மனம் பனிச்சென்று தெளிவடைந்தது. உடலில் ஒரு புதிய தென்பும் ஊற்றெடுத்தது. இனிய கனவு கண்டு எழுந்தவன்போல் இமைகளைத் தட்டி எழிலார்ந்த புன்னகை பூத்தவாறு எதிரே தன்னுடைய பார்வையை நிமிர்த்தினாள்.

ஈர ஆடைகளைக் களைந்து விட்டுப் புத்தாடைபுனைந்துகொண்டு அப்போதுதான் அவ்வறைக்குள் பிரவேசித்த சோழ இளவரசி இளங்கோப்பிச்சி வியப்புடன் விழிகளை மலர்த்திக் கதவருகிலேயே தயங்கி நின்றாள். சற்றுமுன் தாளமுடியாத அதிர்ச்சியாலும் துயரத்தாலும் மயக்கமுற்றவள் போல் கட்டிலில் சாய்ந்து கிடந்த உத்தமசீலி இப்போது உற்சாகமும் மகிழ்ச்சியுமாக இருப்பதைக் கண்டே அவள் அவ்வாறு வியந்து போய் நின்றாள்.

''சோழ இளவரசிக்கு இப்போதுதான் என் நினைவு வந்ததோ?'' என்று மெல்லச் சிரித்துக் கேட்டுக் கொண்டே அவளை நோக்கிச் சென்ற உத்தமசீலி, குறும்பும் குதூகலமுமாக அவள் முகத்தைக் கூர்ந்து பார்த்தாள். அன்றொரு நாள் பெருவளநல்லூரிலிருந்து பல்லவபுரம் இலவந்திகைப் பள்ளிக்குப் பயணமாகிப் போனபோது ஆலம்பாக்கம் அநந்தமதியின் இல்லத்துக்கு எதிரே சிவிகையை நிறுத்தி, இளங்கோப்பிச்சியிடம் இளநீர் வாங்கிப் பருகிய அந்தப் பழைய சம்பவம் அவள் நினைவில் வந்து நின்றது. அன்று முதன் முதலாக அவளைப் பார்த்தபோது அவளுடைய அப்ராக்ருத சௌந்தரியத்தில் தானே மயங்கிப் போனதையும் இப்போது நினைத்துக் கொண்டாள். ஆனால் இன்றோ அவளது தோற்றம் அடியோடு மாறிப் போய் விட்டிருந்தது. ஆழ்ந்த கிலேச



மும், ஓயாத சிந்தனையும், உள்ளார்ந்த கலவரமும், அவநம்பிக்கையும், ஆசாபங்கமும் வெறுப்பும், விரக்தியும் ஒரு நிரந்தரத் தன்மையுடன் அவளது முகத்தில் நிலவிக் கிடந்ததாலேயே அவள் அப்படி இளைத்து வெளுத்துப் பொலிவிழந்து காணப்பட்டாள். இன்று மட்டுமா இப்படிக் காட்சியளிக்கிறாள்? இல்லை; ஆலம்பாக்கத்திலிருந்து வந்த நாள் முதல் இதே போன்ற நிலையில்தான் அவள் இருந்து வருகிறாள். இதற்குக் காரணம் என்ன?....

''நான் கேட்க வேண்டிய கேள்வியை நீங்கள் கேட்டு விட்டீர்களே! நல்ல வேடிக்கைதான்!'' என்று வறண்ட சிரிப்புடன் சொன்ன இளங்கோப்பிச்சி, தன்னையே இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்த உத்தமசீலியின் கரங்களை மெல்லப் பற்றினாள்.

''ஓகோ!'' என்று பொய்க் கோபத்துடன் தலையாட்டிக் கொண்ட உத்தமசீலி, ''ஆமாம்; இன்று காலை ஏன் வழக்கத்துக்கு மாறாக என்னிடம் சொல்லிக் கொள்ளாமல் தனியே நீராடப் போனாய்?'' என்று கேட்டாள்.

''நீங்கள் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தீர்கள். அதனால்தான்...''

''சரி; அப்படியே இருக்கட்டும். ஆனால் ஆற்றில் நீராடி வரப் போனவள் இவ்வளவு நேரம் கழித்து வந்திருக்கிறாயே, அதற்குக் காரணம் என்னவாம்?''

''நீங்களும் நீராட வருவீர்கள் என்று எண்ணி உங்கள் வருகையை எதிர்பார்த்து ஆற்றங்கரையிலேயே காத்துக் கொண்டிருந்தேன்.''

உத்தமசீலி இதைக் கேட்டுக் கலீரெனச் சிரித்தாள். ''பொய்! முழுப் பொய்! இளங்கோப்பிச்சி! உன்னை விட நான் இரண்டு வயது மூத்தவள். என்னை உன்னால் ஏமாற்ற முடியாது.''

''ஒப்புக் கொள்கிறேன், இளவரசி! ஆனால் இத்தனை நாட்களாக என்னைப் பிரிந்து ஒரு கணமும் தனியே இருக்க விரும்பாத நீங்கள், இன்று மட்டும் என் நினைவே இல்லாமல் இருந்து விட்டீர்களே, ஏன்?''

''இல்லை; ஒவ்வொரு விநாடியும் உன் வரவை எதிர்பார்த்து நான் தவித்த தவிப்பு எனக்கல்லவா தெரியும்?''

''ஊஹூம்! இது நிஜமானால் என்னைத் தேடிக் கொண்டு ஆற்றங் கரைக்கு ஓடி வந்திருப்பீர்களே!''

''வருவதற்குத்தான் நினைத்தேன். ஆனால்......''

''பல்லவ மன்னர் இவ்வூருக்கு விஜயம் செய்திருக்கிறார் என்பதைக் கேள்விப்பட்டதும் என்னை அடியோடு மறந்து விட்டீர்கள், இல்லையா?''

உத்தமசீலி இதைக் கேட்டு வெட்கத்துடன் தலை குனிந்தாள்.

ஏதோ சிந்தனையில் சிறு பொழுது மௌனமாயிருந்த இளங்கோப்பிச்சி, ''அது சரி, இளவரசி! இவ்வளதூரம் வந்த பல்லவ மாமன்னர் உங்களைப் பார்க்காமலே போய்விட்டாரே, ஏன்?'' என்று கேட்டாள்.

நாகோதரனின் வாயிலாகத் தான் கேள்விப்பட்ட விவரங்களை அவளிடம் சுருக்கமாகக் கூறிய உத்தமசீலி, ''அவருக்கு இப்போது எவ்வளவோ அலுவல்கள் இருக்கும். என்னுடைய நலன்களைப் பற்றிச் சமணத் தலைவர் சமந்தபத்திரரிடம் விசாரித்துத் தெரிந்து கொண்டதோடு திருப்திப்பட்டுக் கொண்டு அவசரமாகப் போய் விட்டிருப்பார் என்று நினைக்கிறேன்'' என்றாள் சிறுபிள்ளைத்தனமான பெருமிதத்துடன்.

''ஓ..... சளுக்கியத் தளபதியின் முடிவு அப்படியா ஆயிற்று?'' என்று எங்கோ பார்த்தவாறு மெல்லிய குரலில் முணுமுணுத்த இளங்கோப்பிச்சி சட்டென்று திரும்பி, ''என்ன சொன்னீர்கள், இளவரசி? பல்லவ மன்னர் உங்களைப் பார்க்காமல் போனதற்குக் காரணம் அவருடைய அவசர அலுவல்கள்தாம் என்றா நீங்கள் நினைக்கிறீர்கள்?'' என்று விஷமச் சிரிப்புடன் வினவினாள்.

''ஆமாம், இளங்கோப்பிச்சி! தம் வீராபிஷேக முடிசூட்டு விழாவையும், திருமண வைபவத்தையும் விரைவில் நடத்தி முடிக்க வேண்டிய பெரும் பொறுப்பு அவருக்கு உண்டல்லவா?''

இளங்கோப்பிச்சி அவளை ஆழ்ந்த அநுதாபத்துடன் பார்த்துப் பெருமூச்செறிந்து விட்டு, ''அப்படியாயின், பல்லவ நாடு விடுதலைப் போரில் வெற்றியடைந்து இரண்டு மாத காலமாகியும் அவ்வெற்றி விழா வைபவங்கள் இதுவரை நடைபெறாமல் இருப்பதற்கு நீங்கள் என்ன காரணம் கற்பித்துக் கொண்டிருக்கிறீர்கள், இளவரசி?'' என்று கேட்டாள்.

''அரசாங்கக் கணிகர்களும், அதிகாரிகளும் அந்த விழா வைபவங்களை நடத்துவதற்கான மங்கல நாட்களைச் சற்றுப் பின் தள்ளித் நிர்ணயித்திருப்பார்கள் என்று நினைக்கிறேன்! இதைத் தவிர வேறு என்ன காரணம் இருக்க முடியும்?''

''அதாவது இன்றோ நாளையோ இன்னும் சில தினங்களிலோ பல்லவ மாமன்னரின் பரிவாரங்கள் வந்து உங்களைக் காஞ்சிக்கு அழைத்துச் செல்லப் போகின்றன என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள், அப்படித்தானே?''

''இதிலென்ன உனக்குச் சந்தேகம்?''

# காட்பரீஸ்

## டிரிங்கிங் சாக்கலேட்

சூடாகவோ, அல்லது குளிர்ந்ததாகவோ—
மிக ருசியானது
ஒரே நொடியில் தயார்.




Aiyars CF. 400 TAM A

''பாவம்! ஆந்திர இளவரசியாருக்கு இந்நாட்டில் இப்போது என்ன நடக்கிறதென்றே தெரியாது, போலும்! அது தெரிந்திருந்தால் இத்தனை இனிய கற்பனைகளில் சஞ்சரித்துக் கொண்டிருக்க மாட்டார்!''

உத்தமசீலி இதைக் கேட்டுப் பெரிதும் அதிர்ச்சியடைந்தவளாய் அவனைப் பரபரப்புடன் பார்த்து ஏதோ கேட்க வாயெடுத்தவள், வெளியே யாரோ வரும் காலடி ஓசை கேட்டுச் சாளரத்து வழியாக எட்டிப் பார்த்தாள்.

அங்கே, திரமிள சமண சங்கத் தலைவர் சமந்தபத்திரரும், அவருக்குப் பின்னால் வேறு இரு சமணத் துறவிகளும் வந்து கொண்டிருந்தார்கள்.

'என்றைக்கும் இல்லாத அதிசயமாக இன்று ஏன் இவர்கள் இங்கு வருகிறார்கள்? ஒரு கால் பல்லவ மன்னர் எனக்கு ஏதேனும் சேதி அனுப்பி விட்டுப் போயிருப்பாரோ? அதைத் தெரிவிக்கத் தான் இவர்கள் என் இல்லம் நாடி வருகிறார்களோ?'

திகைத்து நின்ற உத்தமசீலி, அந்தத் துறவிகளை வரவேற்பதற்காக வெளியே செல்லத் திரும்பியவள் சட்டென்று நின்று தன்னையே ஒரு முறை ஏற இறங்கப் பார்த்துக் கொண்டாள். அவள் முகம் திடீரென்று வெளிறிச் சிறுத்தது. உடலில் ஒரு நடுக்கம் ஏற்பட்டுக் குன்றிக் குறுகியது. அவசரமாக ஓடிப் போய்க் கட்டிலின் தலை மாட்டில் கிடந்த கருநீல நிறப் பட்டுத் துகிலை எடுத்துத் தன்னை நன்றாகப் போர்த்துக் கொண்டு தயங்கித் தயங்கி வெளி முற்றத்தை நோக்கி நடந்தாள்.

### அத்தியாயம் முப்பது

# சல்லேகனை

''ஆந்திர இளவரசியார் நலம் தானே?'' என்று அன்பும் கனிவுமாகக் கேட்டுக் கொண்டே முற்றத்துத் தாழ்வாரத்தில் வந்து நின்றார் சமண சங்கத் தலைவர் சமந்தபத்திரர். அவருக்குப் பின்னால் அவ்விரு இளந்துறவிகளும் தலைகுனிந்தவாறு வந்துநின்றனர்.

''வணக்கம், அடிகளே! தங்கள் அன்பாசியால் நன்னலமாகவே இருக்கிறேன்'' என்று பணிவுடன் கூறிக் கரம் குவித்த உத்தமசீலி ஒரு தூணின் ஓரமாகப் போய் ஒதுங்கி நின்றாள். சமணத் துறவிகள் பிறர் இல்லங்களில் அமர்ந்து பேச மாட்டார்கள் என்ற விவரம் தெரிந்தவளாதலால் அவரை இருக்கையில் அமரச் சொல்லி உபசரிக்கவில்லை.

''இளவரசியாரைப் பார்த்து ஒரு மாதத்துக்கு மேல் ஆகிறது. சங்கப் பள்ளியில் நடைபெறும் வாராந்திர ஞானோபதேசக் கூட்டங்களுக்குக்கூட அவர் ஏனோ வருவதில்லை'' என்று புன்முறுவலுடன் பேச்சை ஆரம்பித்தார் சமந்தபத்திரர்.

உத்தமசீலியின் மனம் 'திக் திக்' கென்று அடித்துக் கொண்டது. அவள் மௌனமாகத் தலைகுனிந்து நின்றாள்.

''சற்று முன்னதாகவே நாங்கள் இங்கு வரப் புறப்பட்டோம். அந்தச் சமயம் வேறோர் அவசர அலுவலைக் கவனிக்க வேண்டி நேர்ந்து விட்டது'' என்று அமைதியாகச் சொன்ன சமந்தபத்திரர் மேலும் கூறினார்: ''நம் சேதியக் கலைஞர் பரவாதிமல்லர் தமது இல்லத்தை நிர்மாணித்து வரும் ஊரான கூரம் கிராமத்தில் 'பரமேசுவர தடாகம்' என்பதாக ஓர் ஏரி இருக்கிறது. அந்த ஏரிக்கு மேலண்டைப் புறம் எங்கள் சங்கத்துக்குச் சொந்தமான ஒரு சிறிய ஆதுல சாலை உண்டு. சமணப் பெண் துறவிகளால் பெண் மக்களுக்கெனப் பிரத்தியேகமாக நடத்தப்பட்டு வரும் மருத்துவ விடுதி அது. நாகமதி கௌந்தியார் என்பவர் அவ் விடுதியின் தலைவர். அந்த அம்மையாருக்கு வயது தொண்ணூற்றைந்து ஆகிறது. அவர் மூப்பின் காரணமாகத் தம் பொறுப்பை வேறோர் ஆர்யாங்கனையிடம் ஒப்படைத்து விட்டுத் தாம் சல்லேகனை எனப்படும் உண்ணாநோன்பினை மேற்கொண்டு உயிர் வாழ்வதைத் துறக்க முடிவு செய்திருப்பதாக எனக்குச் சேதி வந்தது. அவருக்கு என் அநுமதியையும் இறுதி உபதேசங்களையும் ஒரு குரத்தியார் மூலம் வழங்கி அனுப்பி விட்டு நேரே இங்கு வருகிறேன்.''

சமந்தபத்திரர் சொன்ன இந்த விவரங்களை வெகு கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தாள் உத்தமசீலி.

உள்ளறையின் சாளரத்து ஓரம் நின்று கொண்டிருந்த சோழ இளவரசி இளங்கோப்பிச்சி மெள்ள வெளியிலே வந்து சமந்தபத்திரரை வணங்கி விட்டுச் சற்றுத் தள்ளிப் போய் நின்று கொண்டு, ''அடிகளே! இரத்தின கரண்டக சிராவகாசாரம் என்னும் வடமொழி நூலின் வாயிலாகச் சல்லேகனையைப் பற்றி நான் சிறிதளவேனும் தெரிந்து கொண்டிருக்கிறேன். அந்த உயரிய நோன்பின் முழு விளக்கத்தையும் தயைசெய்து தெரிவிப்பீர்களா?''

என்று வினவினாள். அவள் சைவ சமயத்தில் தீவிரப் பற்றுக் கொண்டவள் என்றாலும் சமண சமய நெறிமுறைகளைத் தெரிந்து கொள்ளுவதில் ஒரு தனி ஆர்வம் காட்டுவது வழக்கம்.

சிறு பொழுது சிந்தனையில் ஆழ்ந்து நின்ற சமந்தபத்திரர் அவளை இதமாக ஏறிட்டுப் பார்த்துப் புன்முறுவலுடன் சொன்னார்: ''சோழ இளவரசியார் எங்கள் சமயக் கொள்கைகளை அறிந்து கொள்வதில் காட்டும் ஆர்வம் எனக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளிக்கிறது. எந்தச் சமயத்தைச் சார்ந்தவர்களும் பிற சமயக் கொள்கைகளை ஓரளவாவது தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம். அப்படித் தெரிந்து கொள்வதால் தாம் சார்ந்த சமயத்தின் மீது மிகுந்த நம்பிக்கையும் பற்றுதலும் ஏற்படுவதோடல்லாமல், வீணான வேற்றுமை உணர்ச்சிகளும், ஏற்றத் தாழ்வு எண்ணங்களும் அகன்று, சமயப் பொறை காக்கும் சகிப்புத் தன்மையும் சமரச மனப்பான்மையும் ஏற்பட ஏதுவாகும். சரி; சல்லேகனையைப் பற்றிச் சுருக்கமாகச் சொல்கிறேன், கேளுங்கள், இளவரசி! இடையூறு, ஒழிவில் நோய், மூப்பு இவை வந்தால் கடை துறத்தல் சல்லேகனை அதாவது தாள முடியாத மன வேதனையைத் தருகிற இடையூறு, தீராத நோய், வயது மூப்பு முதலான உண்டாகும் போது சல்லேகனை செய்து உயிர் துறக்கலாம். பஞ்சத்தால் வாடும் போதும் இந்த உண்ணாநோன்பை ஏற்று உயிரை விடலாம். சல்லேகனை செய்வோர் தர்ப்பைப் புல்லின் மேல் வட திசை நோக்கி அமர்ந்து சாகிற வரையில் உணவு கொள்ளாமல் இருக்க வேண்டும். அந்த நாட்களில் எதையும் நினைக்காமலும், எதன் மேலும் விருப்பம் கொள்ளாமலும் இருத்தல் வேண்டும். மறு பிறவியில் அரசனாகவோ தேவராகவோ பிறக்க வேண்டும் என்று ஆசைப்படக் கூடாது. தூய எண்ணத்துடன் வீடு பேறு ஒன்றையே நோக்கமாகக் கொள்ள வேண்டும். இவையே வடக்கிருத்தல் நோன்புக்கான முக்கிய நெறிமுறைகள்.''

''அடிகளார் தந்த விளக்கத்துக்கு நன்றி. ஆயினும் ஒரு சிறு சந்தேகம். நாமே வலிந்து சென்று உண்ணா நோன்பை மேற்கொண்டு உயிர் துறப்பது தற்கொலைக்கு ஒப்பான செயல் அல்லவா? அதை எப்படி ஓர் அற நெறியாகக் கொள்ள முடியும்?''

''சோழ இளவரசியார் தமிழ்க் காப்பியங்களை நன்கு பயின்றவர் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். எனவே நீலகேசியிலிருந்து ஒரு பாடலை அவருக்கு நினைவுபடுத்திவிட்டால் அவரது வினவுக்குச் சரியான விடை கிடைத்துவிடும். அதாவது, 'அழிவுகாலத் தறந்தொடர்ப் பாடெலாம் ஒழியல் வேண்டுமேன் – றேந் நமை நாங்கொளீஇ வழியுங் காட்டுமம் மாண்புடையார் கண்மேல் பழியுங்கீட்டுரைத் தாற்பய னென்னையோ?' என்பதே அந்தப் பாடல்!''

திருப்தியுடன் தலையசைத்த இளங்கோப்பிச்சி ஒரு விநாடிக்குப் பின் ''ஆமாம், அடிகளே! சல்லேகனை செய்யும்போது வடக்குத் திசை நோக்கி அமர வேண்டுமென்பதற்குக் காரணம் என்ன?'' என்று கேட்டாள்.

''சமணர்களுக்கு வட திசை ஒரு புண்ணிய திசையாகும். காரணம், எங்கள் புனிதத் தலைவர்களான தீர்த்தங்கரர்கள் அனைவரும் வடக்கே வீடு பேறு அடைந்தவர்கள். முதல் தீர்த்தங்கரரான ஆதிநாதர் எனப்படும் ரிஷப தேவர் கயிலாய மலையில் வீடுபேறு அடைந்தார். நேமிநாத தீர்த்தங்கரர் வட பாரதத்தின் கிர்நார் என்னும் நகரிலே வீடுபேறு பெற்றார். எனவே தான் சல்லேகனை நோன்புக்கு வடக்கு நோக்கி அமரும் வழக்கம் கைக்கொள்ளப்படுகிறது.''

''வடக்கிருத்தல் நோன்பைச் சமணர் மட்டும்தான் மேற்கொள்ள வேணுமா?''

''இல்லை; சங்க காலத் தமிழகத்தில் மற்ற சமயத்தவரும் இந்த நோன்பை மேற்கொண் டிருக்கிறார்கள்! ஏன்? உங்கள் மூதாதையரில் ஒருவரான கோப்பெருஞ் சோழர் வடக்கிருந்து வாழ்வை முடித்துக் கொண்டவர்தான் என்பது உங்களுக்குத் தெரியாதா இளவரசி? அந்த மன்னரின் ஒப்பற்ற நண்பரான புலவர் பிசிராந்தையாரும் பொத்தியாரும் கூட வடக்கிருந்து உயிர் துறந்தவர்கள்தானே? வெண்ணிப் பறந்தலையில் கரிகால் சோழப் பெருவளத்தானோடு போரிட்டு முதுகில் புண்பட்ட சேர மன்னன் பெருஞ்சேரலாதன் அந்த அவமானத்தைத் தாளாமல் வடக்கிருந்து உயிர் விட்டான் என்பதையும் அறிந்திருப்பீர்களே! பாரி மன்னன் இறந்த பிறகு அவன் பிரிவைத் தாளாத புலவர் கபிலரும் பட்டினி நோன்பை ஏற்று இறந்தவர்தான்!''

''மிக்க நன்றி அடிகளே!'' என்றவாறு மெல்லப் பின்னால் நகர்ந்துகொண்டாள் இளங்கோப்பிச்சி.

ஏதோ முக்கியமான சேதி சொல்ல வந்த சமந்தபத்திரரின் கவனம் வேறு திசையில் திரும்பி விட்டதே என்று உள்ளத் துடிப்புடன் தவித்துக் கொண்டு நின்ற உத்தமசீலி அவரைப் பரபரப்போடு நோக்கினாள். (தொடரும்)

# வாட்டர்பரீஸ்

# வைடமின் காம்பவுண்ட்

# சாப்பிடவேண்டியது எப்பொழுது?




■ எந்த சீதவெப்ப நிலையிலும், எப்பருவத்திலும் வயதுவந்தோர், சிறுவர் யாவரும் சுவைத்துப் பருகுவதற்கு உகந்த பொது டானிக் வாட்டர்பரீஸ் வைட்டடமின் காம்பவுண்ட்.

■ வைட்டமின் பி காம்ப்ளெக்ஸ், மால்ட் எக்ஸ்ட்ராக்ட் மற்றும் உடல் நலம், தென்பு ஆகியவற்றுக்கு அவசியமான பொருள்கள் செறிந்தது வாட்டர்பரீஸ் வைட்டமின் காம்பவுண்ட். பசியைத்தூண்டுவதுடன், ஆரோக்கிய உணர்வை ஊட்டுகிறது அது.

## வாட்டர்பரீஸ்

# வைடமின்

## காம்பவுண்ட்

வார்னர் - லாம்பர்ட் பார்மஸூடிகல் கம்பெனி. (வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு. எஸ். ஏவில் இணைக்கப்பெற்றது)

WLY-9 TAM

# இன்னும் சிறியவள்

வி.எஸ்.எஸ்

பொழுது மலை வாசலில் புகுந்து மூந்திக் கருக்கல ஆகி விட்டது. கோர்ட்டுக்குப் போன முருகையன் இன்னும் வரவில்லை. அவன் மனைவி தெய்வானையும், மகள் மூத்தம்மையும் அவன் வருகைக்காகப் பார்த்துப் பார்த்துக் கண்ணும் பூத்துப் போய் விட்டது. அந்தத் தாமதத்திலிருந்தே தாயும் மகளும் கோர்ட்டில் வழக்கு தங்கள் பக்கம் தோற்றுப் போயிருக்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டார்கள். ஆனால் இருவருக்குமே அதை வாய் விட்டுச் சொல்லி ஒருவருக்கொருவர் தங்கள் எண்ணங்களைப் பரிமாறிக் கொள்ள விருப்பமில்லை.

விவசாயம் என்றால் நாலும்தான் வேண்டும்; ஆகையால் கூட்டு சேர்வதில் பாதகம் இல்லை என்று எண்ணினான் முருகையன். ஆனால் எதிர்பார்த்தபடி ஒன்றும் நடக்க வில்லை. அந்த வருஷம் மழையில்லை, ஏரி நிரம்பவில்லை. கடைசி இரண்டு தண்ணீர் தட்டுப்பாடு ஆக விளைச்சல் பாதித்து விட்டது. நிலக் கிழார் குறை விளைச்சலை உத்தேசித்து ஓரளவுதான் குத்தகையைத் தள்ளிக் கொடுத்தாரே தவிரப் போதுமானபடி தாட்சிண்யம் காட்ட வில்லை. இந்தச் சிக்கலில் ஏற்பட்ட கணக்கு வழக்கில் முருகையன் பங்கு முந்நூறு என்று கணக்குக் காட்டினான் மூத்தன். இதை ஒப்புக் கொள்ளவில்லை முருகையன். அபிப்பிராய பேதம் வலுத்தது. நாலு பேர் கூடிப் பஞ்சாயத்துப் பேசியதிலும் தீர்வு காண முடியவில்லை. மூத்தன் கோர்ட்டு ஏறினான். எதிர் வழக்காடினான் முருகையன். வாய்தாவுக்கு மேல்வாய்தா. வக்கீல் வீட்டுக்கு நடையான நடை. இரண்டு ஆண்டுக் கூட்டுப் பயிர்க் கணக்கை எழுதி வைத்தான் முருகையன். கடைசியில் மூத்தன் பக்கம் சாதகமாகத் தீர்ப்பாயிற்று. மேல் கோர்ட்டுக்கு எடுத்துப் போக வேண்டிய வழக்கு. அங்கு எப்படியும் நியாயம் பெற்று விடலாம் என்று மேலும் யோசனை சொன்னார் வக்கீல். முருகையன் தலையை அசைத்து விட்டுத் திரும்பினான்.

அந்தச் சிறிய விவசாயக் கிராமம் செல்வலூர். சுமார் இருநூறு தலைக் கட்டுக்களைக் கொண்டது. அவ்வளவு குடும்பங்களுக்கும் விவசாயத்திலேயே ஈடுபாடு. அவர்களுடைய சீருக்கும் செழிப்புக்கும் ஆதாரம் செல்வலூர் பெரிய ஏரி. அந்த ஏரியின் பாசனத்தில் தான் அவர்கள் உழைப்பு களிப்பு எல்லாம். 'பொன் போட்டுப் பொன்னை எடுத்துவிடலாம்' என்று சொல்லும் அளவுக்கு வளப்பமான மண். நீண்டு அகன்ற வயல்களில் அத்தனை நஞ்சைப் பயிர்களையும் பயிர் செய்து மகிழ்வார்கள். அவர்களுக்கு ஏற்படும் ஒரே ஒரு பிரச்னை ஏரி நிரம்பி மறுகால் பாய வேண்டும் என்பதுதான். அந்த ஒன்றுக்காகத்தான் அவர்கள் வழிபாடு, திருவிழா, கோலாகலம், களியாட்டம் எல்லாம். ஏரி நிரம்பி மறுகால் போய் விட்டதை முதன் முதலில் பார்த்து விட்டு வந்து ஊருக்குள் சேதி தெரிவிக்கிறவன் யாராயிருந்தாலும் அவனுக்கு அம்மன் கோவில் திருவிழாவில் விசேஷ மரியாதைகள். மஞ்சனநீராட்டி, பட்டுக்கரை வேட்டி உடுத்தி மாலை போட்டுக் கோவில் முன் அதற்கென்று மேடை கட்டி வீற்றிருக்கச் செய்து கிராமத்தின் சார்பாகச் சிலர் விழுந்து கும்பிடுவார்கள். அந்தக் கிராமத்தில் குடிகொண்டிருக்கும் சந்தானமாரி அம்மனே பெருமழையில் ஏரியைக் காத்து ஏரி நிரம்பி வழிந்து மறுகால் கடை போனதைத் தன் மக்களுக்கு ஓடி வந்து சொல்லி உற்சாக மூட்டுகிறாள் என்ற ஐதிகம். இந்த மாலை மரியாதை



யார் நினைவுக்கும் எட்டாத காலத்திலிருந்து நடக்கும் ஒரு நிகழ்ச்சி. அதை உற்சாகமாகக் கடைப்பிடித்து வந்தார்கள் செல்லூர் மக்கள்.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர் இந்த நிகழ்ச்சியில் ஒரு திருப்பத்தை உண்டாக்கி விட்டாள் முத்தம்மை. அன்று பேய் மழை பெய்து கொண்டிருந்தது. மழை நின்றதும் வீட்டுக்கு வரலாம் என்று இருந்த முத்தம்மை நேரம் போனதே தெரியாமல் தங்கள் வாழைத் தோட்டத்துக் குடிலில் தங்கி விட்டாள். மழை ஊற்று ஊற்று என்று ஊற்றிக்கொண்டிருந்தது. எங்கு பார்த்தாலும் வெள்ளக் காடு. ஒரு பனையோலையை மழைக்கு மறைவாகப் பிடித்துக் கொண்டு வேகமாக நடக்க ஆரம்பித்தாள்.

ஆனால் அவள் மனத்தில் அன்று பெய்த மழையில் ஏரி கட்டாயம் நிரம்பி யிருக்க வேண்டும் என்ற நம்பிக்கை ஓடிற்று. எனவே, வயல்களைக் கடந்ததும் கரைத் திருப்பத்தில் ஏரிக் கரை வழியாக மறுகால் வரைக்கும் ஓடினாள்.

அங்கே நீர் மறுகால் பாய்ந்துகொண்டிருந்ததைக் கண்டாள்!

அவளுடைய மகிழ்ச்சிக்குக் கங்கு கரை இல்லை. மற்ற யாரும் ஊரில் சொல்வதற்கு முன்னால்தான் சொல்ல வேண்டும் என்று எண்ணினாள்.

ஒரே ஓட்டம் பிடித்தாள் ஊரை நோக்கி.

''ஏரியில் மறுகால் போய் விட்டது. ஏரியில் மறுகால் போய் விட்டது''



என்று இரைந்து கூவிக் கொண்டு ஊருக்குள் புகுந்தாள் முத்தம்மை. ஊரார் கதவுகளைத் திறந்துகொண்டு எட்டிப் பார்த்தார்கள். எல்லாருக்கும் அளவிட முடியாத மகிழ்ச்சி.

அந்த வருஷத்திய மாலை மரியாதைக்கு உரியவள் முத்தம்மை. எனவே, திருவிழாவுக்கு நாள்கால் நாட்டியதும் முத்தம்மைக்குக் கங்கணம் கட்டி விட்டார்கள். அம்மன் காரியத்தில் ஈடுபட்டவர்களைப் போல அவளும் புலால் உண்ணாமல் விரதமிருந்து ஒரு பொழுது உணவு சாப்பிட்டாள்.

அம்மன் பூசையை அடுத்து சர்வ சாதாரணமாக நடக்கும் அந்த மாலை மரியாதை நிகழ்ச்சி இவ்வருஷம் எல்லாரும் பிரமித்து வியக்கும் படியாக நடந்தது. முத்தம்மைக்கு மஞ்சன நீராட்டி, புத்தாடை புனைந்து, பூக்களால் அலங்கரித்துக் கோவில் முன்னுள்ள மேடையில் அமரச் செய்தார்கள்.

முத்தம்மையை மணந்து கொள்ளச் செவ்வலூர் கிராமத்தில் உள்ள அத்தனை வாலிபர்களுமே கனவு கண்டார்கள். ஆனால் முருகையனைக் கூட்டுப் பயிர் செய்யச் சேர்த்துக்கொண்டிருந்த முத்தன் மகன் மருதப்பனுக்கு அவளோடு நெருங்கிப் பழகும் சந்தர்ப்பமும் சலுகையும் கிடைத்தன. அவள் அன்பைப் பெறப் பல வழிகளிலும் முயன்றான். தன் எண்ணத்தை அவளிடம் எவ்வாறு சொல்லுவது என்று அவன் யோசனை செய்து கொண்டிருந்த பொழுது ஒரு நாள் முத்தம்மை அவனைத் தேடி வந்தாள். அப்பொழுது அவன் தெம்மாங்குப் பாட்டு ஒன்றைத் தனக்குள்ளே பாடியவண்ணம் தன் வீட்டுக் கொல்லையில் இருந்த பூவரச மரம் ஒன்றில் ஏறித் தழைகளைக் கீழே வெட்டிப் போட்டுக் கொண்டிருந்தான்.

"கண்ணாடி வளவிதொட்டு, கதிராக்கும்
சின்னத் தங்கம் – உன்
கண்ணாடி மின்னுதடி, கதிரறுப்பு
பிக்குதடி"

அந்தப் பாட்டைக் கேட்டதும் முத்தம்மைக்கு ஒரே சிரிப்பாக வந்தது. மிகச் சிரமத்துடன் சிரிப்பை அடக்கிக் கொண்டாள். சேலையைத் தூக்கிச் செருகிக்கொண்டு கைவளைகள் குலுங்காமல் மெதுவாக மரத்தில் ஏறினாள், மேலே போய் அவனைத் திடுக்கிடச் செய்ய வேண்டுமென்று. மருதப்பன் தழை வெட்டும் வேலையில் அவளைக் கவனிக்கவில்லை. முத்தம்மை வசமாக அவன் பின்னால் சென்று திடீரென்று அவன் இரண்டு கண்களையும் பொத்தினாள். திடீரென்று பயந்து தடுமாறியவனின் இடது கையைக் கீழே விழுந்த அரிவாள் பதம் பார்த்து விட்டது. 'ஓ'வென்று அலறி விட்டான்.

பதறிய முத்தம்மை மருதப்பனின் கையில் இரத்தம் வடிவதைக் கண்டு, "அத்தான், இது என்ன உன் கையிலே?" என்று கேட்டாள்.

"ஒன்றும் இல்லை, நீ கண்ணை மூடின அதிர்ச்சியிலே அரிவாள் கையில் கொஞ்சம் பட்டுட்டுது" என்று சமாளித்துக் கொண்டான். முத்தம்மை தானாகவே தன்னிடம் அத்தான் உறவு கொண்டு விட்டதில் அவனுக்கு மகிழ்ச்சி. அதில் வலியை மறந்தான்.

மருதப்பனும் முத்தம்மையும் உறவைப் பலப்படுத்திக் கொள்ளும் இந்த வேளையில் தான், முத்தனும் முருகையனும் எதிரும் புதிருமானார்கள். அவர்களது முறிவு முத்தம்மையையும் மருதப்பனையும் மிகவும்பாதித்தது.

அன்று மாலையிலிருந்து ஒரே அடைமழை. மழை நின்ற பிறகு வைக்கோல் எடுத்து மாடுகளுக்குப் போடலாம் என்று இருந்தாள் முத்தம்மை. ஆனால் மழையோ நிற்கவில்லை.

மழையில் வைக்கோல் கெட்டுப்போகாமல் ஒரு பெரிய ஓலைக் கொட்டகை போட்டு அங்கு பத்திரமாக வைத்திருந்தான் முருகையன். கொட்டகையின் தட்டிக் கதவைத் திறந்துகொண்டு அவள் உள்ளே போனதும் "முத்தம்மா!" என்று குரல் கேட்டது. 'திக்'கென்றது முத்தம்மைக்கு. 'கும்'மென்று இருட்டு. மனத்தில் அச்சம் ஏற்பட்டு, "யாரு அது?" என்று திகிலோடு கேட்டாள்.

"நான்தான் முத்தம்மா!"

"'நான்தான்'னு? மருதப்ப அத்தானா? ஆமா, இது என்ன திருடன் மாதிரி இப்படி வைக்கப் போரிலே வந்து ஒளிஞ்சிகிடக்கறே?"

"அட கடவுளே! நீ 'திருடன்'னு சொல்லிட்டியா? — நான் உன்னைத் தனியாப் பார்க்கணும்னு எவ்வளவு நேரமாக் காத்துக்கிட்டுக் கிடக்கிறேன் தெரியுமா?"

## பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு (பிரைவேட்) லிட்.,

(நிறுவியது)

"விஷ்ணு விஹார்", 17-A, ஸயான் - மாதுங்கா எஸ்டேட்
(கிங்ஸ் ஸர்க்கிள் ரயில்வே ஸ்டேஷனுக்கு எதிரில்)

Post Bag No. 6769. பம்பாய்—22 தந்தி: "GROWRICH"

போன் 471485

| 25 மாதங்கள் | குறுகிய கால ஏலச் சீட்டுகள்<br>2-வது ஞாயிற்றுக்கிழமை ஏலங்கள்<br>1963 டிசம்பர் மாத ஸீரிஸ் | 25 அங்கத்தினர்கள் |
|---|---|---|

சேரக் கடைசி தேதி 7-12-1963 ... முதல் ஏலத் தேதி 8-12-1963

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| A | ரூ. 200/- | ரூ. 5,000/- | F | ரூ. 25/- | ரூ. 625/- |
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | G | ரூ. 20/- | ரூ 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | J | ரூ. 10/- | ரூ. 250/- |

### நீண்டகால ஏலச் சீட்டுகள்

சேரக் கடைசி தேதி 7-12-1963 ... முதல் ஏலத் தேதி 8-12-1963
60 மாதங்கள் 60 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | குறித்த தள்ளுபடி |
|---|---|---|---|
| C | ரூ. 200/- | ரூ. 10,000/- | ரூ. 1,000/- |
| A | ரூ. 100/- | ரூ. 5,000/- | ரூ. 500/- |
| B | ரூ. 50/- | ரூ. 2,500/- | ரூ. 250/- |
| D | ரூ. 20/- | ரூ. 1,000/- | ரூ. 100/- |

விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப்படும். சீட்டில் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது.

வெள்ளிக்கிழமை (வார விடுமுறை நாள்)

வேலை நேரம்: காலை 8 முதல் 11 மணி வரை: மாலை 4 முதல் இரவு 8 மணி வரை

(போர்டார் உத்திரவுப்படி) எம். வி. சுப்ரமணியம், மானேஜிங் டைரக்டர்

தலைமை ஆபீஸ்: மதராஸ்-5

இதர கிளைகள்:
1. 70, முதல் மாடி, 5வது மெயின் ரோடு, ஸ்ரீனிவாச பில்டிங், காந்தி நகர், பெங்களூர்-9
2. "கான்ஸன் ஹவுஸ்", 1/24, ஆஸப் அலி ரோடு, புது டெல்லி-1
3. 4/73, கிருஷ்ணா மார்க்கெட், W. E. A., கரோல்பாக், புது டில்லி-5
4. 198, முதல் மாடி, ஜோர்பாக் நர்ஸரி, புது டெல்லி-3
5. 48, லேக் பிளேஸ், கல்கத்தா-29

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

"அத்தான்! உன்னைத் தனியா சந்திக்கணும்னு நானே நினைச்சிட்டிருந்தேன். ஆனால் உன்னைப் பார்க்கிறது அத்திப்பூவா யிருக்கே!"

"நீ என்னைப் பார்க்க நினைச்சியா?"

"ஆமாம். உன்னைப் பார்த்து உங்கப்பா செஞ்சது கொஞ்சம் கூட ஞாயம் இல்லே என்று சொல்லறதுக்காகத்தான். இந்த மூந்நூறு ரூபாய்க் காசுக்காக எங்க அப்பாவை கோர்ட்டு, கச்சேரி ஏறும்படி பண்ணி, பொய்யாக்கி, முதலும் வட்டியுமாகக் கறந்தது ஞாயமாங்கிறதைக் கேட்கிறதுக்காகத்தான். என்னைக் கல்யாணம் கட்டிக்கிறதுக்கு என் காலடியிலே ஆயிரம் ஆயிரமாப் பணத்தைக் கொட்டுவாங்க அப்படின்னு ஒரு நாள் எங்க வாழைத் தோட்டத்து மூலையிலே சொல்லிக்கிட்டு இருந்தியே. ஆயிரம் ஆயிரமாகக் கொட்டுகிற வங்கதான் இந்த மூந்நூறு ரூபாய்க்கு இந்தப் பாடு படுத்தினீங்களா?"

"அடேயப்பா! எவ்வளவு நீளமாப் பேசிப்புட்டே! பேசு பேசு. நல்லாப் பேசு! இப்படிக் கோபமா பேசறபோதுகூட உம் முகத்தை நான் முழுதும் பார்த்துக்கொண்டே இருக்கலாம். ஆனால் இந்த இருட்டிலே உன் குரலைக் கொண்டுதான் அதைப் பார்க்க வேண்டியிருக்குது!"

"போதும் போதும். இப்படியெல்லாம் பேசிட்டா இந்த முத்தம்மை ஏமாந்துவிட மாட்டாள். ஆமாம் நல்லா தெரிஞ்சுக்க. அத்தான், நான் சொல்றபடி கேட்பியா?"

"பின்னே, எதுக்கு இப்படி இங்கே ஓடி வந்திருக்கேன்?"

"உன்னை நான் கட்டிக்கிறதானால் —என்ன? உங்க அப்பா இந்த மூந்நூறு ரூபாயை எங்க அப்பாகிட்டே இருந்து எதிர்பார்க்கக் கூடாது. எங்க அப்பா மனசு சமாதானம் ஆகணும்னு அதுதான் வழி."

"சரி முத்தம்மா!" — இப்படிக் கூறிப் பிரியா விடை பெற்றான் மருதப்பன்.

அன்று செவ்வலூர் ஏரிக்கருகே கிராமத்து வாலிபர்கள் கூடியிருந்தனர். வாழைத் தோட்டத்துக் குடிலில் இருந்து அங்கே ஒரு சிறு கூட்டம் கலகலவென்று இருப்பதைக் கண்டாள் முத்தம்மை. ஒரு வேளை அங்கே மருதப்பன் இருந்தாலும் இருக்கலாம் என்று எண்ணிச் சென்றாள்.

"இங்கே என்ன கும்மாளம்?" என்று தோழிகளிடம் கேட்டாள் முத்தம்மை.

"நடு மடையிலிருந்து நீந்தி — ஏரி நடுவிலிருக்கும் திட்டிலிருந்து பூப் பறித்து வந்து அய்யனார் சாமிக்கு முதலில் வந்து யாரால் போட முடியும் என்று பேசிக் கொண்டிருக்கிறார்கள்" என்று ஒருத்தி விளக்கினாள் முத்தம்மைக்கு.

நடு மடையிலிருந்து ஏரி நடுவிலிருந்த திட்டு ஏறக் குறைய அரைக் கல் தூரத்திலிருக்கும். அந்த மேட்டில் தங்க அரளி மரங்கள் கொள்ளையாகப் பூத்துக் கிடக்கும். அங்கு போவது சாத்தியமல்ல.

"ஏன் முடியாது? பொல்லாத நீச்சல்" என்றாள் முத்தம்மை.

"கேட்டீங்களா? என்ன பந்தயம்?"

"தோற்றவர்கள் ஒவ்வொருவரும் ஒரு தேங்காய் வாங்கி அய்யனாரப்பனுக்கு

## ஓட்டமும் - திண்டாட்டமும்!




உடைத்துவிட்டு ஒரு மூடியை ஜெயித்தவர்களுக்குக் கொடுக்க வேணும். அவ்வளவுதான்" என்றான் பந்தயப் பேச்சை ஆரம்பித்தவன்.

"ஒன்று, இரண்டு, மூன்று...."

எல்லோரும் தொபுக்கென்று எட்டிக் குதித்து நீந்தினார்கள்.

ஒருவன் பத்தடி தூரத்துக்குப் போனவுடனேயே திரும்பி வந்து விட்டான். அதற்கு அடுத்தபடி இன்னொருவன் திரும்பினான். மூன்று பேர் நீந்தினார்கள். மருதப்பன் நீச்சல் வேகமாக இருந்ததால் அவன் மற்ற இருவரையும் விட எட்டிப் போய்க் கொண்டிருந்தான். மூன்றாமவன் திட்டுக்குப் பாதி தூரம் போனதும் திரும்பி விட்டான்.

இப்பொழுது பந்தயத்தில் நீந்துகிறவர்கள் மருதப்பனும் முத்தம்மையும்தான்.

இதற்குள் திட்டில் ஒருவர் ஏறித் தங்க அரளிப் பூவை ஓடியோடிப் பறிப்பதைக் கண்டார்கள் கரையில் நின்றவர்கள்.

அது முத்தம்மைதான்!

தங்க அரளிப் பூக்களைப் பறித்து மடியில் கட்டிக் கொண்டு திரும்பிப் பார்த்தாள் முத்தம்மை. அப்போதுதான் திட்டைப் பிடித்தான் மருதப்பன். அவன் சோர்ந்து போனதற்கு அறிகுறியாகக் கரையில் ஏற முடியாமல் திணறினான். முத்தம்மை ஓடி அவனைப் பிடித்துத் திட்டில் ஏற உதவினாள்.

"என்ன அத்தான்!...."

"என் வலது கை மூட்டில் வலிக்கிறது. கை சுளுக்கிவிட்ட மாதிரி தெரிகிறது" என்று கூறிச் சாய்ந்தான் மருதப்பன்.

> உன்னுடைய விடுதலையை மட்டும் நாடிப் போனால் நீ நரகத்துக்குத்தான் போவாய்! பிறருடைய விடுதலைக்கு வழி தேடும்போதுதான் நீ பரதத்துவத்தைப் பெறுவாய்! சுய முக்தியிலுள்ள ஆர்வத்தைக் கொல். அதுவே சாதனைகளிலெல்லாம் பெரிய சாதனை.
>
> —ஸ்வாமி விவேகானந்தர்

அவன் அருகில் மண்டியிட்டு உட்கார்ந்து முந்தானையைப் பிழிந்து விட்டு அதைக் கொண்டு அவன் முகத்தைத் துடைத்தாள்.

"அத்தான் கண்ணைத் திறவேன்; எனக்குப் பயமாக இருக்கிறது."

"எனக்குக் களைப்பாக வருகிறது. கொஞ்ச நேரம் இப்படி இருந்தால் சரியாகப் போய் விடும்." அவனுக்குப் பெருமூச்சு எடுத்தது.

கரையில் இருந்தவர்கள், அவர்கள் ஏன் திரும்பி வராமல் அங்கேயே இருக்கிறார்கள் என்பது தெரியாமல் திகைத்தார்கள். மருதப்பன் படுத்துக் கிடப்பதும் முத்தம்மை அவன் அருகில் உட்கார்ந்திருப்பதும் தெரிந்தது. அவனுக்கு மயக்கம் வந்து விட்டதோ என்று பயந்தார்கள்.

'சரி, பானைத் தெப்பம் கட்டிப் போய் அதில் அவனைக் கொண்டு வர வேண்டியது தான்' என்று பேசிக் கொண்டார்கள். இதற்குள் கிராமத்துக்குச் செய்தி எட்டவே மருதப்பனின் தாயும் தகப்பனும் அலறியடித்துக் கொண்டு ஓடி வந்தார்கள்.

திட்டில் முத்தம்மை மிகவும் பயந்து போய் விட்டாள். "நான் ஒரு யோசனை சொல்லுறேன். கேக்கிறியா அத்தான், நான் உன்னை முதுகிலே சுமந்து கொண்டு போயிடறேன். காத்து கரையைப் பார்த்துத்தானே அடிக்கிறது?" என்றாள்.

ஒன்றும் பேசவில்லை மருதப்பன்.

மீண்டும் மேலாக்கை வரிந்து கட்டினாள் முத்தம்மை. அவனைத் தூக்கித் தண்ணீருக்குள் மெதுவாக இறக்கி அவனது வலது கையால் தன் வலது தோளைப் பற்றிக் கொள்ளச் செய்தாள். முத்தம்மை அவனையும் சேர்த்து இழுத்துக் கொண்டு வேகமாக நீந்தினாள். காற்று வசமாக அடித்ததால், நீச்சல் வசதியாக இருந்தது.

அவள் கரையைச் சேர்ந்ததும் நாலைந்துபேர் அவளையும் மருதப்பனையும் பிடித்துக் கரையேற்றினார்கள். மருதப்பன் கரையில் சோர்ந்து விழுந்து விட்டான். ஒரு கட்டிலில் அவனைப் படுக்கச் செய்து கிராமத்துக்குத் தூக்கிக் கொண்டு ஓடினார்கள். முத்தம்மையைத் தெய்வானை மிகவும் கடிந்து கொண்டாள்.

முத்தம்மை பதில் ஏதும் பேசவில்லை. தலையைக் கவிழ்ந்த வண்ணம் திண்ணையில் உட்கார்ந்திருந்தாள்.

அன்று மாலை. முருகையன் டவுனுக்குப் போய் வக்கீலைப் பார்த்துப் பேசிவிட்டுத் திரும்பி வீடு வந்து சேர்ந்தான். நடந்த சேதியைக் கேட்டுத் தன், மகளைக் கண்டிப்பதா அல்லது பாராட்டுவதா என்று தெரியாமல் திண்டாடினான். "முத்தன் நன்றி கெட்டவன். அவன் இதையெல்லாம் மறந்து விடுவான்" என்று சொன்னான் முருகையன்.

அப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும் போது, முத்தனும், அவன் மனைவியும் அங்கு எதிர்பாராத விதமாய்த் தோன்றினார்கள். "நீ நினைப்பதைப் போல் நான் நன்றி கெட்டவன் இல்லை, முருகையா. நான் நன்றி உள்ளவன் என்பதைச் சொல்லிக் கொள்ளத் தான் வந்திருக்கிறேன். உங்கள் மகள் முத்தம்மையை இன்னமும் சிறியவள் என்று நெனச்சுக்கிட்டிருக்கப்படாது. அவள் ஓர் அதிசயப் பிறவி. என் மகனைக் காப்பாற்றிக் கரை சேர்த்தாள். அதற்காக உனக்கு நான் என்றென்றும் கடமைப்பட்டவன். நீ சொல்ற படி கேட்கத் தீர்மானித்து விட்டேன்" என்றான்.

இயற்கையாகவே இளகிய மனசு படைத்த முருகையன் மேலும் வீம்பு பிடிக்க விரும்பாமல் தெய்வானையின் முகத்தைப் பார்த்தான்.

"சரி. மற்றது இருக்கட்டும். நாம் போய் மருதப்பனைப் பார்த்து வருவதில் தவறு இல்லையே!" என்றாள் தெய்வானை.

முத்தம்மையும் பெற்றோர்களோடு போனாள் முத்தன் வீட்டுக்கு. அந்த வீட்டு வாசல்படியை மிதிக்கும் போது அவளை அறியாமல் உடம்பு புல்லரித்தது. அவளைக் கண்ட மருதப்பனின் கண்களில் நீர் துளித்தது.

"உன் மகளுக்குக் கண் இட்டி விழப் போகுது. கழித்துப்போடு" என்று தெய்வானையிடம் ஒருத்தி சொன்னாள். தெய்வானைக்கு உள்ளுக்குள் தன் மகளைப் பற்றிச் சொல்ல முடியாத பெருமை ஏற்பட்டது.

இரண்டு குடும்பங்களுக்குள்ளும் முறிந்த உறவு கூடிற்று. முருகையன் முத்தனை மனதார மன்னித்து விட்டான். முத்தன் வழக்கைப் பற்றியும் பணத்தைப் பற்றியும் இனிப் பேசப் போவதே யில்லை என்று சொல்லி விட்டான்.

மருதப்பனுக்கும் முத்தம்மைக்கும் விமரிசையாக மூன்றுநாள் கலியாணம் நடந்தது.

மருதப்பனும் முத்தம்மையும் தனிமையை நாடிய வேளையிலே, "நான் உனக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்றி விட்டேன், தெரிந்து கொள்!" என்றான் மருதப்பன்.

"என்ன?"

"முந்நூறு ரூபாய்க்காகக் கோர்ட்டுக்குப் போன என் அப்பா மனசை மாற்றி உன்னைக் கல்யாணம் செய்து கொள்கிறதாக நான் சொல்லலையா? அதனால் நீச்சல் போட்டியில் தோற்றதாக நாடகம் ஆடி என்னைத் தூக்கிக் கொண்டு நீந்தி வரும்படி உன்னைச் செய்து விட்டேன். இல்லாவிட்டால் எங்க அப்பாவை எப்படி வழிக்குக் கொண்டு வர முடியும்?"

"அதுதானே பார்த்தேன்! அத்தான், நீந்துகிறதுக்கு முன்னால் நேர்ந்து கொண்டேன். நான் ஜெயித்தால் அய்யனார் சாமிக்குப் பூஜை போடுறேன்னு. இப்போது ஜெயித்தது நீங்களா, இல்லை, நானா?"

"எப்படியானாலும் ஜெயித்தது நீதான். நீதான் பூஜை போடணும். இதிலே தோற்றவங்கதான் ஜெயித்ததாக அர்த்தம்" என்றான் மருதப்பன் வெற்றிக் களையுடன்.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.



துள்ளி
விளையாடும்
பொழுதோ



ஓய்வு பெறும்
பொழுதோ ...
அவர்கள்
எப்பொழுதும்
வளர்ந்து
கொண்டே
இருக்கிறார்
கள்!



# கல்ஸாஞ-டி

வைட்டமின் தீவிரச் சேர்க்கையுடைய கால்சியம்

GR.AD.60. TAM.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

நம் ராகினியிடமிருந்து மலரும் இரகசியம்:

# 'மேனி யெழிலுக்கு ஆதரவு லக்ஸ் சோப்!'



'சிந்தைகவரும்
வண்ணங்களுடன்
சொந்தங்கொள்ளும்
சோப்பு!'

என்கிறார் அழகுநட்சத்திரம்
ராகினி.




சினிமா நட்சத்திரங்களின் தூய, மெல்லினம் அழகுசாதன சோப்

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.

LTS. 116-X29 TM